# மறைந்திருக்கும் உண்மைகள்

ஓஷோ

தமிழில்
கவிஞர் **புவியரசு**

கண்ணதாசன் பதிப்பகம்

12, கண்ணதாசன் சாலை
தியாகராயநகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 433 26 82

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 210

முதற் பதிப்பு : ஜனவரி, 1999



பதிப்பாசிரியர் : **காந்தி கண்ணதாசன்**

**Price: Rs.87/-**

**MARAINTHIRUKKUM UNMAIGAL - Tamil**

Originally published in English as 'Hidden Mysteries' under the author name of 'Bhagwan Shree Rajneesh'

- Translated by : Kavingar Puviarasu
- Co-ordination by : Swami Amano Manish
- First Edition : January - 1999
- Copies : 3000
- Publishing Editor : GANDHI KANNADHASAN
- Published by : KANNADHASAN PATHIPPAGAM
  12, Kannadhasan Salai
  T.Nagar, Chennai - 600 017
  Phone: 4332682.

E-mail: kanna @ md2.vsnl.net.in
OUR WEBSITE: http://www.indian-publishers.com.

*Laser Typeset at: Sumathy Lasers, Chennai-16.*
*Printed at: United Bind Graphics Chennai-4. Ph: 4984693.*

# ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள் :
"வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்."



ஒவ்வொருவரும்,
தாம் செய்யும் தொழில்
எதுவாக இருந்தாலும்
அதை நேசிக்கும் எளிய கலையைக்
கற்றுக் கொள்ள வேண்டும்.
அதைப் பிறர் மதிக்க வேண்டும்
என்று எதிர்பாராமல்,
அதை மகிழ்வோடு செய்து வந்தால்,
இந்த உலகம்,
இன்னும் மகிழ்ச்சி நிறைந்ததாக,
அழகு மிகுந்ததாக,
ஒரு திருவிழாப் பிரதேசமாக மாறிவிடும்.

**- ஓஷோ**

# அறிமுகம்

எந்த இரகசியமும் நிரந்தர
ரகசியம் அல்ல.
மனித குலத்தின் பெருமளவு நன்மைக்காக,
ஒவ்வொரு இரகசியமும் சரியான நேரம்,
சரியான இடம்,
சரியான மனிதருக்காகக்
காத்திருக்கின்றது.
அறிவியல் உலகிலும் இப்படித்தான்;
சமய உலகிலும் இப்படித்தான்.

காலவெளி நெடுஞ்சாலையில்
இதற்குநேர் மாறாகவும் நிகழக் கூடும்.
புராதன ஞானங்கள்
மெல்ல மங்கி மறைந்து
மர்மமாய், சடங்குகளாய்
உருமாறிவிடுவதும் உண்டு.
வாழ்வின் சுழல்வட்ட
இயல்புதான் இது, என்று
விவரமறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

அகநிலை அறிவியல் பற்றியும்,
உள்ளார்ந்த மனித விஞ்ஞானம் பற்றியும்
கீழை நாடுகளில் நடந்துள்ள
ஆய்வுகளின் அளவையும்,
தரத்தையும் பார்க்கும்போது
மனம் திகைத்துப் போய்விடுகிறது.

ஒருவர் பின் ஒருவராக,
உள் உலகம் உணர்ந்த மகா ஞானிகள்,
பிரக்ஞையின் புதிய புதிய சிகரங்களை
எட்டிப் பிடித்துக் கொண்டே
இருந்தார்கள்.
அகநிலையின் எதார்த்தத்தையும்,
இறுதி அதி பிரக்ஞை பற்றிய உண்மை இயல்பையும்
மக்கள் உணர்ந்து கொள்ள,
ஏராளமான புதிய கண்டுபிடிப்புகளும்
உத்திகளும், செயல்முறைகளும்
வளர்ந்து கொண்டே இருந்தன.

மெல்ல மெல்ல அந்த உத்திகளும்,
அந்த விஞ்ஞானமும்,
அவற்றின் குறியீடுகளும்,
அவற்றின் அர்த்தங்களும்,
பயன்பாடும் மறைந்தன —
அவற்றின் இடத்தில்
மூட நம்பிக்கைகளும், சடங்குகளும்
காலூன்றி நிற்க ஆரம்பித்து விட்டன.

அந்த இரகசியங்களை யெல்லாம் வெளிப்படுத்தி,
அவற்றின் முக்கியத்துவம்,
உட்பொருள், பயன்படுத்தும் முறை
ஆகியவற்றை உணரச் செய்ய
இந்த இருபதாம் நூற்றாண்டில் ஒரு புத்தர்,
மகாஞானி அவதரிக்க வேண்டியதாயிற்று.

இந்த நூலில், ஓஷோ,
ஆலயங்களின் அடிப்படைக் காரணம்,
தேவை, உருவ வழிபாட்டின் இரசவாதம்,
புனித தலங்களில்
பயன்படுத்தப்பட்டுள்ள வழிமுறைகள்,
நெற்றித் திலகத்தின் பின்னாலுள்ள
புறநிலை உண்மை போன்ற
பலவற்றின் மீது
புத்தொளி பாய்ச்சுகிறார்.

கடைசியாக,
சீர்கெட்டுப் போய்,
தவறாகப் பயன்படுத்தப்பட்டு வரும்
சோதிடம் பற்றியும் ஓஷோ பேசுகிறார்.
சோதிடத்தின் ஒரே நோக்கம்
பரம்பொருளோடு ஒன்றுதல்,
என்பதை அவர் வலியுறுத்துகிறார்.

இரகசிய மனிதராகிய
ஓஷோவையும்,
இந்த அபூர்வ நூலையும் படித்து மகிழ,
திறந்த மனதோடு
வருமாறு அழைக்கிறேன்.

– சுவாமி யோக பிரதாப் பாரதி



# தேடல்



அன்பிற்குரிய ஓஷோ,

*ஆலயங்கள், தீர்த்த யாத்திரை ஸ்தலங்கள், நெற்றியில் சின்னங்கள் தரித்தல், விக்கிரக ஆராதனை, நந்தவனம், வேத மந்திர உச்சாடனம், சமய வேதங்கள், சடங்குகள், சோதிடம், நல்லதும் தீயதுமான சகுனங்கள் ஆகிய பலவற்றிற்கும் ஒரு காலத்தில் அர்த்தங்கள் இருந்தன. அவற்றையெல்லாம் அருள்கூர்ந்து எங்களுக்கு விளக்கிச் சொல்லுங்கள்.*

*அவை யெல்லாம் ஆன்ம ஒழுக்கத்தின் வெளிக் கருவிகளா, கால வெள்ளத்தில் முற்றிலும் மறைந்து போனவற்றை நினைவூட்ட ஏற்பாடு செய்யப்பட்ட வெளித்தூண்டுதல்களா, அல்லது, அவை, உள்ளார்ந்த மதிப்பீடுகள் கொண்டவையா? இவற்றை நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்.*

*மறுபடியும் அவற்றை யெல்லாம் பயன்படுத்தும் காலம் ஒன்று வருமா?*

**ஓஷோ:** நம்மிடத்தில் ஒரு சாவி இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அந்தச் சாவியிலிருந்து அதன் நோக்கத்தை நாம் நேரடியாக அறிந்து கொள்ள முடியாது. அதன் மூலம், ஒரு பெரும் கருவூலத்தைத் திறந்து காணலாம் என்பதையும் கற்பனை செய்ய வழியில்லை. செல்வம் இருப்பதற்கான அடையாளம் எதுவும் சாவியில் இல்லை.

சாவியே ஒரு பூட்டாக மூடிக்கிடக்கிறது!

அதைத் துண்டு துண்டாக உடைத்தாலும், அதன் உலோகம் என்ன என்பது தெரியுமே தவிர, அதனால் வெளிப்படப் போகும் செல்வம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள முடியாது. அவ்வாறு, எந்த விதமான குறிப்பும் இல்லாத சாவி ஒன்றை, நெடுங்காலம் பாதுகாத்து வைத்திருப்பது, வாழ்வின் வெறும் சுமையாகவே ஆகிவிடும்.

கருவூலக் கதவுகளைத் திறக்க வல்ல சாவிகள் இன்றும் இருக்கவே செய்கின்றன. ஆனால், நமக்கு அந்தக் கருவூலமும் என்ன வென்று தெரியாது; அந்தப் பூட்டுகள் பற்றியும் எதுவும் தெரியாது. இது ஒரு இழப்புத்தான்.

அப்புறம் நம் கையில் மிஞ்சியிருப்பதுதான் என்ன? இருக்கும் சாவியை எவ்வாறு ஒரு திறவுகோல் என்று சொல்ல முடியும்? எதையாவது ஒன்றைத் திறந்தால்தான் அது திறவுகோல்.

அது ஒரு காலத்தில் பல செல்வங்களைத் திறந்து காட்டியது. ஆனால், இன்று அது எதையும் திறப்பதாக இல்லை. வெறும் சுமையாக மாறிவிட்டது. என்றாலும், அதைத் தூக்கி எறிந்துவிட வேண்டும் என்ற எண்ணம் நமக்கு ஏற்பட்டுவிடவில்லை.

நமது ஆழ்மனதில், அது, ஒரு வித நறுமணத்தைப் பரவ விட்டிருக்கிறது. நெடுங்காலமாக நம்முள் தங்கியிருக்கும் நறுமணம் அது.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், இந்தச் சாவி பல பூட்டுகளைத் திறந்தது; பல செல்வங்கள் நமக்குக் கிடைத்தன. அந்த இனிய நினைவுகள் நமது ஆழ்மனதில் தங்கியிருப்பதால்தான், அந்தச் சாவியின் பாரத்தை இன்றும் நாம் தாங்கிக் கொண்டிருக்கிறோம்.

அது பயனற்றது என்பதை எவ்வளவுதான் அழுத்தமாகச் சொல்லி நம்மை நம்ப வைக்க முயன்றாலும், அதைத் தூக்கி எறியும் தைரியம் நமக்கு வரவே இல்லை. நமது இதயத்தின் ஏதோ ஒரு மூலையில், ஒரு நம்பிக்கை இன்னும் ஒட்டிக் கொண்டுதான் இருக்கிறது. ஏதாவது

ஒரு பூட்டை, என்றாவது ஒருநாள் அது திறக்கக்கூடும் என்ற நம்பிக்கை!

சான்றாக, ஆலயங்களை எடுத்துக் கொள்ளுங்கள்... கோயில்களைக் கட்டாத இனமே உலகில் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும் - அது மசூதியாகவோ, குருத்துவாராவாகவோ, மாதா கோயிலாகவோ, அல்லது வேறு எதுவாகவோ இருக்கட்டும்.

இன்று, பல இனங்களையும் பற்றிக் கற்றுக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது. ஆனால், சில இனங்களைப் பற்றி அறிய எந்த வாய்ப்பும் இல்லை. அவை இப்போது இல்லை. சில இனங்கள் இருந்தது கூட நமக்குத் தெரியாது. அதனால், அவற்றிடமிருந்து எதையும் அறிய வழியில்லை.

விசித்திரமான மனநிலை கொண்ட சில அபூர்வ மனிதர்களின் கற்பனையின் விளைவு அல்ல கோயில்கள். அதன் வேர்கள் மனித மனதின் அடியாழத்தில் எங்கோ பதிந்திருக்கிறது.

அவன் வெகுதூரத்தில், காட்டின் நடுவிலோ, மலையிலோ, குகையிலோ, ஆற்றங்கரையிலோ வாழ்ந்திருக்கலாம். அவன் எங்கு வாழ்ந்திருந்தாலும் அங்கே கோயில் மாதிரி ஏதாவது ஒன்றை உருவாக்கவே செய்தான். அவனது பிரக்ஞையிலிருந்து ஏதோ ஒன்று வந்து கொண்டே இருந்தது. குருட்டுத்தனமான போலித்தனம் அதில் இல்லை. மற்றவற்றைப் பார்த்துக் கட்டிய கோயில்களும் அல்ல அவை. அவை வெவ்வேறு அமைப்புகளும், வடிவங்களும் கொண்டவை. எப்போதும் அவை இருந்தே வந்திருக்கின்றன.

கோயிலுக்கும் மசூதிக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. அவற்றின் ஒழுங்கமைப்பு, வடிவமைப்பு ஆகியவை, முற்றிலும் மாறுபடுகின்றன. ஆனால், அவற்றை உருவாக்கிய மனிதர்களின் ஆசை, உள்ளார்ந்த உந்துதல் எல்லாம் ஒன்றேதான். மனிதன் எங்கேயிருந்தாலும், மற்றவர்களோடு அவன் தொடர்பற்றவனாக இருந்தாலும், அவனது பிரக்ஞைப் பிரதேசத்தின் ஏதோ ஓரிடத்தில், அதே வித்து மறைந்திருக்கவே செய்கிறது.

இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சமும் இருக்கின்றது. பல்லாயிரம் ஆண்டுகள் கடந்து சென்ற பின்னும், பூட்டுகளைப் பற்றியும், சாவிகளைப் பற்றியும், மறைந்து கிடக்கும் செல்வங்கள் பற்றியும் நமக்கு எதுவும் தெரியாவிட்டாலும், பழைய நினைவுகள் நம் நெஞ்சில் மிதப்பதால், அந்தச் சாவிகளை நாம் சுமந்து கொண்டே இருக்கிறோம்.

இதற்கு எத்தனையோ தாக்குதல்கள், எதிர்ப்புகள், எல்லாப் பக்கங்களிலுமிருந்து வந்து கொண்டிருந்தாலும் - நவீன அறிவு ஜீவிகள் இவற்றை ஒப்புக் கொள்ள மறுத்தாலும் - மனித இதயம், இன்னும் அந்தச் செல்வத்தின் நினைவில், அதன் கவர்ச்சியில் ஆழ்ந்துதான் இருக்கின்றது. இன்றைக்கு அதன் வழிமுறைகள் எதுவும் அவனுக்குத் தெரியாது என்றாலும்கூட, திறக்கப்படக்கூடிய பூட்டுகள் ஒரு காலத்தில் இருந்தன என்ற நினைவு, அவனது அடிமனதின் ஆழத்தில் எதிரொலித்துக் கொண்டுதானிருக்கின்றது.

இந்த நினைவு ஏன் மனிதனின் அடிமன ஆழத்தில் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றது? நாம் யாரும் இந்தப் பூமிக்குப் புதியவர்கள் அல்ல என்பதுதான் அதன் காரணம்.

நாம் திரும்பத் திரும்ப இங்கே பிறந்து கொண்டே வந்திருக்கிறோம். நாம் இல்லாத காலமே இல்லை. கடந்து போன நாட்கள் நம் நினைவில் நிலைப்பதில்லை. நமது ஆயிரக்கணக்கான நினைவு அடுக்குகளுக்குள் பழைய நாட்கள் மறைந்து போய்விடுகின்றன.

பழைய நாட்களில், ஓர் ஆலயத்தின் ஆழ்ந்த மர்மமும், நமது உள்ளறைகளைத் திறந்த அனுபவமும் நமக்கு இருந்திருந்தால், நமது அடிமன ஆழத்தில், அந்த நினைவு நம்மை இன்றும் உறுத்திக் கொண்டேதான் இருக்கும். அறிவு ஜீவி அது இல்லையென்றே மறுப்பதால், அந்த நினைவுகளின் அடியாழத்திற்கு அவரால் சென்று பார்க்க முடிவதில்லை. அந்த நினைவுகளை மீட்டெடுக்க அவரால் முடியாமலே போய் விடுகிறது.

எவ்வளவோ தடைகள் இருந்தாலும், அவை அர்த்தமற்றதாய்த் தோன்றினாலும், ஏதோ ஒன்று அழுத்தமாய் மனதில் பதிந்திருக்கிறது. அதை அகற்ற முடியாது. அது புதிய வடிவங்களை எடுக்கின்றது - என்றாலும், அது தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றது. எல்லையற்ற காலப்பெருவெளியில் பிறப்புகள், இறப்புகளாய்த் தொடரும் நமது நெடும் பயணத்தில் நாம் அதை இன்று நினைவு கொள்ள முடியாவிட்டாலும் கூட, அந்த அடிமன உந்துதல் இருந்து கொண்டேதான் வருகிறது.

அவற்றிற்கான புறப் பயன்பாடும், அது முடிவுக்கான ஒரு வழி என்பதும், மறந்து போனாலும் கூட, அவற்றிற்கான ஆழமான முக்கியத்துவமும், நோக்கமும் இன்னும் இருக்கவே செய்கின்றன.

கோயில்கள் கட்ட வேண்டும் என்ற உலகளாவிய தவிப்பு, மனிதனிடம் மட்டும் காணப்படும் உள்ளார்ந்த பண்பு. விலங்குகள் தம் இருப்பிடங்களை அமைத்துக் கொள்கின்றன. பறவைகள் கூடுகள் கட்டிக் கொள்கின்றன. ஆனால், அவை கோயில்கள் கட்டுவதில்லை. மனிதனுக்கும் விலங்கிற்கும் உள்ள பிரதான வேறுபாடுகளில் ஒன்று இது. மனிதன் கோயில் கட்டும் விலங்கு! வேறு எந்த விலங்கும் கோயில் கட்டுவதில்லை.

ஒன்று, தனக்கான வாழிடத்தை அமைத்துக் கொள்வது இயல்பான பண்பு. ஒவ்வொரு விலங்கும் அதைச் செய்து கொள்கிறது. பறவைகளும், விலங்குகளும், புழுப்பூச்சிகளும் கூட அவ்வாறே செய்து கொள்கின்றன. ஆனால், தெய்வத்திற்கு ஒரு வீடு சமைக்க வேண்டும் என்பது, மனிதனிடம் மட்டுமே காணப்படும் முக்கியமான பண்பாகும்.

தெய்வத்தைப் பற்றிய ஆழ்ந்த விழிப்புணர்வு இல்லாமல் ஆலயங்கள் உருவாகியிருக்க முடியாது. அந்த விழிப்புணர்வு போய்விட்டது. ஆனால், கோயில்கள் மட்டும் நின்று கொண்டிருக்கின்றன. ஆழ்ந்த ஆன்ம அனுபவம் இல்லாமல் ஆலயங்கள் உருவாகியிருக்க முடியாது என்பது மட்டும் உறுதி.

நீங்கள் விருந்தினர் விடுதிகள் சமைக்கிறீர்கள், விருந்தினர்கள் வந்துபோய்க் கொண்டிருப்பதால். விருந்தினரே இல்லையென்றால் வீண் செலவு செய்து விடுதிகள் சமைப்பீர்களா? விருந்தினர் இல்லாமற் போய்விட்ட காலத்திலும், விடுதிகள் நிற்பது போலவே, இப்போது ஆலயங்கள் நின்று கொண்டிருக்கின்றன.

அதனால், கோயில்கள் கற்பனை மீது கட்டப்பட்டவை அல்ல; வாழ்வனுபவத்தால் உருவாக்கப்பட்டவை. பூமியின் மீது தெய்வ அவதாரம் நிகழ்ந்ததன் காரணமாகவே, பூமி முழுவதிலும் மூலை முடுக்குகளில் எல்லாம் கடவுளின் இருப்பிடமாகக் கோயில்கள் கட்டப்பட்டன. யாரை வரவேற்பதானாலும் அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்துதானே ஆகவேண்டும்?

அதை இப்படிப் புரிந்து கொள்ளலாம்: வானொலி அலைகள் நம்மைச் சுற்றிலும் போய்க் கொண்டுதான் இருக்கின்றன, என்றாலும் வானொலிப் பெட்டியில்தான் அந்த அலைகளை உள்வாங்கி வெளிப்படுத்த முடியும். நாளை மூன்றாவது உலகப்போர் மூண்டுவிடுவதாக வைத்துக் கொள்வோம். எல்லாத் தொழில் நுட்பங்களும் அழிந்து போய்விடும். ஆனால், ஒரே ஒரு வானொலிப்

பெட்டி நம்மிடம் அழியாமல் தங்கி விடுகிறது என்றால், அதை வைத்துக் கொண்டு எதையும் கேட்க முடியாது. ஏனென்றால் வானொலி நிலையங்களே இரா. என்றாலும், நாம் அதைத் தூக்கி எறிந்துவிட மாட்டோம். மனம் வராது!

பல தலைமுறைகளாக அது நம்மிடமே இருக்கும். அது என்ன, எதற்கு என்பதுகூடத் தெரியாமல் போய்விடும். யாராவது கேட்டால், 'என்னவோ தெரியவில்லை. எங்கள் முன்னோர்கள் காலம் காலமாகப் பாதுகாத்து வைத்திருந்தது. நாங்களும் வைத்திருக்கிறோம், என்றுதான் சொல்வோம்.

முன்னோர்களாவது அது என்னவென்று சொல்லிவிட்டுப் போயிருக்கலாம். அவர்கள் அதையும் செய்யவில்லை. அது பயனுள்ளதாகவும் நமக்குத் தோன்றவில்லை. அதே சமயம் கைகழுவி விடவும் மனம் வரவில்லை. வானொலிப் பெட்டியைப் பகுதி பகுதியாகப் பிரித்துப் பார்த்தாலும் ஒன்றும் தெரிவதில்லை. ஒரு காலத்தில் அது பேசியிருக்கிறது; பாடியிருக்கிறது; எங்கிருந்தோ அனுப்பப்பட்ட ஒலி அலைகளை வாங்கி, கேட்பவர்களுக்கு வழங்கியிருக்கிறது. ஆனால், இன்று ஒலியற்றுக் கிடக்கிறது.

கோயில்களும் அப்படித்தான். தெய்வ சக்தி எங்கும் இருந்தாலும், மனிதர்கள் எங்கும் இருந்தாலும் சில அபூர்வமான கணங்களில்தான் சிலருக்கு அந்த அனுபவம் வாய்த்திருக்கிறது. கோயில்கள், அந்த ஆற்றலை உள்வாங்கிச் சேமித்து வைத்திருக்கும் மையங்களாகவே அமைக்கப்பட்டன. அங்கு செல்வதன் மூலம் எளிதில் தெய்விகத்தோடு தொடர்புறுத்திக் கொண்டு, தம் ஆன்மிக அனுபவ தளத்தை உயர்த்திக் கொள்வதற்கு எளிதான வாய்ப்பு அமைந்து விடுகிறது. இந்த நோக்கத்தோடுதான் கோயில்கள் முன்பு கட்டப்பட்டன.

வெவ்வேறு பிரிவினர் வெவ்வேறு அமைப்பில் கட்டிக் கொள்கின்றனர். அதனால், விளைவுகள் அதிகமாக வேறுபடுவதில்லை. பல்வேறு வானொலித் தயாரிப்பாளர்கள் பல்வேறு வடிவங்களில், நிறங்களில் வானொலிகளைத் தயாரித்து விற்கிறார்கள். அவற்றில் வெவ்வேறு வசதிகள் கூட இருக்கின்றன. என்றாலும் எல்லாவற்றின் நோக்கமும் ஒன்றுதானே?

மூன்று அல்லது நான்கு விதங்களில்தான் இந்தியக் கோயில் கட்டப்படுகின்றன. மற்றவை எல்லாம் இவற்றின் போலிகள். கோயிலின் மேற்பகுதி அரைக் கோள வடிவம், வானத்தின் வடிவம்.

அதற்கு ஒரு உள்நோக்கம் உண்டு. நான் வெட்ட வெளியில் அமர்ந்து, 'ஓம்' என்று மீண்டும் மீண்டும் சொன்னாலும், என் குரல் காற்றிலே கரைந்து காணாமல் போய்விடும். தனிமனிதக் குரலின் சக்தியை அகன்ற வான்வெளி விழுங்கி விடுகிறது. அதன் அதிர்வுகளையோ, எதிரொலியையோ என்னால் உணர முடிவதில்லை - என் வழிபாடு முழுவதும் அகன்ற வான்வெளியில் காணாமல் போய்விடும்.

அரைக் கோள வடிவம், நம் வழிபாட்டை நம்மீதே திரும்ப எதிரொலிக்கும்! வானத்தின் சிறிய அரைக் கோள வடிவம் அது. நாலா பக்கங்களிலும், வானம் கீழே பூமியைத் தொடுவது போலவே, அதுவும் அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் கீழ் அமர்ந்து எழுப்பப்படும் மந்திர உச்சாடனம் வீணாய்ப் போய் விடுவதில்லை, வெட்ட வெளிபோல. திரும்பவும் உச்சரித்தவருக்கே போய்ச் சேர்ந்து விடுகிறது! அதே சமயம், அவரது உச்சாடனம் ஒலிப்பெருக்கம் பெற்றும் விடுகிறது. கல்லும் கூட ஒலியைச் சிறந்த முறையில் ஒத்ததிர்வு செய்யும் என்பது பின்னாளில் கண்டுபிடிக்கப்பட்டது.

அஜந்தா குகையில் ஒரு புத்த மண்டபம் இருக்கிறது. அதில் ஏற்படும் எதிரொலி தபேலாவைப் போலவே துல்லியமாய் ஒலிக்கிறது. அந்த மண்டபத்தின் கற்கள் மீது தபேலா வாசிப்பது போலவே நாம் வாசிக்கலாம். அதே ஒலியைக் கேட்கலாம்! சாதாரணக் கற்களுக்கு அந்த ஆற்றல் இல்லை. சில கற்கள் மட்டுமே, நுட்பமான ஒலியைச் சரியான அதிர்வுகளுடன் வெளிப்படுத்துகின்றன.

இதற்கெல்லாம் பின்னால் மறைந்திருக்கும் நோக்கம் என்ன?

ஆலயத்தின் அரைக் கோள வடிவத்தின் அடியில் அமர்ந்து எழுப்பப்படும் ஓங்கார ஒலியை அந்த அரைக் கோளம் எதிரொலித்து, ஓர் ஒலி வட்டத்தை உருவாக்குகின்றது. அந்த உருண்டை வடிவம்தான் அந்த ஒலிவட்டத்தை உருவாக்குகின்றது. அந்த ஒலி ஒரு பரவச அனுபவம். வெட்ட வெளியில் முழங்குவதால் அந்தப் பேரானந்த அனுபவம் கிடைப்பதில்லை.

அந்த ஒலிவட்டம் ஏற்படும் வேளையில், நீங்கள் கடவுள் முன் அமர்ந்து வழிபடும் சாதாரண பக்தராக அல்லாமல் அருள் பெறுபவராக மாறிவிடுகிறீர்கள்! வேறு வகையில் சொன்னால், உங்கள் பிரார்த்தனைக்குப் பலன் கிடைத்துவிட்டது என்று பொருள்! புனித அனுபவத்தின் ஒத்ததிர்வு உங்களுக்குள் பிரவேசிக்க ஆரம்பித்து விட்டது என்று பொருள்!

நாம் ஒலிக்கும் குரல் மானிடக் குரலாக இருந்தாலும், அது எதிரொலிக்கும்போது புதிய ஆற்றல் பெற்று புதுச் சக்தியுடன் நம்மில் பாய்கிறது.

மந்திர உச்சாடனத்தின் மூலமாக ஒலி வட்டங்கள் உருவாவதற்காகவே, ஆலயக் கூரைகள் அரைக் கோள வடிவில் அமைக்கப்பட்டன.

ஒருவர் அதன் கீழ் அமர்ந்து, பரிபூரண அமைதியுடன், மந்திரம் உச்சரிக்க, அந்த மௌனச் சூழலில், ஒலி வட்டங்கள் உருவாகத் தொடங்கிவிடும். உடனே, எண்ணங்கள் சட்டென நின்று போய்விடும்! ஒரு பக்கம் ஒலிவட்டம் உருவாகும். மறுபக்கம் சிந்தனை செத்துவிடும்!

ஆணும் பெண்ணுமாய் கூடிக் கலக்கும் கலவியின் போதும் சக்தி வட்டம் உருவாகிறதென்று நான் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். அப்படிப்பட்ட வட்டங்கள் உருவாகும் கணம், நமக்கு அதிபிரக்ஞையைச் சுட்டிக் காட்டி விடுகிறது.

பத்மாசனமிட்டும், சித்தாசனமிட்டும், புத்தரும், மகாவீரரும் அமர்ந்திருக்கும் கோலத்தைப் பாருங்கள். வட்டங்கள் வேறுவிதமாக உருவாவதை அவை சுட்டிக் காட்டுகின்றன. நமது இரண்டு பாதங்களும் ஒன்றுபடும்படி அமர்ந்து, நமது கைகளைக் கால்களின் மேல் வைத்துக் கொண்டால், நமது முழு உடலும் ஒரு வட்டத்திற்குள் செயல்பட ஆரம்பித்துவிடும்! அப்புறம் நமது உடலின் மின் சுழற்சி, வீணாகி வெளியேறி விடாமல், நமக்குள்ளேயே சுழல ஆரம்பித்துவிடும்; நமது மின் சுற்றுப் பாதை பூரணத்துவம் பெற்றுவிடும்.

இந்த மின் சுழற்சி முழுமை பெற்ற கணத்தில் சிந்தனை நின்றுவிடும். மின்சாரப் பொறியாளரின் மொழியில் சொன்னால், நமது மனதில் இரைச்சலிடும் சிந்தனைகள் இருப்பதன் காரணம், நமக்குள் ஒரு மின்சுழல் வட்டம் முழுமை பெறாததுதான்.

அந்த வட்டம் பூர்த்தியடைந்தவுடன், நமது உள்ளாற்றல் சமநிலை பெற்று, அமைதி அடைந்துவிடும். ஆகவே, ஆலயத்தின் அரைக் கோளக் கோபுரத்தைப் பயன்படுத்திக் கொண்டு, நமது உள்ளாற்றல் வட்டத்தை முழுமை பெறச் செய்வது, பெரிய செயல்முறையாகும். அந்த நோக்கத்திற்காகவே நம் கோயில் கோபுரங்கள் அவ்வாறு அமைக்கப்பட்டன. அதனால், அந்த அமைப்பு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

ஆலய வாசல்களில் பெரிய மணிகளும், சேகண்டிகளையும் நாம் பார்க்கிறோம். அவையும் அதே காரியத்திற்காகவே கட்டப் படுகின்றன.

எவ்வளவு அமைதியான சூழலில் நீங்கள் 'ஓம்' என்று முழங்கினாலும், உங்கள் கவனம் வேறு எங்கோதான் இருக்கிறது. ஆனால், மணியோசை உங்கள் கவனத்தை மீண்டும் உங்களிடமே திரும்பக் கொண்டுவந்து விடுகிறது. அதன் காரணமாக ஒலிவட்டம் உமக்குள் பூர்த்தியாகி, அதிர்வுகள் ஏற்பட்டு விடுகிறது. குளத்தில் கல்லெறிய, வட்ட வட்டமான நீரலைகள் தொடர்ந்து எழுவதைப் போன்றது அது.

திபேத்தியக் கோயில்களில், மணி, சேகண்டிகளுக்குப் பதிலாக கிண்ணம் போன்ற வடிவில் ஒரு உலோகப் பாத்திரம் இருக்கும். பல்வேறு உலோகங்கள் கொண்டு செய்யப்படுவது அது. அதற்குள் ஒரு மரக்குச்சி இருக்கும். அது ஏழுமுறை சுற்றி வந்து ஒரு முறை மணியடிக்கும். மணியடிக்கப்படும்போது அந்த அதிர்வுகள், 'ஓம் மணி பத்மே ஹும்' என்பது போல ஒலிக்கும், ஏழு முறை!

அந்தக் குச்சியைப் பிடித்துக் கொண்டு வேகமாக ஏழுமுறை சுற்றிவிட்டு, அதை வெளியில் எடுத்து விட்டாலும் கூட, 'ஓம் மணி பத்மே ஹும்' என்பது போன்ற ஒலி ஏழுமுறை ஒலிக்கும். இந்த ஒலி மெல்ல மெல்ல அடங்கிப் போகிற முறையில் ஒலித்தாலும் கூட மிக மெல்லியதாய் ஏழுமுறை ஒலிப்பதை நம்மால் கேட்க முடியும்.

அதேபோல, அரைக் கோள வடிவக் கூரையின் கீழ் அமர்ந்து, 'ஓம் மணி பத்மே ஹும்' என்று ஒலித்தால் அது எதிரொலிக்கும். உங்கள் உடலின் ஒவ்வொரு கண்ணறையும் ஆழமான ஒத்ததிர்வுடன், அந்த அதிர்வுகளை உள்வாங்கிக் கொள்ளும். சில வினாடிகளில் நீங்களும், கோயிலும், இல்லாமல் போய் விடுவீர்கள் - ஆற்றலின் சுழல் வட்டங்கள் மட்டுமே அங்கே எஞ்சியிருக்கும்!

ஒலி என்பது மின்சாரத்தின் ஒரு நுட்பமான வடிவம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இன்றைய அறிவியல் இதை ஒப்புக் கொண்டிருக்கிறது. சொல்லப் போனால், எல்லாமே மின்சாரத்தின் வடிவங்களே. ஆனால், இந்திய முனிவர்கள் ஒருபடி மேலே சென்று, மின்சாரம், ஒலியின் ஒரு வடிவம் என்று சொன்னார்கள்! ஒலியே ஆதாரம், மின்சாரமல்ல. அதனால்தான் அவர்கள் பரம்பொருளை 'சப்தப் பிரம்மம்,' அதாவது 'ஒலியே கடவுள்' என்று சொன்னார்கள்.

கீழைநாட்டுச் சிந்தனையாளர்களும், நவீன விஞ்ஞானிகளும் பெரிய அளவில் ஒத்த கருத்துடையவர்களாக இருக்கிறார்கள். எது முதலாவது என்பதில் மட்டுமே கருத்து வேறுபாடு. மின்சாரமே ஆதாரமானது என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். ஒலிச் செறிவுதான் மின்சாரத்தை உற்பத்தி செய்கிறது என்று முனிவர்கள் கூறுகிறார்கள். மிக விரைவில், இறுதி எதார்த்தமான சப்தப் பிரம்மத்தின் இயல்பு பற்றி, விஞ்ஞானம், ஆழமாகப் பார்க்கக் கூடிய வாய்ப்பு இருக்கிறது.

ஆலயத்தின் அரைக் கோள வடிவின் அடியில் எழும் ஒலியின் அனுபவத்தால் தான், முனிவர்களின் இந்தப் புரிதல் முளைத் திருக்கின்றது.

தியானிப்பவர், கோயிலில் அமர்ந்து, 'ஓம்' என ஒலிக்கும்போது, அவரும் கோயிலும் மறைந்துவிட, மின்சாரம் மட்டுமே மிஞ்சி நிற்கின்றது. இந்த முடிவு, எந்த ஆய்வுக் களத்தின் மூலமாகவும் எட்டப்பட்ட முடிவு அன்று. இப்படிச் சொன்னவர்களுக் கெல்லாம் ஆய்வுச் சாலைகளே கிடையாது. ஆலயங்களே அவர்களின் ஆய்வுக் களங்கள். அவர்கள் ஒலியில் ஆரம்பித்தாலும்கூட, முடிவில் மிஞ்சி நின்றது மின்சாரமே என்பதை அவர்கள் அங்கே அனுபவபூர்வமாக உணர்ந்தார்கள்.

ஒலியின் அந்த நிலைமாற்றத்தை உணர்வதற்காகவே அந்த அரைக் கோள வடிவ கோபுர கலசங்கள் அமைக்கப்பட்டன. இந்தியக் கோயில்களை முதன்முதலாகப் பார்த்த மேல்நாட்டுக்காரர்கள், அவை அசுத்தமாக இருப்பதாக நினைத்தார்கள். அவர்கள் அவ்வாறு நினைத்ததற்குக் காரணமே, அங்கே பல கதவு, சாளரங்கள் இல்லாமல் இருந்ததுதான். ஒரு கதவு மட்டுமே இருந்தது. அதுவும் மிகச் சிறியதாக இருந்தது.

அங்கே உருவாக்கப்படும் ஒலிவட்டம் அறுபட்டுச் சிதைந்துவிடக் கூடாது என்பதற்காகவே அந்த வடிவமைப்பு அவ்வாறு அமைக்கப்பட்டது. கருவறை, சிறியதாய், இருண்டதாய், அழுக்குடையதாய், தூய காற்றுப் புகாதபடி இறுக்கமாய் இருப்பதாக மேல்நாட்டவர் நினைத்தார்கள்.

அவர்களுடைய மாதா கோயில்கள் காற்றோட்டம் கொண்டவையாய், தூய்மை மிக்கவையாய், கதவு சாளரங்கள் பல கொண்டு, வெளிச்சமும் காற்றும் எளிதில் பாயும்படி சுகாதார முறைப்படி அமைந்திருந்தன.

நான் முன்பு குறிப்பிட்டபடி, சாவி தொலைந்து விட்டால் எல்லாச் சங்கடங்களும் தோன்றிவிடும். இன்றைய இந்தியரில் எவரும், கருவறையில் ஏன் கதவு சன்னல்கள் இல்லை என்பதைச் சொல்ல முடியாது. அதனால், மேல்நாட்டவர் நம்மைக் கேட்டபோது, நாமும் அவர்களைப் போலவே நம் ஆலயங்கள் அசுத்தமானவை என்று நினைத்தோம்.

இந்த ஆலயங்களில்தான் மிகுந்த ஆரோக்கியமுள்ள மனிதர்கள் வாழ்ந்தார்கள் என்பதும், ஆலயங்களுக்குள் எந்த நோயும் நுழையவில்லை என்பதும், எடுத்துச் சொல்லி வாதாட எவருக்கும் தெரியவில்லை. அங்கே இருந்து வழிபட்டு வணங்கிய மக்கள் மிகுந்த உடல் நலத்தோடு வாழ்ந்தார்கள்.

ஏன் அப்படி? ஓங்கார ஒலியால் உருவாகும் ஆற்றல், தூய்மைப்படுத்தும் அபூர்வமான சக்தி கொண்டது. சிலவகை ஒலிகளுக்குத் தூய்மைப்படுத்தும் சக்தி உண்டு. சிலவகை ஒலிகள் தூய்மைக் கேட்டையும் உண்டாக்கும். சில ஒலிகள் நோய் போக்கும் மருந்தாகும். சில ஒலிகள் நோய்களை வரவழைக்கும்! அந்த ஒலி விஞ்ஞானம் இப்போது காணாமல் போய்விட்டது.

ஒலியே பரிபூரணம் என்று சொன்னவர்கள், ஒலி பற்றிய உயர்ந்த பட்சமான கருத்தை வெளியிட்டதாகப் பொருள். பூரணத்தைக் காட்டிலும் பெரிய அனுபவம் இல்லை. தம்மை வெளிப்படுத்திக் கொள்ள ஒலியைக் காட்டிலும் ஆழமான முறை வேறு எதுவும் இல்லை.

இசையைப் பற்றிய எல்லா வழிமுறைகளும், மாறுபாடுகளும் கிழக்கில்தான் பிறந்தன. அவையெல்லாம் பரிபூரணத்தின் ஒலி வடிவ வெளிப்பாடுகளே; அனுபவங்களே. நடன வடிவங்கள் போலவே, இசை வடிவங்களும் நமது கோயில்களில்தான் உருவானவை. பின்னர் அவை வெளியே சென்று தனித்தனிக் கலை வடிவங்களாக உருப்பெற்றன. கோயிலில் ஒரு பக்தன் இசையின் பல்வேறு வேறுபாடுகளை அனுபவித்து உணர்ந்திருக்கிறான். அவை, கணக்கு வைக்க முடியாத அளவுக்கு எண்ணற்றவை.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, காசியில் விசுத்தானந்தா என்ற சித்தர் ஒருவர் இருந்தார். குறிப்பிட்ட ஓசையைப் பயன்படுத்தி ஒருவரைக் கொல்ல முடியும் என்பதை நிரூபிக்க நூற்றுக்கணக்கான சோதனைகளை அவர் செய்து காட்டினார்.

நவீன கால நிலைப்படி அசுத்தமானதாகக் கருதப்பட்ட அரைக் கோள வடிவ மேற்பாகம் கொண்ட, ஆலயக் கருவறைக்குள் அவர் அமர்ந்து கொண்டார். இங்கிலாந்திலிருந்து வந்த மூன்று மருத்துவர்கள் அவரது சோதனையைக் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர் வினோதமான ஓர் ஒலியை எழுப்பினார்... மருத்துவர்கள் கொண்டு வந்து விட்டிருந்த குருவி படபடத்தது; பிறகு தரையில் விழுந்து உயிர்விட்டது! மருத்துவர்கள் அதைச் சோதித்துப் பார்த்துவிட்டு, உயிர் போய்விட்டதாக அறிவித்தார்கள்!

பிறகு, சித்தர், மீண்டும் ஒருவகை ஒலியை எழுப்பினார். செத்துக் கிடந்த குருவி, உயிர் பெற்றுச் சிறகடித்துப் பறந்தது! சில ஒலிகள் மிகப்பெரிய விளைவுகளை ஏற்படுத்தும் என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது.

இப்போது ஒலியின் ஆற்றல் அறிவியல் பூர்வமாக நிரூபிக்கப்பட்டு விட்டது. நம் உடலின் மீது ஒளிக்கற்றை கூட சில விளைவுகளை ஏற்படுத்தி விடுகின்றது. மருந்தும் அப்படித்தான். வண்ணங்களும் நம்மில் வேறுவேறு விளைவுகளை ஏற்படுத்துகின்றன. அப்படி யிருக்கையில் ஒலி, விளைவுகளை ஏற்படுத்தாதா என்ன?

ஒலிக்கும் நம் வாழ்விற்கும் உள்ள தொடர்பு பற்றி, மேலைநாட்டு ஆய்வுக் களங்கள் பல, தீவிர ஆராய்ச்சியில் இறங்கியிருக்கின்றன. இரண்டு மூன்று ஆய்வுக் களங்கள் எட்டியிருக்கிற ஆய்வு முடிவுகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. குறிப்பிட்ட சில ஒலிகள் தாய்மார்களிடம் அதிகம் பால் சுரக்க வைக்கும் என்பதை இரண்டு சோதனைச் சாலைகள் கண்டுபிடித்திருக்கின்றன.

ஆறு மாதங்களில் பூக்கும் ஒரு தாவரத்தை, இரண்டு மாதத்திலேயே சில ஒலிகளால் பூக்க வைக்க முடியும் என்பதையும் நிரூபித்திருக்கிறார்கள்! பால் கறக்கும்போது இன்னிசை எழுப்பினால் பசு அதிகம் பால் சுரக்கிறது! ரஷ்ய நாட்டுப் பால் பண்ணைகளில் இந்த முறை இன்று வழக்கத்தில் இருக்கிறது.

சிறப்பு ஒலிகள் கொண்டு கறிகாய் கனிகளை வளர வைக்கும் காலம் வெகு தூரத்தில் இல்லை. சோதனைச் சாலைகளில் இவை நிரூபணமாகிவிட்டன. விரைவில், இது விரிவான அளவில் பயன்படுத்தப்பட்டு விடும். காயும் கனியும் பாலும் சிறப்பாய் வளர ஒலி பயன்படுமானால், நாம் ஏன் அதை நம் உடல் நலத்திற்காகவும், மன நலத்திற்காகவும் பயன்படுத்தக் கூடாது?

நோயையும், உடல் நலத்தையும் சில ஒலிகள் தீர்மானிக்கின்றன. அதனால், கடந்த கால மக்கள், காற்றையும் சூழலையும் மட்டும் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், தம் ஆலயங்களில் சில குறிப்பிட்ட சுகாதார ஏற்பாடுகளைச் செய்து கொண்டார்கள்.

நல்ல காற்று நிறைய இருந்து விடுவதால் மட்டும் உடல் நலம் சிறப்பாக அமைந்துவிடும் என்பதை அவர்கள் நம்பவில்லை. அப்படி நம்பியிருந்தால், கடந்த ஐயாயிரம் ஆண்டுகளாக தம் வழிபாட்டுத் தலங்களை இவ்வாறு இறுக்கமாக அமைத்திருக்க மாட்டார்கள்.

காற்றும் ஒளியும் புகாத இருண்ட குகைகளில்தான் இந்திய முனிவர்கள் அமர்ந்து தவம் செய்தார்கள். அல்லது, மிகக் குறுகிய வாயிலை யுடைய காற்றோட்ட மில்லாத கருவறைக்குள் அமர்ந்து கொண்டார்கள். சில கோயில் கருவறைக்குள் நுழைய வேண்டுமானால் படுத்தபடியே ஊர்ந்துதான் உள்ளே செல்ல முடியும்.

அப்படியிருந்தும் கூட உள்ளே அமர்ந்தவர்களின் உடல்நலம் பாதிக்கப்பட்டுவிட வில்லை. பல்லாயிரம் ஆண்டுக் காலமாக இந்தியாவின் அனுபவம் இதுவாகத்தான் இருந்து வந்திருக்கிறது.

நமக்கு முதன்முதலாக இதில் எப்போது சந்தேகம் ஏற்பட்டதோ, அப்போதுதான் பெரிய கதவு, சாளரங்களை நாம் அமைக்க ஆரம்பித்தோம். கோயில்களை நாம் நவீனப்படுத்தி விட்டோம். அவற்றை சாதாரணக் கட்டடங்கள் ஆக்கி விட்டோம். மேலான விஷயத்திற்கான திறவுகோல் அவை என்ற நோக்கத்தை நாம் இழந்து விட்டோம்.

நமது கோயில்களின் வடிவமும், ஒலி அமைப்பும் ஆழ்ந்த தொடர்புடையன. எல்லாமே ஒலி விஞ்ஞானம்தான். ஓர் அமைப்பின் கோணத்திற்கும், ஒலி பிறப்பதற்கும் தொடர்பு உண்டு. நாம் நின்று கொண்டு ஒலி எழுப்புவதற்கும், அமர்ந்து கொண்டு ஒலி எழுப்புவதற்கும் தொடர்பு உண்டு.

படுத்துக் கொண்டுதான் சில ஒலிகளை எழுப்ப முடியும். நின்று கொண்டும், அமர்ந்தும் எழுப்பப்படும் ஒலிகள் வேறுவேறு பாதிப்பை உண்டாக்கும். ஒட்டுமொத்தமான கூட்டொலிக்கும், தனி ஒலிக்குமான பயன்கள் வேறுவேறுதான். அதனால், வேத நூல்கள் மேற்கத்திய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டபோது, ஏகப்பட்ட குழப்பங்கள் ஏற்பட்டன.

மேலைநாட்டு மொழிகள், ஒலி அமைப்பைவிட மொழி அமைப்பிற்கே முக்கியத்துவம் தருவன. ஆனால், வேதங்களின் கண்ணோட்டம் வேறானது. எழுதப்படும் அல்லது பேசப்படும் சொற்களின் பொருளைவிட, ஒலிக்கே அதிக முக்கியத்துவம் தந்தது வேதம்.

சமஸ்கிருதம் பேச்சு மொழியே அன்றி, எழுத்து மொழியன்று. சொல்லைவிட ஒலிக்கே அதில் முக்கியத்துவம். அதனால்தான், பல்லாயிரம் ஆண்டுகளாக, மதிப்பு வாய்ந்த வேதங்கள் எழுதப்படாமல், செவி வழியாகவே வாழ்ந்து வந்தன. வரி வடிவில் எழுதப்பட்ட உடனே அதன் ஒலிச்சிறப்பு அழிந்துவிடும் என்று அவர்கள் நம்பினார்கள்.

ஞானம், வாய் மூலம் செவி வழியாகத் தொடரவேண்டும்; எழுதிப் படிக்கக் கூடாது; எழுதினால் அவை வெறும் வார்த்தைகள் ஆகிவிடும்; நுட்பமான ஒலிகள் மறைந்துவிடும்; அதனால், சொற்களின் பொருள்கள் அர்த்தமற்றதாகிவிடும், என்று அவர்கள் நம்பினார்கள்.

'ராமா' என்று நாம் எழுதினால், இதைப் படிக்கிறவர்கள் பலவிதமாக உச்சரிப்பார்கள். சிலர் 'ர'வில் அழுத்தம் கொடுத்து ஒலிப்பார்கள். சிலர் 'ஆ'வில் அழுத்தம் கொடுப்பார்கள். சிலர் 'ம'வில் அழுத்தம் கொடுப்பார்கள். படிக்கிற ஆளைப் பொறுத்து ஒலி மாறிமாறி வரும்.

ஒரு சொல் எழுதப்பட்டவுடனே, அதன் ஒலிச்சிறப்பு அழிந்து விடுகிறது. அந்த சொல்லின் சரியான ஒலியை அறிய எவ்வளவோ ஆய்வு, சிரமம் எல்லாம் எடுக்க வேண்டி வருகிறது. அதனால்தான், வேதங்களை எழுதி வைக்கக்கூடாது என்ற வலுவான கருத்து பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்து வந்திருக்கிறது.

அவற்றின் ஒலி ஒழுங்கை இழந்துவிடக் கூடாது என்பதற்காகவே முற்கால முனிவர்கள் அவ்வாறு கருதினார்கள். வாய் மூலமாகவே அது பரவவேண்டும் என்று வலியுறுத்தினார்கள். அதனால்தான் அதை 'சுருதி' என்று கூறினார்கள். 'கேட்டுக் கற்றல்' என்பது அதன் பொருள். எழுதப்பட்ட எதையும் அவர்கள் வேதம் என்று ஒப்புக் கொள்ளவே இல்லை!

அவையெல்லாம் அறிவியல் பூர்வமான ஒழுங்குமுறையில் அமைக்கப்பட்டவை. சில இடங்களில் மென்மையாகவும் சில

இடங்களில் வன்மையாகவும் ஒலிக்கும். அவற்றையெல்லாம் வரிவடிவில் எப்படி எழுதிக்காட்ட முடியும்? வேதங்கள் எழுத்துவடிவில் எழுதப்பட்ட அன்றே, அவற்றின் உள்ளார்ந்த ஒலிச் சிறப்பும், ஒலி ஒழுங்கும் செத்துவிட்டன.

காதால் இனிக் கேட்க வேண்டிய அவசியமில்லை, என்ற நிலை ஏற்பட்டு விட்டது. கடையில்தான் கிடைக்கிறதே. படித்தே தெரிந்து கொள்ளலாம். அதனால், ஒலிக்கான முக்கியத்துவம் போய்விட்டது.

வேதப் பொருள் முக்கியமல்ல என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். வேதங்கள் வரிவடிவில் எழுதப்பட்ட நிலை ஏற்பட்டபின் வந்தது அது. எழுதப்பட்ட ஒன்று அர்த்தமற்று இருந்தால் அது பைத்தியக்காரத் தனமாகத்தானே தோன்றும்? அதனால், எழுதப்பட்டவற்றிற்கு அர்த்தம் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

வேதங்களின் சில பகுதிகள், இன்னும் அர்த்தமற்றே காணப்படுகின்றன. ஒலி வடிவின் முக்கியத்துவம் உள்ள அந்தப் பகுதிகளே உண்மையான வேதம்! அந்தப் பகுதிகள் எந்தப் பொருளையும் உணர்த்துவதில்லை. சான்றாக திபேத்திய மந்திரமான 'ஓம் மணி பத்மே ஹம்' என்பதற்கு எந்தப் பொருளும் இல்லை. ஆனால், அது ஒலி முக்கியத்துவம் கொண்டது.

இதேபோல 'ஓம்' என்ற மந்திரத்திற்கும் பொருள் இல்லை. ஆனால், பெரிய பாதிப்பை உண்டாக்கக் கூடிய ஒலி அடிப்படை கொண்டது அது. தியானம் செய்பவர், 'ஓம் மணி பத்மே ஹம்' என்று திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருந்தால், அந்த ஒலி பல சக்கரங்களைப் பாதித்து, அவற்றைச் செயல்படத் தூண்டும். இங்கே பொருள் பற்றிய பேச்சே எழுவதில்லை. முக்கியத்துவம் ஒலியில்தான் இருக்கிறது.

அதனால்தான் வேதங்களில் ஒலியே முக்கியத்துவம் பெறுகின்றது. அந்த முக்கியத்துவமும் அதன் பயன்பாட்டில்தான் அமைந்திருக்கின்றது. நமது சிறப்பான கவனம் இதில்தான் இருக்க வேண்டும்.

''உண்மை என்றால் என்ன?'' என்று யாரோ புத்தரிடம் கேட்டார்கள். ''பயன் படுத்தப்படுவது உண்மை,'' என்று புத்தர் அவருக்கு விடையளித்தார். உண்மையின் இலக்கணமே அதன் பயன்பாடுதான். அறிவியலும் உண்மையை அப்படித்தான்

வரையறுக்கிறது. பயன்பாடுதான் அளவுகோல். வாழ்வில் அதைப் பயன்படுத்தலாம்; நிரூபித்தும் காட்டலாம்.

நீரகம், தீயகம் (ஹைட்ரஜன், ஆக்சிஜன்) இரண்டும் கலந்தால் தண்ணீர் ஆகும் என்று சொல்லும்போது, அது சரியா தவறா என்று நாம் கவலைப்படுவதில்லை. அவை இரண்டின் கலப்பில் நீர் உருவானால் மட்டுமே நம்புவோம். அந்த இலக்கணத்திற்கு மதிப்பில்லை. அதன் மதிப்பே விளைவில்தான் இருக்கிறது; பயன்பாட்டில்தான் இருக்கிறது.

அந்த விகிதாசாரப்படி நீரை உருவாக்க முடியும் என்று சொன்னால், அதை நிரூபித்துக் காட்ட வேண்டியிருக்கிறது. சமயம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் சொன்ன உண்மை பற்றிய இந்த இலக்கணத்தை இப்போதுதான் அறிவியல் கடைப்பிடிக்க ஆரம்பித்திருக்கிறது.

உண்மையைச் சோதித்தறிவதற்கான வழி, அதன் பயன்பாடு என்ன என்று கண்டறிவதுதான். சமயத்தின் நிலை இதுதான்.

'ஓம்'கார நாதத்திற்குப் பொருள் இல்லை; ஆனால், பயன் உண்டு. கோயிலுக்கு அர்த்தமில்லை; ஆனால், பயனுண்டு. அதைப் பயன்படுத்துவது ஒரு கலை. எல்லா கலைகளுக்குள்ளும் உள்ளார்ந்த ஓட்டம் ஒன்று உண்டு. அதைக் கற்றுத்தர முடியாது. உள்வாங்கிக் கொள்ளப்பட வேண்டிய ஒன்று அது.

ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சீனப் பேரரசர் ஒருவர் புலால் உணவில் மிகுந்த விருப்பம் காட்டி வந்தார். அவர் கண் முன்னால் பசுவோ எருதோ வெட்டப்பட்டன. ஒவ்வொருநாள் காலையிலும் இந்தப் படுகொலை அவர் முன்னிலையில் பதினைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அதை ஒரே ஆள் செய்து கொண்டிருந்தான்.

ஒருநாள், பேரரசர் அவனிடம், ''இவ்வளவு காலமாக ஒரே கொடுவாளால் வெட்டிக் கொண்டிருக்கிறாயே, அது மழுங்கிப் போகாதா? நீ சாணை பிடிப்பதாகவே தெரியவில்லையே!'' என்றார்.

''இல்லை அரசே! இது மழுங்கிப் போகாது. வெட்டுகிறவன் திறமைசாலியாக இருந்தால், வாள் கூர்மையாகவே இருக்கும். அவனுக்கு எங்கே, எப்படி வெட்ட வேண்டுமென்ற நுட்பம் தெரியும். எலும்புகள் கூடும் இடம் தெரிந்து வெட்டினால், ஒரே வெட்டில் தலை

துண்டாகும். இவ்வாறு எளிதாக வெட்டும் கலை, தலைமுறை தலைமுறையாக வருவது. அதனால்தான் கோடரி கூர் மழுங்கிப் போவதும் இல்லை; அதைச் சாணை பிடிக்க வேண்டிய அவசியமும் இல்லை,'' என்றான் அவன்.

அதைக் கேட்ட அரசர் அந்தக் கலையைக் கற்றுக் கொடுக்குமாறு அவனிடம் கேட்டார். அதற்கு, அவன், ''அது மிகவும் சிரமம். நான் அதைக் கற்றுக் கொள்ளவில்லை. என் தந்தை செய்வதைப் பார்த்துப் பார்த்துத்தான் கற்றுக் கொண்டேன்; குழந்தைப் பருவத்திலிருந்தே கவனித்து வந்த விஷயம் அது. சில சமயம் என் தந்தையிடமிருந்து கோடரியை இரவல் வாங்கி விலங்குகளை வெட்டிப் பார்த்திருக்கிறேன். அவர் செய்வதைக் கவனமாகப் பார்த்திருக்கிறேன். நீங்களும் அப்படித்தான் கற்றுக் கொள்ள முடியுமே தவிர, நான் சொல்லித் தந்து கற்றுக் கொள்ள முடியாது,'' என்றான்.

அறிவியலைக் கற்றுக் கொள்ளலாம். ஆனால், கலையைக் கற்க முடியாது, உள்வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்.

இந்த மந்திரங்களுக் கெல்லாம் பொருள் இல்லை. ஆனால், பயன்பாட்டு மதிப்பீடு உண்டு. இதையெல்லாம், சின்ன வயதிலேயே நம் குழந்தைகள் உணரச் செய்ய வேண்டும். கோயிலைப் பற்றிக் குழந்தைகள் கற்றுக் கொண்டதற்கு அப்பால் அதன் பயன்பாட்டை அவை உணர வேண்டும்.

கோயிலின் புனித சூழலுக்குள் எவ்வாறு பிரவேசிக்க வேண்டும், எவ்வாறு அமர வேண்டும், அதை எவ்வாறு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற கலையைக் குழந்தைகள் கற்றுக் கொள்ள வேண்டும்.

நெருக்கடி நிலைகள், சிரமங்கள், ஆபத்துகள் வரும் நேரங்களில் மக்கள் கோயிலை நோக்கித்தான் ஓடினார்கள். அங்கே சென்றபின், மனம் சமநிலை பெற்று, சாந்தி பெற்று வீடு திரும்பினார்கள். மக்கள் ஒவ்வொருநாள் காலையிலும் கோயிலுக்குப் போகும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார்கள். அங்கே அவர்களுக்கு என்ன கிடைத்தது என்பதையெல்லாம் கண்டுகொள்ள முடியாது.

அதெல்லாம் கற்றுக் கொடுத்ததல்ல. குழந்தைப் பருவம் முதல் ஏற்பட்ட பழக்கம். இயல்பாக அவர்களுக்குள் இறங்கிவிட்ட பண்பு அது. கலை எங்கிருந்தாலும் சரி, அது கற்றுக் கொடுக்க முடியாது.

ஒலியின் பயனுக்காக கோயில் அமைப்பு, ஒரு சோதனை முயற்சியாக ஓர் ஒழுங்கமைப்புடன் உருவாக்கப்பட்டது. சொல்லின் ஒலிப்பயனை உணராதவரை அந்தச் சோதனைக்கு அர்த்தமே இல்லை.

சான்றாக, மந்திரம், குருவினால் சீடனுக்குக் கொடுக்கப்படுவது. சீடனின் காதில் குரு ஓதி உணர்த்துவது அது. அது உங்களுக்கு முன்பேகூடத் தெரிந்திருக்கலாம். இருந்தாலும், குருதான் அதை, உங்கள் காதில் இரகசியமாக ஒத வேண்டும். அதுதான் மரபு.

''இதில் என்ன புதுமை இருக்கிறது? குரு இல்லாமலேயே நான் அதை ஓதலாமே! மந்திரம் உச்சரிப்பது எப்படி என்பது எல்லாருக்கும் தெரிந்ததுதானே? அப்படி யிருக்க அதைக் குரு இரகசியமாய் என் காதில் ஓதுவானேன்?'' என்று நீங்கள் நினைக்கலாம்; வியப்படையலாம்.

ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். குரு, மந்திரத்தைக் காதில் ஓதும்போது, ஏதோ ஒரு விசேடமான வகையில், சில இடங்களுக்கு அழுத்தம் கொடுத்துச் சொல்கிறார். அது மற்றவர்களுக்குத் தெரியாதது. சான்றாக, 'ராமா' என்பதை உச்சரிப்பதில் எத்தனையோ விதம் உண்டு. அதற்கேற்றபடி விளைவுகளும் வித்தியாசப்படும்.

வால்மீகியின் கதை நமக்குத் தெரியும். ஆனால், அந்தக் கதை தன் முக்கியத்துவத்தை இழந்து விட்டது. அது இப்போது, சிறுபிள்ளைத் தனமாக நமக்குத் தோன்றுகிறது.

வால்மீகி கல்வியறிவற்ற பாமரன் என்று சொல்கிறார்கள். 'ராம ராம' என்று சொல்லிவரும்படியாக அவரது குரு சொல்லியிருக்கிறார். திரும்பத் திரும்பச் சொல்லி வருகையில் அவர் மறந்துபோய் 'மரா மரா' என்றே உச்சரித்திருக்கிறார். என்றாலும் அவர் ஞானம் பெற்றார்!

அந்த இரகசியங்களை யெல்லாம் உணர்த்தும் சாவி தொலைந்து போய் விட்டது. அதனால், எல்லா விவகாரங்களும் ஆரம்பமாகி விட்டன. 'ராம ராம' என்று தொடர்ந்து உச்சரித்து வந்தால், கொஞ்ச நேரம் ஆனபின் அது 'மராமரா' என்றே ஒலிக்கும். தானாகவே அதில் ஒரு சுழல் வட்டம் உருவாகி விடுகிறது. சரியான ஒலி அழுத்தம் உருவாகி விடுகிறது.

அப்புறம் ஓர் அற்புதம் நிகழும்! நீங்கள் இல்லாமல் போய் விடுவீர்கள்! நீங்கள் இல்லாமல் போனவுடன், உங்கள் அடையாளம் மறைந்தவுடன் அந்த மந்திரம் பூரணத்துவம் அடைந்து விடுகிகிறது.

அதுதான் உண்மையான அனுபவம் - நீங்கள் இல்லாமற் போக, உங்கள் ஆணவம் செத்து விடுவது.

'ராம ராம' என்பது தொடர் உச்சரிப்பில் 'மராமரா' என முழுமை பெறும். அப்புறம் 'ராம' என்று சொல்ல முயன்றாலும் முடியாமற் போகும்! உள்ளில் 'மராமரா' என்ற ஒலி நிறைந்து ஒலிக்க ஆரம்பித்துவிடும்... அப்போது உன் 'மரணம்' நிகழும். அதுதான் தியானத்தின் முதற்படி.

உனக்குள் இருக்கும் 'நான்' மரித்துவிட, அந்தக் கணத்தில் 'மராமரா' என்பது சட்டென 'ராமராம' என்று மாறி ஒலிக்க ஆரம்பித்து விடும்! உன் முயற்சி இன்றி ஒலிக்கும் அது! அதுதான் ராம அனுபவம் - இறுதி எதார்த்த நிலை. உன் 'மரணம்' நிகழாமல் இதெல்லாம் சாத்தியமில்லை. இந்த இரு நிலைகளுக்கும் இடையில், 'மரா மரா' அவசியமாகிறது!

அதனால், ராம மந்திரத்தில் மூன்று நிலைகள் இருக்கின்றன. ஆரம்பம், 'ராம.' இடையில், 'மரா.' இறுதியில், மீண்டும் 'ராம.' இதில் இரண்டாவது கட்டமான 'மரா' முக்கியமானது. இது நிகழாமல் இறுதி ராம நிலை இல்லை. சரியாக உச்சரித்தால் மட்டுமே இதெல்லாம் நிகழும்.

'ரா' என்பதில் அதிக அழுத்தம் கொடுக்க வேண்டும். 'ம' என்பது சற்றுக் குறைவாக. அப்போதுதான் 'ராம' என்பது 'மரா' என மாறும். 'ம' என்பது, மலைச்சரிவு; பள்ளத்தாக்கு. 'ரா' என்பது சிகரம்! உச்சி!

'ராம' மந்திரத் தொடர் உச்சரிப்பில் 'ம'வுக்குக் குறைந்த அழுத்தம் கொடுத்துச் சொல்லச் சொல்ல, மாறுதல் ஏற்படும். அதாவது, 'ம' சிகரமாகி, 'ரா' பள்ளத்தாக்கு ஆகிவிடும்! அதற்குப் பிறகுதான் 'மராமரா' என்ற ஒலி ஏற்பட ஆரம்பிக்கும். அதுதான் மரணம், மரணம். நம்மை யறியாமல் நிகழ்வது இது.

கடல் அலைகள் போல, ஒவ்வொரு சிகரத்திற்கும் ஒரு பள்ளத்தாக்கு உண்டு. கடல் அலை போலத்தான் ஒலி அலையும். இசையில் உள்ள ஆரோகண அவரோகணங்கள் போல. சரியான ஒலி உச்சரிப்பு இல்லை யென்றால், மந்திர உச்சாடனத்தால் எந்தப் பயனும் இல்லை.

வால்மீகி படிப்பறிவற்றவராக இருந்ததால்தான் 'மரா மரா' என்று உச்சரித்தார் என்று யார் கதை கட்டி விட்டார்களோ தெரியவில்லை. ஆனால், அது உண்மையல்ல. அவர் காட்டு மனிதர்தான் என்றாலும், கல்லாதவர்தான் என்றாலும், அவர் புத்திசாலி. 'ராம ராம' என்பதை எவ்வாறு 'மராமரா' என்று மாற்றுவது என்ற விஞ்ஞானம் அவருக்குத்

தெரிந்தே இருந்தது. இந்த இடைநிலையிலிருந்துதான் 'ராம' என்பதே பிறந்தது. அந்த இறுதி 'ராம' நாமம் உங்களால் உச்சரிக்கப்படுவதாக அமையாது. காரணம், 'மரா' உச்சரிக்கப்படும் கட்டத்திலேயே நீங்கள் இல்லாமல் போய் விடுகிறீர்கள். அப்புறம் 'ராம' என்று உச்சரிப்பது யார்?

இரண்டாவது கட்டத்தைக் கடந்தவுடனே உங்களுக்குள் இருந்து ஒலிப்பது 'ராம.' அது ஒரு தன்னிச்சையான, இயல்பான, உங்களையல்லாமல் தோன்றும் ஒலி. அது உங்கள் ஒலியன்று.

சுருதிகள், வேதங்கள் எல்லாம், குறிப்பிட்ட சரியான ஒலி அழுத்தத்தில், காதால் கேட்கப்படுபவை. சுருதிகள், விஞ்ஞான ஒலி நுட்பம் உணர்ந்தவர்களால் வழிவழியாய் வழங்கப்பட்டு வருவன. இந்த அடிப்படையில்தான் அவை பயன்பாட்டுத் தன்மை பெற முடியும்.

இல்லாவிட்டால், அவை வெறும் எழுதப்பட்ட சொற்களே. யாரும் படிக்கலாம். பயன் மட்டும் எதுவுமில்லை. அவற்றின் ஏற்ற இறக்க, ஒலி அழுத்த உச்சரிப்பில்தான், இரகசியமே அடங்கி யிருக்கின்றது.

மந்திரங்கள் முன்பு நிறைய இருந்தன. கோயில், அவற்றின் சோதனைச் சாலையாக இருந்தது. சாதகனுக்கு அதுவே, உள்ளார்ந்த மதிப்பீடாகவும், அர்த்தமாகவும் இருந்தது.

கோயிலில் அமர்ந்து சாதகம் செய்தவர்கள், வெளியிலிருந்து சாதகம் செய்பவர்களைக் காட்டிலும் மேலானவர்களாகத் திகழ்ந்தார்கள். தெய்விகம் எங்கும் உண்டு என்றாலும்கூட உண்மை என்னவோ இதுதான். இன்று, கோயிலுக்குள்கூட அந்த அனுபவம் நிகழ்வதில்லை.

மகாவீரர் கோயிலுக்குள் செல்லாமலேயே சோதனைகள் செய்தவர். பல சிரமமான வழிமுறைகளை அவர் கடைப்பிடிக்க நேர்ந்தது. கோயிலுக்குள் செய்திருந்தால் அந்தச் சிரமம் ஏற்பட்டிருக்காது.

தமக்குள் ஒரு சக்தி வளையத்தை உருவாக்குவதற்காக மகாவீரர், எத்தனையோ நிலைகளில் அமர்ந்து, பல காலம் சிரமப்பட்டு சாதித்தார். கோயிலுக்குள் போக அவர் விரும்பவில்லை. அவர் தேர்ந்தெடுத்த மாற்று வழி, மிகவும் கடுமையானதாக அமைந்தது. மகாவீரரைப் போன்ற இரும்பு மனம் கொண்டவரால்தான் அது முடியும். சாதாரணர்களுக்கு அது சரிப்பட்டு வராது.

புத்தரும் கோயில் இன்றியே ஞானம் பெற்றார். மகாவீரரும், புத்தரும் போன பிறகு, ஆலயங்கள் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சாதாரண மனிதர்களின் சாதகத்திற்குக் கோயில்களே ஏற்றதாக அமைந்தன. மகாவீரர், புத்தரின் வழிகள் சாதாரணர்க்கு ஏற்றதாக அமையவில்லை.

ஒலி விஞ்ஞானத்தை இன்று நாம் சரியாகப் புரிந்து கொண்டால், கோயில்களை விடச் சிறந்த கருவிகளை நாம் கண்டுபிடித்து விட முடியும். இந்தப் பாதையில்தான் இன்றைய அறிவியல் போய்க் கொண்டிருக்கிறது. நம்மிடம் மின்சாரம் பற்றிய அறிவு நிறைய இருப்பதால் நல்ல கருவிகள் கண்டுபிடிப்பது சாத்தியமே. ஆனால், அதில் ஆபத்தும் உண்டு. சரியான முறையில் அறிவியலைப் பயன்படுத்தினால், கோயிலால் பெற்ற பலனைப் பெற்றுவிட முடியும்.

கோயில் உருவாக்கிய சக்தி வட்டத்தை நவீன தொழில் நுட்பம் உருவாக்கித் தந்துவிடும். நம் சட்டைப் பையில் ஒரு சிறிய கருவி. அது நமக்குள், மின்சாரச் சுழல் வட்டத்தை உருவாக்கிவிடும். நமக்குள் உருவாகும் மின்சாரச் சுழலை அதில் சேமித்து வைத்துக் கொள்ளவும் முடியும்.

இந்தத் திசையில் அமெரிக்காவில் ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. ஏழெட்டு அமெரிக்க விஞ்ஞானிகள் இதில் தீவிரமாக இறங்கி, சுவையான தகவல்களைத் தந்துள்ளனர். இன்பமும், வேதனையும் நமது உடலின் சில மையங்களில் ஏற்படும் அதிர்வுகளே என்கிறார்கள் அவர்கள்.

சான்றாக, உங்கள் உடல் முழுவதிலும் ஊசியால் குத்திப் பார்த்தால், சில இடங்களில் வலிக்காது. நம் உடலில் மரத்துப்போன சில மையங்கள் இருக்கின்றன. உங்கள் முதுகிலோ வேறு இடங்களிலோ கிள்ளினால், சில இடங்களில் வலியே தோன்றாது. சில இடங்களில் அதிகமாக வலிக்கும்.

நமது தலையில் உணர்வு மையங்கள் பல உண்டு. மூளையில் பல லட்சம் கண்ணறைகள் உள்ளன. ஒவ்வொரு சிறு பகுதியும் குறிப்பிட்ட உணர்வு மையம். மகிழ்ச்சியாக இருக்கிறேன் என்று நீங்கள் சொல்லும்போது, உடல் மின்சாரம் ஒரு குறிப்பிட்ட மையத்தில் பாய்வதாக அர்த்தம். காதலரின் அருகில் அமர்ந்து, கை சேர்த்துக் கொண்டிருக்கும்போது, மகிழ்ச்சி தோன்றுவதாக உணர்கிறீர்கள்...

என்னதான் நிகழ்கிறது? மின்சாரம் ஒரு குறிப்பிட்ட மையத்தில் பாய்வதால் ஏற்படுவது அது என்று விஞ்ஞானி கூறுவார். அந்த உணர்வும்கூட, கடந்தகால மனப்பதிவால் விளைவதுதான். பழைய

பதிவுதான் நிகழ்கால மகிழ்ச்சிக்குக் காரணம். ஆனால், அந்த உணர்வு தொடர்ந்து அப்படியே இருக்காது.

இரண்டு மூன்று மாதங்கள் போனபின், மின்சாரம் பாய்ந்து பாய்ந்து அந்த மகிழ்ச்சி மையம் மரத்துப் போய்விடும்!

உங்கள் காலில், ஒரு குறிப்பிட்ட இடத்தில், தொடர்ந்து ஊசியால் குத்தி வந்தால், படிப்படியாக வலி குறைந்து போய்விடும். இன்றைவிட நாளை வலி குறைவாக இருக்கும். தொடர்ந்து அப்படியே செய்து கொண்டு வந்தால், அந்த இடம் மரத்துப் போய் உணர்ச்சியற்றுப் போய்விடும். பிறகு வலியே தெரியாது.

சிதார் வாசிக்கிறவர்களுக்கு விரல்கள் மரத்துப் போய்விடும். வாசிப்பில் அவர்களுக்கு வலியே தெரிவதில்லை.

மூன்று மாதத்தில் உங்கள் காதல் செத்துப் போய்விடும்; அல்லது குறைந்துவிடும். காரணம், உங்கள் காதல் பலவீனமானது என்று அர்த்தமல்ல. அடிக்கடி பயன்படுத்துவதால் உணர்ச்சி குறைந்து போய்விடுகிறது. காதலர் மூன்று அல்லது நான்கு மாதங்கள் எங்காவது போய்விட்டுத் திரும்பினால், மீண்டும் உங்களிடம் மகிழ்ச்சி பொங்கி விடுகிறது.

விஞ்ஞானிகள் எலிகளைக் கொண்டு இதை சோதித்துப் பார்த்திருக்கிறார்கள். ஒரு எலியின் மூளையைத் திறந்து, அதில் ஒரு 'ஜன்னலை' திறந்தே இருக்கும்படியான ஓர் ஏற்பாடு செய்தார்கள், அவ்வப்போது கவனிப்பதற்கு. குறிப்பாக உடலுறவின்போது என்ன ஆகிறதென்று கவனித்தார்கள். எலியின் விந்து வெளியாகும்போது, திறந்திருக்கும் மூளையில் பாயும் மின்சாரம் என்ன ஆகிறது என்று கவனித்தார்கள்.

பிறகு, திறந்திருக்கும் மூளையின் பகுதியில் ஒரு மின்சாரக் கம்பியுடன் இணைத்து, 'ஜன்னல்' பகுதி மூடப்பட்டது. கம்பியின் மறுமுனை, மின்சாரத்தைக் கட்டுப்படுத்தும் கருவியுடன் இணைக்கப்பட்டது. எலியின் விந்து வெளியாகும் வேளையில் ஒரே மாதிரியான மின்சாரம் பாய்வதற்காக ஒரு பொத்தானும் பொருத்தப்பட்டது. அந்தப் பொத்தானை எவ்வாறு அழுத்துவது என்று அந்த எலிக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டது!

அந்தப் பொத்தானை அழுத்தினால் சீரான மின்சாரம் கம்பியில் பாய்ந்து, அது இணைந்துள்ள மூளையின் பகுதி கிளர்ச்சியடையும். அப்போது, எலிக்கு, விந்து வெளியாகும்போது ஏற்படும் பரவசம் ஏற்படும், உடலுறவு கொள்ளாமலேயே!

அந்தப் பொத்தானை அழுத்துவதில் அதிக ஆர்வம் காட்டியது எலி! மறுபடியும் மறுபடியும் அதை அழுத்தி ஆனந்தப்பட்டது! ஒரு மணி நேரத்தில் ஆறாயிரம் தடவை அழுத்தியதாம்! சாப்பிடவில்லை; தண்ணீர் குடிக்கவில்லை; தூங்கவில்லை - அந்தப் பொத்தானை அழுத்திக் கொண்டே இருந்தது. களைத்துச் சோர்ந்து மயங்கி விழும்வரை!

உண்மையான உடலுறவின்போது அனுபவித்ததை விட அதிக ஆனந்தத்தை அந்த எலி அனுபவித்தது என்று அந்த விஞ்ஞானி கூறினார். அந்தப் பரசவம் மின்சாரப் பாய்ச்சலால் விளைந்ததே தவிர, உண்மையான உறவால் பிறந்ததல்ல. ஆனால், அந்த உணர்வு சீக்கிரம் மரத்துப் போய்விடுகிறது என்றும் விஞ்ஞானி கூறினார்.

இன்னொருவர் இல்லாமலேயே, கலவி இன்பத்தை மின்சாரத்தின் மூலம் நாமும் பெறலாம்! ஆனால், அதனால் எந்த லாபமும் இல்லை. ஏராளமான சக்தி விரயம்தான் உண்டாகும். சிறிய பாட்டரி செல்லால் இயங்கும் ஒரு சிறிய கருவியை நம் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு, வேண்டும்போது அழுத்தினால், உடலுறவின் ஆனந்த பரசவம் உண்டாகும். ஆனால், ஆபத்தானது அது.

நமது மூளையில் உள்ள, சந்தேகம், கோபம் போன்ற பல உணர்வுகள் பிறக்கும் மையங்களைக் கண்டறிந்து, அவற்றை நீக்கிவிட முடியும். கிளர்ச்சி மனோபாவம் பிறக்கும் பகுதியை நீக்கிவிட்டால், ஆள் சாந்த சொரூபி ஆகிவிடுவார்! ஆனால், அரசாங்கங்கள் இதையெல்லாம் தவறாகப் பயன்படுத்தக் கூடும்! ஆனால், விஞ்ஞானிகளுக்கு அதெல்லாம் தெரியாது.

ஆனால், நல்வழிக்கு அதை நாம் பயன்படுத்தலாம். அந்தக் கருவியால், கோயிலில் உண்டாகும் சூழலை, அதிர்வுகளை ஏற்படுத்தி விடலாம். பல ஆண்டுகள், மாதங்களில் கிடைக்கும் ஒலி விளைவை, ஒரு கருவி மூலம் உடனே நாம் பெற்றுவிட முடியும்.

நான் சொல்ல வருவது இதுதான்: நமது ஆலயங்கள், அறிவியல் அடிப்படையில் அமைக்கப்பட்டவை. அங்கே உருவாக்கப்படும் ஒலியின் மூலமாக, அன்பு, ஆனந்தம், அமைதி, காதல் எல்லாம் எழுப்ப முடியும். இந்த உணர்வுகள் மூலமாக, வாழ்க்கை பற்றி ஒருவரது பார்வையே மாறிவிடக் கூடும்.

ஆனால், இந்தச் சாதனையை அறிவியல் மூலம் அடைவது ஆபத்தானது. அறிவியல் எதைக் கண்டுபிடித்தாலும் அது

தொழில்நுட்பம் ஆகிவிடுகிறது. அதில் பிரக்ஞை கலப்பதில்லை. அறிவியல் முறைகளால் பிரக்ஞ் நிலை ஏற்படுத்தினால், அது உண்மையாக இருக்காது. பிரக்ஞையின் உச்சநிலையைக் கருவி கொண்டு அடைய முடியாது.

ஒரு பொத்தானை அழுத்துவதன் மூலம் அடிப்படை மாறுதலைக் கொண்டு வந்துவிட முடியாது. அதனால், கோயில்களுக்கு மாற்றாக ஒரு விஞ்ஞானக் கருவி உதவிட முடியாது என்பது என் கருத்து.

மிகவும் மாறிப்போன இந்த நவீன காலத்தில் கோயில்கள் எப்படிப் பயன்படும் என்று நீங்கள் சந்தேகப்படலாம். ஆனால், அவை நன்றாகப் பயன்படும். ஆனால், பழங்காலத்தில் இந்தக் கோயில்களில் என்ன நிகழ்ந்தன, எப்படி நிகழ்ந்தன என்பது, இப்போதுள்ள கோயில் பூசாரிகளுக்குத் தெரியாது. அவரிடம் சாவி இருக்கத்தான் செய்கிறது. ஆனால், மறைந்திருக்கும் மர்மங்கள் பற்றி அவனுக்கு எதுவும் தெரியாது.

கோயிலின் முழுத் தத்துவமும், அதன் விஞ்ஞானமும் இன்றும் பயன்படக் கூடியவையே. நாம் இனிமேலும் நல்ல கோயில்களைக் கட்ட முடியும். காரணம் நம்மிடம் முன்னைவிடச் சிறந்த கட்டுமானப் பொருள்கள் இருக்கின்றன.

ஆயிரம் மடங்கு நமது ஒலி பெருகும்படியான ஒலி அமைப்புகளை நம்மால் உருவாக்க முடியும். நீங்கள் உச்சரிக்கும் ஓம்கார நாதத்தை, ஆயிரம் மடங்கு எதிரொலிக்கக் கூடிய சுவர்களை நம்மால் அமைக்க முடியும். இன்று நம்மிடம் நல்ல கருவிகள் இருக்கின்றன. நமது வாழ்விருப்பின் இரகசியங்களுக்கான திறவுகோலை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

முற்காலத்தில், கோயிலுக்குள் நுழைய ஒரு கதவாவது இருக்கும். ஆனால், இன்று கதவுகளே இல்லாமல் கோயில் கட்டலாம். முன்பு, பெரிய கோயில்களைக் கட்டியவர்கள், களிமண்ணும் சாணமும் கலந்து கட்டிய குடிசைகளில் வாழ்ந்தார்கள்!

தங்களால் முடிந்ததை அவர்கள் சிறப்பாகச் செய்தார்கள். அவர்கள் செய்தது பெரிய காரியம். இன்று நம்மிடம் சிறந்த தொழில் நுட்பங்கள் இருந்தாலும், இவற்றால் நாம் பயன்பெற வில்லை.

கோயிலுக்குள் பிரவேசிப்பவர்கள், தியானம் செய்பவர்கள் என்ன பயன்பெறுகிறார்கள் என்பதை இதுவரை பார்த்தோம். அதே சமயம் கோயில்களுக்கு வெளிப் பயன்பாடும் உண்டு. கோயிலுக்குள்

சென்று தியானம் செய்பவர் மட்டுமல்ல, கோயில் அருகே கடந்து சென்றவர்களும் பயன் பெற்றார்கள். ஆனால், இன்று அந்த நிலைமை இல்லை.

இன்று உள்ளே போகிறவர்கள்கூட ஒன்றும் பெறாமல்தான் வெளியே வருகிறார்கள். அன்று, கோயில் அருகில் சென்றாலே பயன் கிடைத்தது. காரணம், அன்று உள்ளே இருந்தவர்கள் ஏதோ செய்து கொண்டிருந்தார்கள்.

உள்ளே தியானம் செய்து வந்த நூற்றுக் கணக்கானவர்கள், சிறப்பான ஒலி அதிர்வுகளை உண்டாக்கிக் கொண்டிருந்தார்கள். அதன் காரணமாக, கோயில் வளாகமும், சுற்றுப் புறங்களும் சக்தி பெற்றன. அதிர்வுகள் கோயிலுக்குள் மட்டுமல்லாமல், வெளியிலும் பரவின. நுட்பமான அதிர்வலைகள் அவை. கோயில் உயிர்த்துடிப்போடு விளங்கியதால் சுற்றுப்புறங்களும் உயிர்த்துடிப்புடன் திகழ்ந்தன.

'வாழும் கோயில்களின்' முக்கியத்துவம் இதுதான். 'உயிர்ச்சிலை'யின் முக்கியத்துவமும் இதுதான். எந்தப் பயனும் கருதாது வருகிறவர்களுக்கும் பாதிப்பு ஏற்படவே செய்தது; ஒருவர் பிரக்ஞையில்லாமல், கோயில் இருப்பதைக் கூடக் கவனிக்காமல் அதைக் கடந்து செல்லும்போது, சூழலால் பாதிக்கப்பட்டு மாற்றம் அடைந்தால்தான், அது உயிர்த் துடிப்புள்ள கோயில்.

இரவில் தெருவில் நடந்து போவதாக வைத்துக் கொள்ளுங்கள். ஒரு கோயிலைக் கடந்து செல்கையில், ஏதோ ஒரு மாற்றம், ஓர் உணர்வு உங்களுக்குள் ஏற்படும்... நீங்கள் ஏதோ தவறு செய்ய நினைத்துக் கொண்டிருந்தால், சட்டென உங்கள் மனம் மாறிவிடும்! யாரையாவது கொலை செய்ய நினைத்துக் கொண்டிருந்தால், சட்டெனக் கருணை பிறந்துவிடும். அந்தக் கோயில் ஒரு சக்தி மையமாக இருந்தால் மட்டுமே அந்த மாற்றம் ஏற்படும். அப்படிப்பட்ட கோயிலின் ஒவ்வொரு கல்லும், கதவும் சிற்பமும் சக்தி நிரம்பியவையாக இருக்கும். அந்தக் கோயில் முழுவதுமே, உயிர்த்துடிப்புள்ள அதிர்வலைகள் கொண்டதாகத் திகழும்.

கோயில் மணியும் முக்கியத்துவம் கொண்டது. உள்ளே போகிறவர் முதலில் மணியை அடிக்கிறார். பிரக்ஞையுடன்தான் அடிக்கிறார்; தூக்க மயக்கத்தில் அல்ல. விழிப்புடன் மணியடித்ததும், உங்கள் பழைய சிந்தனை அறுபட்டு விடுகிறது. உடனே புதிய மாறுபட்ட சூழல் கவனத்திற்கு வந்து விடுகிறது. கோயில் மணியோசையும், ஓம்கார ஒலியும் ஒன்றுபோலத்தான். கோயில் மணி

தொடர்ந்து அடிக்கப்படுவதால், ஓம்கார ஒலி தொடர்ந்து ஒலித்து, அதிர்வுகளால் கோயிலுக்கு ஆற்றலை ஏற்றிவிடுகின்றது.

இதுபோல, வேறு பல விஷயங்களும், கோயிலில் பயன் தருகிற முறையில் அமைந்துள்ளன. அவை உள்ளார்ந்த தொடர்புடையன. கோயிலில் ஏற்றப்படும் நெய் விளக்குகள், சாம்பிராணி, சந்தனம், மலர்கள், மற்றும் பல நறுமணப் பொருள்கள் - எல்லாமே ஒன்றிற்கொன்று தொடர்பு கொண்டவை.

எந்தக் கடவுளுக்கு எந்தப் பூ சார்த்தப்பட வேண்டும் என்பதெல்லாம் கோயிலின் ஒத்திசைவுக்காக ஏற்படுத்தப்பட்டவை. எந்த மாதிரியான மணியோசை, எவ்வகை மலர், மறுநணம் - என்பதெல்லாம் நீண்ட அனுபவ அடிப்படையில் வரையறுக்கப்பட்டவை.

சிலவகை மலரின் நறுமணம்தான் குறிப்பிட்ட ஓசையோடு ஒத்துப்போக முடியும். வேறு மணங்கள் ஒத்து வராததால் விலக்கப்படுகின்றன.

பள்ளிவாசலில் 'லோபன்' என்ற நறுமணப் புகை மட்டுமே பயன்படுத்தப் படுகிறது. இந்துக் கோயில்களில் சாம்பிராணிப் புகையும், அகர்பத்தியும். இவையெல்லாமே ஒலியோடு தொடர்பு கொண்டவை.

'அல்லா...' என்ற ஒலிக்கும், 'லோபன்' மணத்திற்கும் உள்ளார்ந்த ஒத்திசைவு உண்டு. பரம்பொருளுக்கான உள் தேடலில் இவையெல்லாம் கண்டுகொள்ளப் பட்டவை. வேறு, சிந்தித்துக் கண்டுபிடிக்கப்பட்டவை அல்ல அவை. எப்படி நேர்ந்தது என்பதைச் சொல்கிறேன்:

ஓர் அறையில் அமர்ந்து 'லோபன்' மணம் இல்லாமல், 'அல்லா... அல்லாஹூ' என்று மீண்டும் மீண்டும் சொல்லிப் பாருங்கள். 'ஹூ'வில் அதிக அழுத்தம் கொடுக்க வேண்டும். மெல்ல மெல்ல 'அல்லா' மறைந்து போய் 'ஹூ' மட்டுமே திரும்பத் திரும்ப எதிரொலிக்கும். அப்போது, சட்டென, உங்கள் அறையில் 'லோபன்' நறுமணம் அலைவீசும்!

உங்களுக்குள்ளிருந்த ஒலித்த ஒலி, லோபனுக்கு இணையானது என்பதுதான் உண்மை. மசூதிகளில் அந்த வகை நறுமணம் ஏற்றப்படுவதற்கான காரணம், உங்களுக்குள் 'ஹூ' என்ற மந்திரம் மீண்டும் மீண்டும் ஒலிக்கவே; உச்சரிப்போர்க்கு உதவவே.

அகத்திலிருந்து எழும் நறுமணம் உணர, கொஞ்சம் காலம் பிடிக்கும். அதைத் தூண்டவே மசூதியில் அந்த மணம் கொளுத்தப்படுகிறது. இதில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன.

ஆனால், ஓம்கார நாதத்தால் 'லோபன்' நறுமணம் உணர முடியாது. இந்த ஒலி வேறு மையத்தைத் தாக்குவதால், அந்த நறுமணம் இதில் எழுவதில்லை.

நம் உடலில், நறுமண மையங்கள் தனித்தனியே உண்டு. அவை நமது எண்ணங்களோடும், உணர்வுகளோடும் இணைக்கப்பட்டுள்ளன. அதனால்தான், மகாவீரரின் உடலிலிருந்து எந்த நாற்றமும் எழவில்லை என்று சமணர்கள் நம்புகிறார்கள். அவருடைய உடலுக்கென்று ஒரு தனி நறுமணம் இருந்தது. ஒரு தீர்த்தங்கரரை அடையாளம் கண்டு கொள்வதற்கான நறுமணம் அது.

மகாவீரர் காலத்தில் எட்டுப்பேர் தம்மைத் தீர்த்தங்கரர் என்று சொல்லிக் கொண்டார்கள். ஆனால் குறிப்பிட்ட நறுமணம் எவரிடமும் வீசவில்லை. இத்தனைக்கும் அவர்கள் மகாவீரரைவிட அறிவில் எந்த விதத்திலும் தாழ்ந்தவர்கள் அல்லர். ஆனால், அவர்களுடைய ஞானம் ஆன்ம அனுபவமாக இல்லை. அதனால், அந்த நறுமணம் இல்லை. அதனால், அவர்கள் ஒதுக்கப்பட்டார்கள்.

புத்தரும், மகாவீரரை விட எந்த விதத்திலும் தாழ்ந்தவர் அல்லர். ஒரே அளவு ஞானமும், பிரக்ஞை நிலையும் கொண்டவர்தான். ஆனால், மகாவீரர் கடைப்பிடித்த முறையைப் புத்தர் கடைப்பிடிக்காததால், அவர் உடலில் நறுமணம் எழவில்லை. மகாவீரருக்கு நீண்ட காலத்திற்கு முன்பு மரணமடைந்த பார்சுவ நாதருக்கு அந்த நறுமணம் இருந்தது. அவர் ஒரு தீர்த்தங்கரர். பார்சுவ நாதர் காலத்து முனிவர்கள் மகாவீரர் காலத்திலும் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள், பார்சுவ நாதரின் உடல் மணம் போலவே மகாவீரரின் உடல் மணமும் இருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். குறிப்பிட்ட மந்திர உச்சாடனம் குறிப்பிட்ட நறுமணத்தை மட்டும் தருகிறது என்பது இதனால் தெரிகிற உண்மை.

தீர்த்தங்கரரை ஆதாரப்பூர்வமாக அடையாளம் கண்டுகொள்வது, நினைவாற்றலின் அடிப்படையில் அமைந்திருப்பது. மகாவீரர் ஒரு தீர்த்தங்கரர் என்று எல்லாரும் சொன்னாலும் அவர் தம்மை அப்படிச் சொல்லிக் கொள்ளவில்லை. மக்காலி கோஷல் அப்படித் தம்மைச் சொல்லிக் கொண்டார். ஆனால், அவரால் நிரூபித்துக் காட்ட முடியவில்லை.

நறுமணம் ஏன் அளவுகோலாகக் கொள்ளப்பட்டது என்று நீங்கள் வியப்படையலாம். குறிப்பிட்ட மந்திரத்தை இடையறாது ஓதிக் கொண்டிருப்பவருக்குள் குறிப்பிட்ட மலர் ஒன்று பூத்துவிடும். அதன் நறுமணமே அவரிடம் கமழும். அதுவே தீர்த்தங்கரர் தோன்றிவிட்டதற்கான அடையாளம்.

மக்காலி கோஷல், அஜித் கேசகம்பாளன், சஞ்சய் விலேதி புத்திரன் ஆகியோர் மகா அறிவாளிகள். அவர்கள் தம்மைத் தீர்த்தங்கரர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். மகாவீரருக்குச் சமமானவர்கள் அவர்கள். ஒவ்வொருவருக்கும் ஆயிரக் கணக்கில் சீடர்களும் இருந்தார்கள். சீடர்களும் அவர்களைத் தீர்த்தங்கரர்கள் என்றார்கள் - ஆனால், அவர்களெல்லாம் ஒன்றுமில்லாமல் போய்விட்டார்கள்.

இதற்கு மாறாக, மகாவீரர் மௌனம் சாதித்தார். கடைசியில், அவர் உடலின் நறுமணம் கொண்டு, அவரே தீர்த்தங்கரர் என்று தீர்மானிக்கப்பட்டது.

ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனிப்பட்ட நறுமணம் உண்டு. ஓம்கார உச்சாடனம் செய்து வருபவர்கள் குறிப்பிட்டதொரு நறுமணத்தை உணர்வார்கள். இதேபோல, ஒவ்வொரு மந்திரம் குறிப்பிட்டதொரு உள்ளொளியை வெளிப்படுத்தும். இந்த உள்ளொளியைக் கொண்டே ஒரு கோயிலில் எவ்வளவு வெளிச்சம் இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

கண்கூசும் மின் விளக்குகளைக் கோயில்களில் பொருத்துவது அறியாமை. அடக்கமான, கண்ணை உறுத்தாத விளக்குகளே - உள்ளொளிக்கு ஏற்றபடி - ஏற்றி வைக்க வேண்டும். அதனால்தான் நமது ஆலயங்களில் நெய் விளக்குகள் ஏற்றப்பட்டு வந்தன.

ஒளிச்சுடர் நோக்கித் தியானம் செய்யாதவர்க்கு நெய் விளக்கிற்கும், மண்ணெண்ணெய் விளக்கிற்கும் உள்ள வித்தியாசம் தெரியாது. மண்ணெண்ணெய் விளக்கொன்றைப் பற்ற வைத்து, அதன் சுடர் நோக்கி ஒரு மணிநேரம் உட்கார்ந்து பாருங்கள். கண்கள் எரியும்; சோர்வடையும்; வலிக்கும்.

நெய் விளக்கேற்றி, அதன் சுடர் நோக்கி ஒரு மணிநேரம் அமர்ந்து பாருங்கள். உங்கள் விழிகள் குளிர்ச்சியடையும்; அமைதியடையும். பல்லாயிரக் கணக்கானவர்கள் தம் அனுபவம் கொண்டு உணர்த்திய உண்மை இது. நெய் விளக்கு உள்ளொளிக்காக ஏற்படுத்தப்பட்ட புற ஒளி; மாற்று. உள்ளொளிப் போலவே, வெளியில் ஒரு விளக்கை

ஏற்றிவைக்க முடியாது. அதனால், கிட்டத்தட்ட அதே அளவுள்ள நெய் விளக்கை மாற்றாகக் கண்டு பிடித்தார்கள்.

அதேபோல, ஒரு மந்திரம் சொல்லி வருகையில் பிறக்கும் உள்மணத்திற்குச் சமமான நறுமணம் வெளியில் இல்லை. என்றாலும், ஓரளவு அதற்குச் சமமாக உள்ள ஒரு நறுமண மலரை முன்னோர் பூசனைக்கு ஏற்றதாக முடிவு செய்தார்கள்.

சந்தனக் குழம்பு கோயில்களில் நிறையப் பயன்படுத்தப்படுகிறது. நெற்றியில் சந்தனப் பொட்டு வைக்கும் இடம் 'ஆக்ஞா சக்கரம்' என்று யோகநூல் கூறுகிறது. சில மந்திரங்கள் ஓதி வருகையில் நமக்குள்ளே சந்தன மணம் பிறக்கும். அந்த நறுமணத்தின் மூலப் பிறப்பிடம் 'ஆக்ஞா சக்கரம்' என்ற ஆணைச் சக்கரம். அதாவது நெற்றியின் மையம்.

நெற்றியின் மையமாகிய மூன்றாம் கண் அழுத்தம் பெறும்போது, அங்கே சந்தன மணம் வெளிப்படுகிறது! அதனால்தான், அந்த அனுபவ அடையாளமாக சந்தனத் திலகம் இடப்படுகிறது. அது வெளிப்படும்போது, நெற்றியின் மையத்தில் 'ஐஸ்' வைத்தது போன்ற ஒரு குளிர்ச்சி தோன்றுகிறது. ஐஸின் குளிர்ச்சிக்கும் சந்தனக் குளிர்ச்சிக்கும் உள்ள வேறுபாடு, மண்ணெண்ணெய் விளக்கிற்கும், நெய் விளக்கிற்கும் உள்ள வேறுபாடு போன்றது.

ஐஸ் குளிர்ச்சியானது. ஆனால், அடக்கமாய், ஆதரவாய், அமைதியாய் அது இல்லை. பனிக்கட்டியின் குளிர்ச்சி சற்று நேரம்தான். அப்புறம் சூடுதான். ஆனால், சந்தனம் அடக்கமான ஆறுதலான தன்மை கொண்டது. இவ்வகைத் தன்மை, ஆழமானது. பனிக்கட்டியை ஆணைச் சக்கரத்தின் மேல் வைத்தால் அதன் குளிர்ச்சி தோல் அளவில்தான். ஆனால், சந்தனக் குளிர்ச்சி ஆழமாய்ச் செல்வது. அது மூன்றாவது கண் இருக்குமிடத்தைத் தொடக் கூடியது.

ஆணைச் சக்கர அனுபவம் கண்டவர்கள், அதன் குளிர்ச்சிக்குச் சமமாகத்தான் சந்தனைத்தைக் கண்டு பிடித்தார்கள். மூன்றாவது கண் வெளியிடும் அதே நறுமணம்தான் சந்தனத்திலும் இருக்கின்றது!

இந்த வெளிச் சாதனங்கள் எல்லாம் அடிப்படைகளுக்குச் சமமான மாற்றுகள். அவற்றை ஆலயங்கள் வழங்கும் போது அவற்றிற்குச் சக்தி ஏறிவிடுகின்றன.

குளிக்காமல் கோயிலுக்குப் போவதும் முறையல்ல. குளிப்பதால் ஒருவரது யாந்திரிகத்தனம் நீங்கி விடுகிறது; பழைய சிந்தனைத் தொடர்புகள் அறுந்து விடுகின்றன.

மணியடிக்காமலும் உள்ளே நுழைய மாட்டார்கள். பழைய உடையிலும், அழுக்குப் பிடித்த உடையிலும் கோயிலுக்குப் போக மாட்டார்கள். கோயிலுக்குப் போகும்போது பட்டாடை அணிவதே சிறந்தது. உடலின் மின்சாரத்தைப் பட்டாடை வெளியே காப்பதோடு, அதிகரிக்கவும் செய்யும். எவ்வளவு முறை அணிந்தாலும் பட்டு, புதியது போலவே இருக்கும்.

இவ்வகை முன்னேற்பாடுகளாலும், ஒழுங்கமைப்புகளாலும், கோயில் சக்தித் துடிப்புடன் விளங்குகின்றது. அதை யார் கடந்து சென்றாலும், அதன் காந்தப் புலம் அவர்களைப் பாதித்து விடுகிறது.

மகாவீரரைச் சுற்றிலும் ஒரு குறிப்பிட்ட எல்லை வரை யாரும் வன்முறைச் செயலில் ஈடுபட முடியாது என்று சொல்வார்கள். அவர் எங்கே இருந்தாலும் சரி. அவரது வெளிவட்டச் சூழல் அமைதியாற்றல் நிரம்பப் பெற்றிருப்பதால், யாராலும் வன்முறையில் ஈடுபட முடியாமல் போய்விடும்.

மகாவீரர் ஒரு நடமாடும் கோயில். அவரைச் சுற்றிய பகுதியில் எது நடந்தாலும், அது அவரது பாதிப்பிற்கு உள்ளாகிவிடும். அது ஒரு சாந்தப் பிரபஞ்சம்.

தெய்ல்ஹார்ட் தெ சார்டின் அந்தச் சூழலுக்குக் கண்டுபிடித்த புதுச் சொல் 'நூ ஸ்பியர்.' அது, 'அட்மாஸ்பியர்' என்ற சொல்லுக்கு மாற்றாகக் கண்டுபிடிக்கப்பட்டது. சில வன்முறைகள் நிகழாத மனவியல் சூழல், அல்லது பருவகாலச் சூழல்தான் 'நூ ஸ்பியர்.'

முற்காலத்தில், ஆசிரமங்கள், காட்டில் முனிவர்களால் நடத்தப்பட்டு வந்தன. அதன் சுற்றுச் சூழல் தூய்மை கொண்டதாய், எல்லை மீறக் கூடாததாய் அமைந்திருந்தன. சீடர்கள் ஏதாவது தவறு செய்துவிட்டால், குரு, அவர்களைத் தண்டிக்காமல் தம்மையே தண்டித்துக் கொள்வார்! அந்தச் சூழல் தன் பண்பை இழந்து விட்டதாகக் குரு நினைப்பதாலேயே அவ்வாறு செய்து கொள்கிறார். சூழல் கெட்டுப் போனதற்காக சீடர்களை எவ்வாறு தண்டிப்பது? வேறு ஏதோ ஒரு காரணத்தால் தூய்மை இழந்ததற்கே சீடர்களைத் தண்டிப்பதில் நியாயமில்லை யென்று குருவே தம்மைத் தண்டித்துக் கொள்கிறார்.

இதைக் காந்தி தவறாகப் புரிந்து கொண்டுவிட்டார். தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்வது, மற்றவர்களை நிர்ப்பந்தம் செய்வதற்காக இருக்கக் கூடாது. இன்னொருவர் மீது தம் கருத்தைத் திணிப்பதற்காக அதைச் செய்யக் கூடாது. மற்றவர் மனதை மாற்ற,

'சாகும்வரை உண்ணாவிரதம்' என்னும் சுய சித்திரவதை போன்றதல்ல, முனிவர்கள் செய்தது. காந்தி அதைச் சரியாகப் புரிந்து கொள்ளவே இல்லை.

யாரையோ மாற்ற, முனிவர் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவில்லை; ஆற்றல் இழந்துபோன ஆசிரமச் சூழலுக்கு ஆற்றலை ஏற்றவே அவ்வாறு செய்தார். அந்தச் சூழல் புத்துயிர்ப்புப் பெற்றால், அந்தச் சூழல் மாற்றமடைந்தால், அங்கே வாழ்கிறவர்களும் மாற்றமடைவார்கள். இன்னொருவர் மனதை மாற்றுவது என்ற பேச்சுக்கே அதில் இடமில்லை. தம்மைச் சுற்றிலும் ஒருவித காந்த சக்தியை ஏற்றுவதற்காகவே, முனிவர்கள் தம்மைத் தண்டித்துக் கொண்டார்கள்.

விவரம் உள்ள மனிதர்கள் இந்தச் சூழலைப் பயன்படுத்திக் கொள்வார்கள். மகாவீரர் நடமாடும் கோயில். அப்படிப்பட்டவர்கள் ஓரிடத்தில் நிலையாக இருக்க மாட்டார்கள். அதனால், மக்களுக்கு நிலையான சக்தி மையம் ஒன்று தேவைப்பட்டது. அது, இந்த ஊரின் சக்தி மையமாகவும் இருக்க வேண்டும். அதைச் சுற்றிலும் வாழ்ந்து மக்கள் மாற்றம் பெற்றார்கள்.

அதனால் நமக்கொரு கோயில் அவசியமாயிற்று. அங்கே தினசரி சென்று நம் காணிக்கைகளைச் செலுத்திவிட்டு ஏதாவது பெற்றுவர ஆரம்பித்தோம். என்ன பெற்றோம் என்பது தெரியாமலேயே ஏதோ பெற்று வந்தோம்.

எல்லாம் இயல்பாக, தானாக நிகழ்ந்தது. ஒரு கோயிலைக் கடந்து போகிறவர்கூட மதிப்புமிக்க எதையோ பெற்றார். கோயிலைச் சுற்றிலும் பெரியதொரு காந்தப் புலம் இருந்தது. இரும்புத் துகள்களைக் காந்தம் ஈர்ப்பது போல, அந்த வழியாகப் போகிறவர்களும் கோயிலின் ஈர்ப்புக்கு உள்ளாகி, மாற்றம் பெற்றார்கள். அதன் ஆற்றல் அவர்களைப் பாதிக்கவே செய்தது. கோயிலின் சுற்றுச் சூழலுக்கு அவ்வளவு சக்தி.

மோசஸ் மலையேறிச் சென்றபோது, புனித நெருப்பு ஒன்றைக் கண்டாராம். ஒரு பெரிய புதர்ப் பகுதி, தீப்பற்றி எரிய, அதன் நடுவே ஒரு செடி பச்சை இலைகளுடன் பூப்பூத்துக் குலுங்கியதாம்! மோசஸ் கடவுளைத் தேடிப்போன மனிதர். அவர் அந்தச் செடியை நோக்கி ஓரடி எடுத்து வைத்தார். சட்டென ஒரு குரல் ஒலித்தது. ''முட்டாளே, நில்! உன் மிதியடிகளைக் கழற்றிவிட்டு உள்ளே வா!'' என்றது அந்தக் குரல்!

அங்கே எல்லைக்கோடு எதுவும் காணப்படாததால் மோசஸ் தொடர்ந்து மேலே நடந்தார். குறிப்பிட்ட இடம் வந்ததும் ஏதோ ஒரு மாற்றம் தம்மில் ஏற்படுவதை உணர்ந்தார். அது உள்ளில் நிகழ்ந்த மாற்றம். ஆகவே அவர் அங்கே சட்டென நின்று, தம் காலணிகளைக் கழற்றிப் போட்டார். அந்த இடம்தான் சக்தியாற்றலின் எல்லை.

அதன்பிறகு, அதைக் கடந்து உள்ளே சென்று, அந்த இடத்தின் புனிதம் கெட நடந்து கொண்டதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

ஒரு கோயிலின் சுற்றுப்புறம் சக்தி ஏறப் பெற்றதாக இருக்கும்; உயிர்த் துடிப்புக் கொண்டதாக இருக்கும். அந்த ஆற்றல் அந்தக் கிராமத்தையே காக்கும். இது கற்பனையன்று. பயன்கள் விளைந்தமைக்குச் சான்றுகள் உண்டு. இந்தியக் கிராமங்கள் எளிமையும், தூய்மையும், களங்கமற்ற பண்பும் கொண்டு பல்லாயிரம் ஆண்டுகளாகத் திகழ்வதற்குக் காரணம், கோயில்களின் சக்திச் சூழல்தான். எவ்வளவு ஏழ்மையான சிற்றூராக இருந்தாலும் அதற்கொரு கோயில் கட்டாயத் தேவை. கோயில் இல்லாவிட்டால் அங்கே ஒத்திசைவு இருக்காது; ஒரே குழப்பம்தான் நிகழும்.

பல்லாயிரம் ஆண்டுகளாக, நமது கிராமங்கள் ஒருவகைப் புனிதம் காத்து வந்திருக்கின்றன. அந்தப் புனிதத்தின் கண்களுக்குப் புலப்படாத ஆற்றல் மிகப் பெரியது. கீழை நாடுகளின் பண்பாட்டைச் சிதைப்பது இந்தக் கோயில்களின் சக்திச் சூழலைக் கெடுப்பதுதான். சக்தித் துடிப்புள்ள கோயில்கள் அழிந்தால், கீழை நாட்டுக் கலாசாரம் தகர்ந்து போகும்.

இன்றைய மக்களுக்குக் கோயிலின் மதிப்புத் தெரியவில்லை. பள்ளி, கல்லூரிகளில் படிப்பவர்களுக்கு மொழியும், தர்க்கமும் கற்றுக் கொடுக்கப்படுகிறது - அதனால் அறிவு வளர்கிறதே தவிர, இதயம் மூடித்தான் கிடக்கிறது.

உயிர்த்துடிப்புள்ள கோயிலின் மகிமை இன்றைய மனிதருக்குத் தெரியவில்லை. அதன் அர்த்தமும் புரியவில்லை. இதனால், நமது கோயில்கள் மெல்ல மெல்லத் தம் முக்கியத்துவத்தை இழந்துவிட்டன.

கோயில்கள் மீண்டும் உயிர்த்துடிப்பு பெறாதவரை இந்தியா இந்தியாவாக இராது. இந்தியாவின் இரசவாதம் முழுவதும் கோயில்களில்தான் இருக்கின்றன. இந்தியா, எல்லாவற்றையும் கோயில்களிடமிருந்தே பெற்றது. ஒரு காலத்தில், மனிதனுடைய

வாழ்வில் நிகழ்வன எல்லாமே, கோயிலோடு தொடர்பு கொண்டதாக அமைந்திருந்தது.

அவனுக்கு உடல்நிலை சரியில்லை என்றால் கோயிலுக்குத்தான் போவான். மனதில் கவலை ஏற்பட்டால் கோயிலுக்குச் செல்வான். மகிழ்ச்சி ஏற்பட்டாலும் நன்றி தெரிவிக்கக் கோயிலுக்குத்தான் ஓடுவான்.

குடும்பத்தில் ஏதாவது நல்ல காரியம் என்றால் மலர்களும் பழங்களும் ஏந்தி அவன் கோயிலுக்குத்தான் செல்வான். வாழ்வில் சிக்கல் ஏற்பட்டாலும் கோயில்தான் புகலிடம். இந்தியனுக்குக் கோயில்தான் எல்லாம். அவனது எல்லா ஆசா பாசங்களும் கோயிலைச் சுற்றியே செயல்பட்டன. அவன் எவ்வளவு ஏழையாக இருந்தாலும், தனது கோயிலைத் தங்கமும் வெள்ளியும் நகைகளும் கொண்டு அலங்கரித்தான்.

இன்று மனிதர்கள் பட்டனியால் செத்துக் கொண்டிருக்கையில், கோயிலின் ஆடம்பரச் செல்வச் செழிப்பு, பைத்தியக்காரத் தனமாகத் தோன்றுகிறது. ''ஆலயங்களை இடித்துத் தள்ளுங்கள்! மருத்துவ நிலையங்களையும், பள்ளிகளையும் கட்டுங்கள்; கோயில்கள் வீடற்றவர்களின் புகலிடமாக இருக்கட்டும்!'' என்றெல்லாம் சொல்லப்படுகின்றன.

இன்று, கோயில்களின் உண்மையான பயன்பாடு மறந்துபோய் விட்டது. ''மனிதர்கள் வறுமையால் செத்துக் கொண்டிருக்கையில், கோயில்களில் இவ்வளவு தங்க வெள்ளி நகைகள் எதற்காக?'' என்று நாம் நினைக்கிறோம்.

ஆனால், இந்தத் தங்கமும் வைரமும் அந்த வறுமைப்பட்ட மக்கள்தாம் கொடுத்திருக்கிறார்கள் என்பதை மறந்துவிடக் கூடாது. மதிப்பு மிக்கதாக எதையெல்லாம் அவர்கள் நினைத்தார்களோ, அதையெல்லாம் அவர்கள் தம் தெய்வங்களுக்கு வழங்கினார்கள். வாழ்வின் உண்மையான மதிப்பீட்டை அவர்கள் கோயிலிருந்தே கற்றுக் கொண்டார்கள்.

மனநிறைவோடு கோயிலுக்குத் திருப்பிச் செலுத்த தங்களால் முடியாது என்பதால், இருப்பதில் சிறந்ததைக் காணிக்கை ஆக்கினார்கள். அதற்குக் காரணங்கள் உண்டு. கண்ணுக்குப் புலப்படாத கோயிலின் சக்தியைத் தொடர்ந்து அவர்கள் பெற்றுக்

கொண்டிருந்தார்கள். கோயில் அருகில் வாழ்வதால் தெளிவான, வெளிப்படையான பயன்களை அவர்கள் பெற்று வந்தார்கள்.

மனிதன் மறதியுள்ளவன். நல்லதையும், புனிதத்தையும் நாம் மறந்து விடுகிறோம். முக்கியத்துவம் அல்லாத அற்ப விஷயங்களை நன்றாக நினைவில் வைத்திருக்கிறோம், இருபத்து நான்கு மணி நேரமும்! ஆனால், கடவுளை நினைப்பதற்கு சற்று முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால், நமது ஆசைகளும், உணர்ச்சிகளும் நினைவில் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. அவை எப்போதும் நம்மிடம் இருந்து கொண்டே இருக்கின்றன. மலையிறங்கிப் போவது எளிது. மலையேற்றம்தானே சிரமம்!

தேவைப்படும் போதெல்லாம் சென்று வரத்தான் கோயில், ஊரின் நடுவில் கட்டப்பட்டது. தேடல் என்பது உயிர்த்துடிப்புடன் இருந்து கொண்டே இருந்தது. மிகச் சிலருக்குத்தான் அந்தத் தவிப்பு இருக்கும். விமானங்கள் கண்டுபிடிக்கப்படாத காலத்தில், விமானத்தில் பறக்கும் ஆசை எப்படி ஏற்படும்?

ஆனால், ரைட் சகோதரர்களுக்கு அந்த ஆசைக் கனவு தோன்றியது! அதனால் தான் அவர்கள் விமானத்தைக் கண்டுபிடித்தார்கள். ஆனால், சாதாரண மக்களுக்கு, விமானத்தைப் பார்த்தால்தான் அந்த ஆசை வரும். அதற்கு முன் எந்தக் கனவும் தோன்றாது.

நமக்குள் இருக்கும் தெய்விகத்தின் உருவகம்தான் கோயில். அது நமது மனதில் மிதந்து கொண்டே இருப்பது. தெய்விகத்திற்கு பருவடிவம் கொடுக்க முடியாதவர்களுக்கு அந்த நிலை ஏற்படாது. அப்படிப்பட்டவர்களுக்குக் கோயில் தேவையற்ற ஒன்று. இப்படிப்பட்டவர்களே கோயில் வேண்டாம் என்று சொல்கிறார்கள். ஆரம்ப காலத்தில், ''கோயில்களை இடித்துத் தள்ளுங்கள்!'' என்று நானே சொல்லியிருக்கிறேன்.

பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக அதன் தேவையை உணர ஆரம்பித்தேன். தெய்விகத்திற்கு உருவம் கொடுக்க முடியாதவர்களால் அதை எவ்வாறு உணர முடியும்? இதில் ஒரு சிக்கலும் எழத்தான் செய்கிறது.

மகாவீரருக்குக் கோயில் தேவைப்படவில்லை. அவருடைய பிரக்ஞையின் தளம் அப்படி. அதன் தேவையை அவர் உணர்ந்திருந்தால் அப்படிச் சொல்லியிருக்க மாட்டார்.

இருபத்து நான்கு மணிநேரமும் உற்சாகம் தரும் மையம் கோயில். உங்கள் வீடு, கடை, மனைவி, மக்கள் செல்வம் எல்லாவற்றிற்கும் அப்பால், திறந்திருக்கும் ஒரு கதவு கோயில்தான். அது உங்கள் ஆசைக் கதவோ, கடை வீதிக் கதவோ அல்ல.

அது, செல்வத்தையோ, புகழையோ, வழங்காது; உங்கள் ஆசைகளை நிறைவேற்றி வைக்காது. சந்தையும் சம்சாரமும் சலித்து விடும்போது, கோயில் ஆறுதலும், அமைதியும், நிம்மதியும் கொடுக்கிறது.

கோயிலை இடித்துவிட்டால், வேறு மாற்றுக் கிடையாது. வீட்டுணவு சலித்துவிட்டால் விடுதிக்குச் சென்று உண்ணலாம். கடைவீதி கசந்துவிட்டால் எங்கே போவது?

கொடுக்கல் வாங்கல் உலகிற்கு அப்பால், ஒரு வித்தியாசமான பரிமாணத்தை வழங்குகிறது கோயில். சந்தை வாழ்வால் சரிந்து போனவர்களே கோயிலைக் கட்டியிருக்க வேண்டும்.

பேரம் பேசும் இடமல்ல கோயில். உலக வாழ்வின் செயல் பாடுகளால் சக்தி வற்றித் தளர்ந்து, நிம்மதி இழந்து போனவர்களுக்கு ஆறுதலும், அமைதியும், நிம்மதியும், தரும் இடம் கோயில்.

கோயிலுக்குள் பிரவேசிக்க நிபந்தனை எதுவும் இல்லை. இவ்வளவு பணம் இருந்தால்தான், இவ்வளவு அறிவு இருந்தால்தான், இவ்வளவு கவுரவம் இருந்தால்தான் கோயில் பிரவேசம் சாத்தியம் என்றெல்லாம் இல்லை. நீங்கள் எப்படி இருந்தாலும் கோயில் உங்களை ஏற்றுக் கொள்ளும். உங்களை நீங்களாகவே ஏற்பதுதான் கோயிலின் எளிய சிறப்பு.

வாழ்க்கை அடிக்கடி சலித்துப்போய் விடுகிறது. அந்த வேளைகளில் பிரார்த்தனைக் கதவு திறந்து கிடப்பதை நீங்கள் உணரவேண்டும். ஒருமுறை அதைத் திறந்து பார்த்து விட்டால் மறுபடியும் மறுபடியும் திறக்க முடியும். நீங்கள் வீட்டிலிருந்தாலும், கடையிலிருந்தாலும் அதைத் திறக்க முடியும்.

எப்போது விரும்பினாலும், எந்த நேரத்திலும் திறந்து விடும் அளவுக்கு, அது கைக்கெட்டும் தூரத்திலேயே இருக்கிறது. ஆனால், அப்படிப்பட்ட கணங்கள் அபூர்வமாகவே வருகின்றன. மகாவீரரையோ புத்தரையோ தேடித் தீர்த்த யாத்திரை போக வேண்டியதில்லை. அந்தக் கணங்கள் மிகத் தற்காலிகமானவை. எளிதில் நுழையக் கூடிய இடங்கள் கைக்கெட்டும் தூரத்தில் இருக்க வேண்டும்.

குழந்தைப் பருவ நினைவுகள் மிக முக்கியமானவை. ஒரு குழந்தை, தனது ஏழாவது வயதிலேயே எல்லா அடிப்படைகளையும் கற்றுக் கொண்டு விடுகிறது என்று விஞ்ஞானிகள் கணித்திருக்கிறார்கள். அதன் அடிப்படை மீதுதான் வாழ்வின் மேல் கட்டுமானம் அமைகிறது. அப்புறம் சேரும் அறிவெல்லாம் கொஞ்சமே; ஏழாவது வயதில் அமைவதே அடித்தளம் என்கிறார்கள்.

ஒரு குழந்தையின் ஏழாவது வயதில், கோயிலின் முக்கியத்துவத்தை நாம் ஊன்றவில்லையானால், பிற்காலத்தில் அந்த நம்பிக்கை ஏற்படுவது மிகவும் சிரமமாகி விடும். பெரும்பாடு பட வேண்டியிருக்கும். அப்போதும் கூட அந்த நம்பிக்கை மேலோட்டமாகவே இருக்கும்.

அதனால்தான், பிறந்தவுடனே குழந்தையின் மனதில் அது நிலைக்க வேண்டும் என்று நினைக்கிறோம். கோயிலின் சூழலில் அது வாழவேண்டும். மெல்ல மெல்ல அது குழந்தைக்குள் ஆழப்பதிந்துவிட வேண்டும். கோயில், குழந்தையின் பிரிக்க முடியாத பகுதியாகிவிடும்.

அது வளர்ந்து உலக வாழ்வில் ஈடுபடும்போதும், கோயில் அதற்குள் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கும். காரணம், அதுதான் வாழ்வின் இறுதியில் அவனுக்குப் புகலிடமாக இருக்கப் போகிறது. அதனால்தான் பிறப்பு முதலே கோயில் ஒருவர் மனதில் ஆழப் பதிந்திருக்க வேண்டும் என்கிறோம். இல்லா விட்டால் பிற்காலத்தில் சிரமம்...

கோயிலின் சுற்றுப்புறத்தில் வாழ்பவர் மனதில் அது ஒரு பதிவை ஏற்படுத்தி விடுகிறது. அது ஒரு கருத்தாக அல்லாமல், வாழ்வின் ஒரு பகுதியாக அடிமனதின் ஆழத்தில் பதிந்து விடுகிறது. அதனால்தான், உலகம் முழுவதிலும், கோயில்களின் உருவங்கள் மாறி இருந்தாலும், கோயில் என்ற ஒன்று தவிர்க்க முடியாதபடி இருக்கின்றது.

இன்று அது இன்றியமையாத ஒன்றாக இல்லை. அதன் இடத்தை வேறு இடங்கள் பிடித்துக் கொண்டுவிட்டன, பள்ளிகள், மருத்துவமனைகள், நூலகங்கள் என. இவையெல்லாம் கோயிலுக்கு இணையாக முடியாது. ஆழ்ந்த பொருளைச் சுட்டிக் காட்டவல்ல மையமே தேவைப்படுகிறது. அதிகாலையில் எழுந்தவுடன் கோயில் மணியோசை நம் காதுகளில் ஒலிக்க வேண்டும். இரவு படுக்கப் போகும்போது தேவகீதங்கள் நம் காதில் விழவேண்டும்.

மகாவீரர் வாழ்வில் ஒரு நிகழ்ச்சி...

திருடன் ஒருவன் மரணப் படுக்கையில் கிடந்தான். அவனுடைய மகன், 'கடைசியாக ஏதாவது அறிவுரை சொல்லுங்கள் அப்பா,' என்று கேட்டான்.

''மகனே, மகாவீரர் என்ற ஆளிடம் எதுவும் வைத்துக் கொள்ளாதே. அந்த ஆள் இந்த ஊருக்கு வருவதாக இருந்தால், நீ ஊரிலேயே இருக்காதே! எங்காவது ஓடிவிடு! எதிர்பாராமல், அவர் பாதையில் வருவது தெரிந்தால் ஓடி ஒளிந்துகொள்! எங்காவது அவர் பேசுவது உன் காதில் விழுந்தால், காதுகளை உடனே பொத்திக் கொள்! எச்சரிக்கையாக இரு!'' என்றான் திருடன்.

வியப்படைந்த மகன், 'ஏன் அப்படி?' என்று கேட்டான். அதற்குத் திருடன், ''சும்மா விவாதம் செய்யாதே! சொல்வதைக் கேள்! அந்த ஆளை நெருங்கினால் போதும், நம் தொழில் சர்வநாசம் அடைந்துவிடும். அப்புறம் பட்டினி கிடந்து சாகவேண்டியதுதான்,'' என்றான்!

அடுத்து நடந்ததுதான் சுவையானது!

திருடனின் மகன் முடிந்தவரை மகாவீரரை விட்டு விலகியே இருந்தான். ஆனால், ஒருநாள், தவறு நேர்ந்துவிட்டது.

மகாவீரர் ஒரு மாமரத்தடியில் மௌனமாக அமர்ந்திருந்தார். அது தெரியாமல் திருடன் மகன் அந்தப் பக்கமாகப் போய்விட்டான்.

சட்டென மகாவீரர் பேச ஆரம்பித்து விட்டார். திருடன் மகனின் காதில் அரை வாக்கியம் விழுந்தவுடன் சட்டெனக் காதுகளைப் பொத்திக் கொண்டான்.

ஆனால், அந்த அரை வாக்கியம் இருக்கிறதே, அது அவனை என்னவெல்லாமோ செய்துவிட்டது. காவலர்கள் அவனை விரட்ட ஆரம்பித்தார்கள். சில வாரங்களில் அவன் பிடிபட்டு விட்டான்.

அவனது குலத்தொழிலே திருட்டுத்தான். ஆதாரம் எதுவும் இல்லாதபடி திருடுவதில் அவன் வல்லவன். ஏராளமான திருட்டுகள் செய்தும் அவன் அதுவரை அகப்படாதபடி நடந்து கொண்டான். இப்போது அவன் அகப்பட்டு விட்டாலும் குற்ற ஆதாரம் எதுவும் இல்லை. அவனாக வாக்குமூலம் கொடுத்தால்தான் உண்டு!

அவனை எக்கச் சக்கமாகக் குடிக்க வைத்தார்கள். இரண்டு மூன்று நாட்கள் போதை மயக்கத்தில் சுருண்டு கிடந்தான். அவன் கண்களைத் திறந்து பார்த்தபோதும் கூட அரை நினைவுதான்.

அப்போது அவன் கண்டது, அவனைச் சுற்றிலும் அழகிய பெண்கள்!

''நான் எங்கிருக்கிறேன்?'' என்று கேட்டான் அவன்.

''தம்பி, நீ செத்துப் போனாய். சுவர்க்கத்திற்கோ நரகத்திற்கோ அழைத்துப்போக ஆட்கள் காத்திருக்கிறார்கள். உன் குற்றங்களை ஒப்புக் கொண்டு விட்டால் இந்த அழகிகளுடன் சுவர்க்கம் போகலாம்,'' என்று சொன்னார்கள்!

உண்மை சொல்லிவிட்டால் சுவர்க்கம் போகலாம் என்று நினைத்த அவனுக்கு, மகாவீரர் சொல்லக் கேட்ட அரைவாக்கியம் நினைவிற்கு வந்தது.

மகாவீரர் பேசியது கடவுள்களையும், பேய்களையும் பற்றி எமதூதர் பற்றியும் அவர் குறிப்பிட்டிருந்தார். எமதூதருக்குக் கால் தரையில் படியாது என்றும் அவன் காதில் விழுந்தது. கண்ணைத் திறந்து பார்த்தால் அப்படியெல்லாம் இல்லை! அதனால், அவன் எச்சரிக்கை அடைந்தான்!

அது தந்திரம் என்பது புரிந்துவிட்டது! இனி எதற்கு வாக்குமூலம் கொடுப்பது? அதனால், தான் எந்தக் குற்றமும் செய்யவில்லை என்று சொல்லிவிட்டான்!

என்ன செய்வார்கள்! பேசாமல் அவனை விட்டுவிட்டார்கள்!

அதற்குப் பிறகு அவன் நேராக மகாவீரரிடம் ஓடினான். அவர் பாதங்களில் விழுந்தான். அவன் முன்பு கேட்ட அந்த அரை வாக்கியத்தை - முழுசாகக் கேட்க விரும்புவதாகச் சொன்னான். அரை வாக்கியமே தன்னை இவ்வளவு தூரம் காப்பாற்றிய தென்றால், முழு வாக்கியம் எவ்வளவு பயனுடையதாக இருக்கும்!

அதன்பிறகு அவன் அவரிடம் பரிபூரண சரணாகதி அடைந்தான்.

அவன் சிக்கித் தூக்குமேடை ஏறியிருப்பான். மகாவீரரின் அரை வாக்கியம் கேட்டு அவன் தப்பினான்.

'ஒரு ஞானியின் அரைவாக்கியம் கூட, கடைத்தேறப் போதுமானது' என்று மகாவீரர் அடிக்கடி சொல்வதுண்டு.

அதேபோல, கோயிலருகே ஓடுகிறவனோ, கவனமின்றிக் கடந்து செல்கிறவனோகூட, கோயிலிலிருந்து வெளிப்படும் ஒலி அதிர்வுகளுக்கு ஆட்பட்டு விடுவான். அதன் நறுமணத்தை நுகர்வான்... அது அவனுக்கு உதவும்படியாகவே அமையும்.



# புனித தலங்களின் இரசவாதம்



பசிபிக் பெருங்கடலில் ஈஸ்டர் தீவு என்று ஒன்று இருக்கிறது. அதில் இருபதடி உயரமுள்ள கற்சிலைகள் ஆயிரம் இருக்கின்றன. அந்தத் தீவின் மக்கள் தொகை இப்போது இருநூறுதான்.

அந்தத் தீவு கண்டு கொள்ளப்பட்டபோது ஓர் உண்மை புலப்பட்டது. அந்தத் தீவில், இருநூறு பேருக்கான உணவுப் பொருள்தான் உற்பத்தியானது. அதனால், இருநூறு பேருக்கு மேல் அதன் மக்கள் தொகை அதிகரிக்க வழியில்லை.

மக்கள் தொகை இருநூறு. ஆனால், சிலைகள் ஆயிரம்! இது வியப்பான விஷயம் அல்லவா? ஆள் ஒன்றுக்கு ஐந்து சிலைகள்!

அன்றாட வாழ்க்கைத் தேவைகளுக்கே திண்டாடிக் கொண்டிருந்த அந்த மக்கள், விரும்பியிருந்தாலும் கூட அப்படிப்பட்ட பெரிய சிலைகளை வடித்திருக்க முடியாது.

அப்படியென்றால் அதை உருவாக்கியது யார்? ஏன்? அவர்களின் நோக்கம்தான் என்ன? வரலாற்றாசிரியர்களின் முன்னால் இப்படிப் பல வினாக்கள் எழுந்தன.

மத்திய ஆசியாவில் இதே போலப் புதிரான இடம் ஒன்று இருக்கிறது. அந்த இடம் ஒரு விமான நிலையம் போல் தோன்றுகிறது. ஆனால், அந்தக் காலத்தில் விமானங்களே கண்டுபிடிக்கப்படவில்லை! பதினைந்து அல்லது இருபதினாயிரம் ஆண்டுகளுக்கு முன் சீர் செய்யப்பட்ட இடம் அது! விமானம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகுதான், அது விமான நிலையமாக உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்று யூகிக்க முடிந்தது!

தீர்த்த யாத்திரைத் தலங்களின் தேவையை உணர்ந்தால் ஒழிய, அதன் முக்கியத்துவத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியாது என்பதற்காகவே இதை நான் சொல்கிறேன்.

ஈஸ்டர் தீவின் சிலைகளை வானத்திலிருந்து புகைப்படம் எடுத்தார்கள். அப்போதுதான், அவை, வரைவியல் கணித முறைப்படி அமைக்கப்பட்டிருப்பது தெரிந்தது! குறிப்பிட்ட நாள் இரவு வேளையில் நிலாவிலிருந்து பார்ப்பதற்காகவே அவ்வாறு அமைக்கப்பட்டது போல் தோன்றியது.

அதை ஆராய்ந்தவர்கள், வேறு உலகங்களில் உயிர்கள் உண்டா என்று முதன்முதலாகத் தேடியவர்கள், நாம் மட்டும் அல்ல, என்று தெரிவித்தார்கள். நமது சோதனைகளுக்கு முன்னால் அப்படிப்பட்ட தேடல்கள், பிரபஞ்ச வெளியில் பலமுறை நிகழ்ந்திருக்கின்றன! அதனால், அவர்களோடு தொடர்பு கொள்வது இனி சாத்தியம்தான். பூமியோடு பிறர் தொடர்பு கொள்ள, பல குறியீட்டு முறைகளை நம் முன்னோர்கள் இங்கே செய்திருக்கிறார்கள்.

அந்த இருபதடிச் சிலைகள் அர்த்தமற்றவை போல் தோன்றினாலும், வானிலிருந்து பார்க்கும்போது தோன்றும் அதன் அமைப்பு முறை, ஏதோ ஒரு இரகசியச் செய்தியைத் தான் தெரிவிக்கிறது. அந்தச் செய்தி, நிலாவிலிருந்து பார்த்தால்தான் புரியும்!

இதுவரை அவற்றை வானிலிருந்து பார்க்காததால், அதன் பயன் என்னவென்று நம்மால் நினைத்துப் பார்க்கக்கூடிய முடியவில்லை. அவை வெறும் சிலைகளாவே தோன்றின. இதேபோலப் பூமியின் மேல் பல இடங்கள் இருக்கின்றன. நமது நாகரிக உலகம் அதே மாதிரியான சூழ்நிலையை உருவாக்காதவரை, அவற்றைப் பற்றி நமக்கு எதுவுமே தெரியாமல்தான் இருக்கும்.

மூன்று நான்கு நாட்களுக்கு முன்னால், டெஹ்ரானில் கண்டெடுக்கப்பட்ட சிறிய இரும்புப் பெட்டி பற்றி நான் பேசிக் கொண்டிருந்தேன். அது நீண்ட காலமாக பிரிட்டிஷ் மியூசியத்தில்

கவனிப்பாரற்றுத்தான் கிடந்தது. இப்போது புதிய கண்டுபிடிப்புச் செய்தி வந்திருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு டெஹ்ரானில் பயன்படுத்தப்பட்ட ஒருவகை பாட்டரிகள் அவை! இந்தத் தகவல் நம் கற்பனைக்கும் அப்பாற்பட்டதாகத் தோன்றுகிறது! இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அங்கே பாட்டரிகளா?

ஆம். அப்படித்தான் நிரூபணமாயிருக்கிறது. நாம் பாதுகாத்து வைக்கும் பாட்டரிகளைக் கண்டுபிடித்திருக்கா விட்டால், அது என்னவென்றே நமக்குத் தெரிந்திருக்காது; அந்த எண்ணமே நம் மனதில் தோன்றியிருக்காது.

நாம் 'தீர்த்தம்' என்று குறிப்பிடுவது யாத்ரிகர்கள் செல்லும் புனிதமான இடம். அது ஓர் அபூர்வமான கண்டுபிடிப்பு. பழைய நாகரிக மக்களால் உருவாக்கப்பட்ட ஆழமான குறியீடு அது. ஆனால் அப்படிப்பட்ட இடங்களின் முக்கியத்துவத்தை உணர நமது கால நாகரிகம் தவறிவிட்டது.

தீர்த்த யாத்திரை வெறும், காலாவதியான சடங்காக மாறிப்போய் விட்டது. அவையெல்லாம் எதற்காக உருவாக்கப்பட்டது என்ற ஞானமில்லாமலேயே, அவற்றை நாம் சகித்துக் கொண்டு வருகிறோம். அவற்றை யார் உருவாக்கினார்கள், அதன் பயன்பாடு என்ன என்பதெல்லாம் நமக்குத் தெரியாது.

வெளிப்பார்வைக்குத் தோன்றுவதே எல்லாம் அல்ல. அவற்றிற்கு உள்ளார்ந்த அர்த்தங்கள் இருக்கின்றன. அவையெல்லாம் வெளியே தெரிவதில்லை.

தீர்த்த யாத்திரைத் தலங்களின் உட்பொருளை இன்றைய நாகரிகம் இழந்துவிட்டது என்பதையும், இன்று செல்லும் தீர்த்த யாத்திரை எல்லாம் வீண் என்பதையும் நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

இதையெல்லாம் எதிர்ப்பவர்கள், எவ்வளவு சரியாகச் சொன்னாலும், அவர்களும் கால விரயம் செய்பவர்களே. ஏனென்றால், அவர்களுக்கும் அந்த இடங்களைப் பற்றி எதுவும் தெரியாது. பயணம் போகிறவர்களுக்கும் உண்மை தெரியாது. எதிர்ப்பவர்களுக்கும் உண்மை தெரியாது. அதனால், அவற்றைப் பற்றிய சில விஷயங்களை நாம் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது...

சமணர்களுக்குப் புனிதமான இடம், 'சாமவேத ஷிகார்' என்ற புகழ்பெற்ற இடம். இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் இருபத்தி இரண்டு பேர் அந்த இடத்தில்தான் தம் உடல்களை நீத்தார்கள்!

அவையெல்லாம் முன்னேற்பாட்டின்படி நிகழ்ந்தவை. இல்லாவிட்டால் இருபத்திரண்டு பேர் அங்கே உயிர் நீத்தல் சாத்தியமில்லை. ஒருவர் காலத்திற்கும் மற்றவர் காலத்திற்கும் இடையில் நீண்ட இடைவெளி வேறு இருந்தது. அதாவது, முதல் தீர்த்தங்கரருக்கும் இருபத்து நான்காவது தீர்த்தங்கரருக்கும் நடுவில் ஒரு லட்சம் ஆண்டு இடைவெளி! இதை நாம் நம்பினால், இருபத்திரண்டு மகான்கள் ஒரே இடத்தில் உயிர் நீத்தது சிறப்புத்தான் என்பதை நாம் உணரவேண்டும்.

முகமதியர்களுக்குக் 'காபா' என்பது புனிதமான இடம். முகம்மது நபியின் காலம் வரை, முன்னூற்று அறுபத்தைந்து சிலைகள் அங்கே நிறுவப்பட்டன - ஆண்டின் ஒவ்வொரு நாளுக்கும் ஒரு வேறுபட்ட சிலை என்ற கணக்கில். அந்தச் சிலைகள் எல்லாம் அழிக்கப்பட்டன; அகற்றப்பட்டன. ஆனால், மையத்தில் இருந்த கல் மட்டும் அகற்றப்படவில்லை. அந்தக் கல், முகமதிய மதத்தைவிடப் பழைமையானது. இஸ்லாத்தின் வரலாறு ஆயிரத்து நானூறு ஆண்டுக் காலம்தான். ஆனால், 'காபா'வில் உள்ள அந்தக் கருப்புக் கல் பல இலட்சம் ஆண்டுகள் பழைமையானது.

அந்தக் கல் பூமிக்குச் சொந்தமான கல்லாகவே தோன்றவில்லை என்பது இன்னொரு சுவையான அம்சம்! பிறகு அது எப்படி பூமிக்கு வந்தது? நமக்குச் சாதாரணமாகத் தோன்றும் கருத்து, அது விண்வீழ் கொள்ளியாக இருக்க வேண்டும் என்பதுதான்.

விண்வீழ் கொள்ளி ஆயிரம் துண்டுகளாக உடைந்து சிதறி பூமியின் மேல் விழும். பல துண்டுகள் பூமியை எட்டுவதற்கு முன்பே எரிந்து சாம்பலாகிவிடும்.

இரவு நேரத்தில் நாம் நட்சத்திரம் விழுவதைப் பார்க்கிறோம். உண்மையில் அது விண்வீழ் கொள்ளிதான். சில சமயம் பெரிய பாறைகள் பூமியின்மேல் விழுவதுண்டு. அவை பூமியின் கற்களைப் போல இராது. அவற்றின் உட்பொருள் சேர்க்கை வேறாகவே இருக்கிறது. 'காபா'வில் உள்ள கல் அப்படிப்பட்டது.

அதைப்பற்றி ஆழமாகச் சிந்தித்தவர்கள், அது, வேற்றுக்கிரக வாசிகளால் கொண்டுவந்து போடப்பட்டது; அவர்கள் விட்டுவிட்டுப் போன பொருள், என்கிறார்கள். அதாவது நமது விண்வெளிப் பயணிகள், நிலாவில் விட்டுவிட்டு வந்த பொருள்கள் போல.

பூமி வாழ்வு அணுகுண்டுகளால் அடியோடு அழிந்து விட்டாலும் கூட, நிலாவில் கிடக்கும் அந்தப் பொருள்கள் சிதையாமல் அப்படியேதான் கிடக்கும். நமது பூமியின் மீது வேறு ஒரு புதிய

சமுதாயம் தோன்றி, அவர்கள் நிலாவுக்குப் போக நேர்ந்தால், நாம் போட்டுவிட்டு வந்த பொருள்களைக் கண்டு ஆச்சரியப்படுவார்கள்.

அதனால், 'காபா' கருங்கல் விண்வீழ் கொள்ளியின் பகுதி அன்று; வேற்றுக்கிரக வாசிகள் கொண்டுவந்து போட்டுவிட்டுப் போனது. ஒரு காலத்தில் அந்தக் கல், வேற்றுலகத்தோடு தொடர்பு கொள்ள, ஓர் ஊடகமாகப் பயன்பட்டிருக்க வேண்டும். இப்போது வெறும் வழிபாட்டுப் பொருளாக மாறி விட்டது. முன்பு பயன்பட்ட அந்தத் தொடர்பு விஞ்ஞானம் காணாமல் போய்விட்டது.

ஆளற்ற விண்வெளிக் கலம் ஒன்று, பூமியின் வானொலித் தொடர்பை இழந்து விட்டது. அது எங்கே இருக்கிறது என்பது நம் பூமிக்குத் தெரியவில்லை. அது எரிந்து போயிருக்கலாம்; வெடித்துச் சிதறியிருக்கலாம்; அல்லது விண்வெளியில் எங்கோ தறிகெட்டுப் போய்க் கொண்டிருக்கலாம். என்ன ஆயிற்று என்பது பூமிக்குத் தெரியவில்லை.

அது, வேறொரு கிரகத்தில் இறங்கியிருக்கலாம். அந்தக் கிரக வாசிகள் அதைப் பழுது பார்த்தால், அவர்கள் பூமியோடு தொடர்பு கொள்ள முடியும். அல்லது, அவர்கள் அதை அழித்துவிடவும் கூடும்; அல்லது, அருங்காட்சியகத்தில் பார்வைக்கும் வைக்கலாம்! ஒருவேளை பயந்துபோய் அதை வழிபடவும் ஆரம்பித்து விடலாம்!

பூமியோடு தொடர்ந்து தொடர்பு கொள்ள வேற்றுக் கிரகவாசிகள் அனுப்பி வைத்ததாகத்தான் அந்தக் 'காபா' கல் இருக்க வேண்டும்.

இதையெல்லாம் நான் எடுத்துக் காட்டுகளுடன் சொல்வதற்குக் காரணம் உண்டு. புனித இடங்கள் ஊடகங்கள். அண்டவெளியில் இருப்பவர்களோடு தொடர்பு கொள்ளும் ஊடகங்கள் அல்ல. ஒரு காலத்தில் வாழ்ந்து வந்த மகாஞானிகளோடு தொடர்பு கொள்ள அமைந்தவை என்பதே என் கருத்து.

இருபத்தியிரண்டு தீர்த்தங்கரர்களும், 'சாம்வேத் ஷிகார்' பற்றி மிக ஆழமாக ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அதனால்தான் அங்கே சென்று உயிர் விட்டிருக்கிறார்கள்.

அந்த மலையில், அந்த மகாஞானிகளின் வளர்ச்சி பெற்ற பிரக்ஞையின் அதிர்வுகள் பல்கிப் பெருகி சுழன்று கொண்டிருக்க வேண்டும். நாம் அந்த இடத்திற்குச் சென்றால், அந்த மாமுனிவர்களோடு பிரக்ஞை பூர்வமான தொடர்பு கொள்வது எளிது. அவ்வளவு மாமுனிவர்கள் அந்த ஒரே இடத்தில் உடலை நீத்தார்கள் என்றால், அந்த இடத்திற்கும், மேலானதொரு உயர் தளத்திற்கும் ஒரு

பாதை அமைக்கப்பட்டுவிட்டது என்று பொருள். அப்படியொரு பாதை அங்கே இருந்திருக்க வேண்டும்.

உலகின் எல்லா இடங்களிலும், ஒரே அளவில் மழை பெய்வதில்லை. சில இடங்களில் அதிக மழை பெய்கின்றது. ஆண்டிற்கு ஐந்நூறு அங்குல மழை பெய்யும் இடங்கள் உண்டு. மழைத்துளி காணாத வரண்ட பாலைவனங்களும் உண்டு.

அதேபோலக் கொடிய குளிர்ப் பிரதேசங்களும் உண்டு. அங்கே பார்க்குமிடமெல்லாம் பனிதான். பனிக்கட்டியே செய்ய முடியாத கொதிக்கும் வெப்பப் பிரதேசங்களும் உண்டு.

இதேபோல, பிரக்ஞையின் செறிவு மிகுந்த இடங்களும், பிரக்ஞை குறைந்த இடங்களும் இந்தப் பூமியில் உண்டு. அப்படிப்பட்ட பிரக்ஞைச் செறிவு அந்த இடத்தில் ஏற்பட பிரக்ஞை பூர்வமாகச் செய்திருக்கிறார்கள். அந்தப் பிரதேசம் முழுவதும் மானிடப் பிரக்ஞை துடித்துக் கொண்டிருக்கும். இதெல்லாம் தாமாக நிகழ்வதல்ல. ஆற்றல்மிக்க பிரக்ஞை கொண்ட மா மனிதர்களால் நிகழ்ந்தவை அவை.

இருபத்தியிரண்டு தீர்த்தங்கரர்கள் அந்த மலையை நோக்கிச் சென்று, தம் உடல் நீத்துச் சமாதிநிலை பெற்றார்கள் என்றால், அவர்கள், அந்த 'சாம்வேத் ஷிகார்' மலையில் தம் ஆத்ம சக்தியின் ஆற்றலை விட்டுச் சென்றிருக்கிறார்கள் என்றுதான் அர்த்தம்.

அங்கே சென்று, அந்தத் தீர்த்தங்கரர்களால் அருளப்பட்ட குறிப்பிட்ட மந்திரத்தை யாராவது ஓதுவார்கள் என்றால், அவர்களது உடல் கடந்த பயணம் ஆரம்பமாகி விடும், உடனே! ஆய்வுச் சாலையில் நடத்தப்படும் சோதனை போன்றது அது.

அப்படிப்பட்ட புனித யாத்திரைத் தலங்களை உருவாக்குவதற்கான காரணமே, பிரக்ஞை ஆற்றலை அங்கே தங்கி நிலைபெறச் செய்வதற்காகத்தான். அது ஒரு சோதனைக்களம். அங்கே செல்லும் எவரும் விரைவில் உள்முகப் பயணத்தைத் தொடங்கிவிடலாம்.

ஒரு படகைச் செலுத்த இரண்டு வழிகள் இருக்கின்றன. பாய் மரம் விரித்துப் புறப்படுவது ஒருமுறை. சுக்கான் கொண்டு செலுத்தாமல், காற்றின் திசையில் படகு செல்ல விடுவது இந்த முறை. இன்னொரு முறை பாய் மரம் விரித்தாலும், சுக்கான் கொண்டு செலுத்துவது.

புனித யாத்திரைத் தலங்களில் பிரக்ஞையின் பெருவெள்ளம் அலையடித்துக் கொண்டிருக்கும், இயல்பாகவே. அதன் நடுவில் சும்மா நின்றால் போதும், உங்கள் பிரக்ஞையின் பாய்மரம் தானாகத் திறந்து கொள்ளும்; பயணம் தொடங்கிவிடும்.

மற்ற இடங்களைவிட, அந்த இடத்தில், மிக எளிமையாகவும், வேகமாகவும், தனியாகவும் செல்லும் நிலை அமைந்து விடுகிறது. வேறு இடங்களில், அதாவது எதிர்மறைப் பிரதேசங்களில், அறியாமல் சென்று, தவறாகப் பாய் விரிப்பதால், தவறான திசையில் செல்ல வேண்டி நேர்ந்து விடுகிறது. அடைய வேண்டிய இடத்தை விட்டு, விலகி விலகிச் சென்று, கடைசியில் காணாமலும் போய் விடுவீர்கள்.

சான்றாக, ஆடு மாடுகள் வெட்டப்படும் இடத்தருகே அமர்ந்து தியானம் செய்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் மனம், அந்த எதிர்மறைப் பிரதேசத்தில், தடுமாறும். உள்ளே பெரும் போராட்டம் நிகழும்.

தியான வேளையில், சூழலை உள்வாங்கும் நிலை ஏற்படும். நீங்கள் எளிய, திறந்த மனிதராகி விடுவீர்கள். அதனால், உங்களைச் சுற்றி நிகழ்வனவெல்லாம் உங்களுக்குள் பிரவேசித்துவிடும். அதனால், தவறான திசைக்கு இட்டுச் செல்லாத இடமாகப் பார்த்து தியானம் செய்ய வேண்டும்.

தியான வேளையில் மனம் தடுமாறினால், அமைதியாக இருப்பது சிரமமாக இருந்தால், சட்டென அந்த இடத்தைவிட்டு விலகிச் சென்று விடுங்கள். சிறையில் அமர்ந்தும்கூட தியானம் செய்யலாம். ஆனால், வலிமை மிக்க மனோசக்தி இருக்க வேண்டும். எதிர்மறைச் சக்திகள் உள்ளே நுழைய முடியாதபடி, ஒரு சக்தி வளையத்தை, சுற்றிலும் உருவாக்கிக் கொண்டால்தான் அது சாத்தியம்.

ஆனால், புனித தீர்த்தத் தலத்தில், அந்தப் பாதுகாப்பே தேவையில்லை. அப்படிப்பட்ட இடங்களில் எல்லாத் தடுப்புகளையும் கைவிட்டு, உங்களுக்குள்ளிருக்கும் எல்லாக் கதவு ஜன்னல்களையும், நாலா பக்கமும் திறந்து விடும் ஓர் உத்தி மட்டும் தெரிந்திருந்தால் போதும். உடனே நன்மை தரும் சக்தி உங்களுக்குள் எல்லையற்றுப் பாய ஆரம்பித்துவிடும். நூற்றுக் கணக்கானவர்கள், அங்கிருந்து அறியப்படாத பிரதேசத்திற்குப் பயணம் சென்றிருக்கிறார்கள்; அதற்கான பாதையும் சமைத்திருக்கிறார்கள்.

ஆம், — அதை ஒரு பாதை என்றுதான் சொல்ல வேண்டும்... வழியை அடைத்துக் கொண்டிருக்கும் மரம் செடி கொடிப் புதர்களை

அழித்துப் பாதை சமைப்பது போலத்தான் அதுவும் பின்னால் வரப்போகிறவர்களுக்கு, எளிதாகப் பயணம் செய்ய வகுக்கப்பட்ட பாதை அது.

சமயத்துறையில், பிரக்ஞை மிகுந்த மேன்மக்கள், எல்லா வகையிலும் எளியவர்க்கு உதவவே அவ்வகை முயற்சி மேற்கொள்கிறார்கள். புனித யாத்திரைத் தலம், அப்படிப்பட்ட சோதனைச் சாலை.

அந்தப் புனிதத் தலத்தில், சூழல், சக்தித் துடிப்புடன் திகழ்வதால், மின்சாரம், உடலிலிருந்து ஆத்மாவை நோக்கிப் பாயும். அங்கேதான் மகான்கள் சமாதிநிலை பெற்றிருக்கிறார்கள். பல நூற்றாண்டுகளாக அங்கேதான் அவர்கள் ஞானம் பெற்றிருக்கிறார்கள்.

அவ்வகை இடங்கள், சக்தித் துடிப்புள்ள இடங்கள். அங்கே அமர்ந்து, பாய்மரம் விரித்தால் மட்டும் போதும். வேறு எதுவுமே செய்யாமல் பயணம் தொடங்கிவிடும்.

எல்லா மதங்களுமே தமக்கான புனித தலங்களை நிலைநிறுத்தி யிருக்கின்றன. கோயிலை எதிர்க்கும் மதங்களும் கூட அவற்றை உருவாக்கியிருக்கின்றன. கோயிலுக்கும், விக்கிரக வழிபாட்டிற்கும் எதிரான மதங்கள்கூட, புனித யாத்திரைத் தலங்களை உருவாக்கியிருப்பது வியப்புத்தான். சிலைகள் இல்லாமல் வழிபாடு நடத்தலாம். ஆனால், புனித தீர்த்தத்தலங்கள் இல்லாமலிருப்பது சிரமம்தான். அவற்றின் பயன் பெரிதாக இருப்பதால், மதங்கள் அதை மறுப்பதில்லை; எதிர்ப்பதும் இல்லை.

சமணர்கள், அடிப்படையில், உருவ வழிபாட்டை மேற்கொண்டவர்கள் அல்லர். முகம்மதியர்களும், சீக்கியர்களும், புத்தர்களும் அப்படித்தான். ஆனால், இந்த மதங்கள் எல்லாமே புனித யாத்திரைத் தலங்களை உருவாக்கி விட்டன. அது ஒரு நிர்ப்பந்தம். அவ்வகை இடங்கள் இல்லாவிட்டால் மதத்திற்கே அர்த்தமில்லாமல் போய் விடுகிறது.

அவை இல்லாவிட்டால், தனி மனிதரே எல்லா முயற்சிகளும் செய்ய வேண்டி நேர்ந்து விடுகிறது. அந்த நிலையில் சமய வழிப்பட்ட சமுதாயத்திற்கு அர்த்தமும், பயனும் இல்லாமல் போய் விடுகிறது.

'தீர்த்தம்' என்ற சொல், எல்லையற்ற கடலுக்குள் எட்டிக் குதிக்கும், குதி பலகை என்ற பொருள் தருகிறது. அப்படிப்பட்ட தீர்த்தத்தை உருவாக்குபவர்தான் 'தீர்த்தங்கரர்' என்பது, அந்தச் சமணச் சொல்லின் பொருள். அது ஒரு புனித யாத்திரைத் தலம்.

சாதாரணரும் தம்மைத் திறந்தபடி ஆக்கி, உள்முகத் தேடலுக்கு உதவும்படியாக, ஓரிடத்தை தம் உள்ளாற்றலால் உருவாக்குபவரே தீர்த்தங்கரர். அவரை அவதாரம் என்று சமணர்கள் குறிப்பிடுவதில்லை; 'தீர்த்தங்கரர்' என்றே குறிப்பிடுகிறார்கள். புனித அவதாரத்தை விட மேலான சிறப்பம்சம் தீர்த்தங்கரர். புனிதம் மனித உருவில் வந்தால் நல்லதுதான். ஆனால், மற்றவர்களும் புனித நிலைக்குள் பிரவேசிக்க உதவினால், அது, முன்னதைவிடச் சிறந்ததாகி விடும்; உயர்ந்ததாகி விடும்.

சமணர்கள் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள்; மனிதனின் உள்ளாற்றலை நம்புகிறவர்கள். அதனால்தான், மற்ற சமயத்தவரைவிட, தீர்த்தத்தையும் தீர்த்தங்கரரையும் பின்பற்று கிறவர்கள் அதிகம் ஆழ்ந்த பயனை அடைகிறார்கள். சமண சமயத்தில், 'கடவுளருள்,' 'கடவுளின் கருணை,' என்பதெல்லாம் இல்லை. கடவுள் ஏதாவது உதவுவார் என்று அவர்கள் நினைப்பதில்லை. சாதகன், தன் சுய ஆற்றல் கொண்டு, தானே தான் பயணம் செய்ய வேண்டும்.

பயணம் செய்வதில் இரண்டு வழிகள் உண்டு. முதல் வகையில், ஒவ்வொருவரும் தம் சொந்தப் படகிலேயே செல்ல வேண்டும். துடுப்புகளைப் பயன்படுத்தித் தம் சொந்தக் கை பலத்தில் செல்ல வேண்டிய பயணம் அது. இதில் மிகச் சிலரே வெற்றி பெறுகிறார்கள்.

இரண்டாவது வகை, காற்றின் வகையறிந்து பாய்மரம் விரித்துச் செல்வது. இந்த வகையில், சிரமம் இல்லாமல், வேகமாகப் பயணம் செய்ய முடியும்.

ஆனால், அத்தகைய ஆன்மக் காற்றுகள் இருக்கின்றனவா? ஆம். அதற்காகத்தான் தீர்த்தாடனம். மகாவீரர் போன்ற ஒருவர் இருக்கும் சூழலில், சக்திப் பிரவாகம், அவரைச் சுற்றிலும் ஓர் அறியப்படாத பரிணாமத்தை உருவாக்கி விடுகிறதா? அந்த பிரவாகத்தில் நுழைகிறவர், அதனால் எடுத்துச் செல்லப்பட்டு, இறுதி நிலைக்கு இட்டுச் செல்லும்படியாக, ஓர் சக்தியை அவர் உருவாக்கி விடுகிறாரா? ஆம். புனித தீர்த்தத்தலம் அப்படிப்பட்ட பிரவாகம் பாயும் இடம்தான்.

இந்த உலகில், வெளி அடையாளங்கள் காட்டும் இடங்களே இருக்கின்றன. காலப்போக்கில், அந்த அடையாளங்களும் மறைந்து போய்விடும். அதனால், அத்தகைய இடங்களில், பெரிய கோயில்களைக் கட்டியும், அந்த மகான்களின் சிலைகளை நிறுவியும், கவனமாக அவற்றைப் பாதுகாத்து விடுகிறார்கள். முன்பு மாபெரும் நிகழ்ச்சி நடைபெற்ற அந்தப் புனித இடம், ஓர் அங்குலம்கூட இடம்

மாறி விடக்கூடாது என்பதற்காக, பல்லாயிரம் ஆண்டுகளாக மிகவும் கவனம் எடுத்துப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள்.

பூமிக்குள் புதையுண்டு கிடக்கும் மாபெரும் செல்வங்களைக் கண்டு பிடிப்பதற்காக இன்று முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ரஷ்யாவின் ஜார் மன்னனின் புதையல் எங்கோ அமெரிக்காவில் புதையுண்டு கிடப்பதாகத் தேடிக் கொண்டு இருக்கிறார்கள். அப்படி ஒரு செல்வம் இருப்பது சாத்தியம்தான். ஏனென்றால், 1917ல் தான் அவன் மணிமகுடம் இழந்தான். அண்மை நிகழ்ச்சிதான் அது.

புதையல் இருக்கும் வரைபடத்தில் சரியாகக் குறிப் பிடப்பட்டிருந்தாலும், அந்தக் குறிப்புகளின் அர்த்தம் விளங்கவில்லை! இதேபோல, குவாலியர் அரச குடும்பத்தின் செல்வங்கள் குவாலியரில் எங்கோ புதையுண்டு கிடக்கின்றன. வரைபடம் இருக்கிறது. என்றாலும் சரியான இடம் தெரியவில்லை. இரகசியக் குறிப்புகளின் அர்த்தம் விளங்கவில்லை! இரகசியம் தவறான ஆட்களின் கைக்குக் கிடைத்துவிடக் கூடாதென்று, சங்கேத மொழியில் அதை எழுதி வைத்திருக்கிறார்கள்.

தீர்த்த யாத்திரைத் தலங்கள் தெளிவாகவே குறிப்பிடப் பட்டிருந்தாலும், அற்புதம் நிகழ்ந்த சரியான இடம் நமக்குத் தெரிவதில்லை. பொதுமக்கள் பார்வையிலிருந்து அவை மறைக்கப்பட்டுள்ளன! மகாவீரர் நிர்வாண நிலை அடைந்த இடத்திற்கு நாம் போகலாம். ஆனால், அவர் நிலைபேறு அடைந்த இடம் எதுவென்று சுட்டிக் காட்டுகிறார்களோ, அந்த இடத்திற்கு சற்று அப்பால்தான் உண்மையான இடம் இருக்கும்!

மிகச் சரியான, தேடும் தவிப்புடன் வரும் சாதகர்களுக்கே அந்த இடம் காட்டப்படுகிறது. சாதாரணப் பயணிகள், காட்டும் இடத்தில் தலை வணங்கிவிட்டு வீடு திரும்பி விடுகிறார்கள். ஒரே தாவுதலில் பாய்ந்துவிடத் தவிக்கும் உண்மையான ஆட்களுக்கே சரியான இடம் காட்டப்படுகிறது.

அப்படிப் பல இடங்கள் உலகில் இருக்கின்றன. அரேபியாவில், 'அல்குஃபா' என்ற சிற்றூர் ஒன்று இருக்கிறது. வெளியார் யாரும் அதற்குள் நுழைய முடியாது. நாம் நிலாவிற்கும் கூடப் போய் விட்டோம். ஆனால், இந்தக் கிராமத்திற்குள் யாராலும் போகவே முடியவில்லை! அது எங்கே இருக்கிறது என்றுகூட இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை! ஆனால், அப்படி ஓர் ஊர் நிச்சயம்

இருக்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக வரலாறும் அதைக் குறிப்பிட்டு வருகிறது. வரைபடங்கள் கூடக் கிடைத்திருக்கின்றன. ஏதோ ஒரு காரணத்தால் அந்த ஊர் மறைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு சூஃபி ஞானி, தனது ஆழ்ந்த தியானப் பிரக்ஞையில் அங்கே செல்வதற்கான திறவுகோலைக் காணக்கூடும். அந்த ஊரை அவர் முழுவதாகத் தம் மனக் கண்ணில் காணவும் கூடும். ஆனால், மற்றபடி கிடைக்கும் வரைபடங்கள் எல்லாம் பொய்யானவை; தவறான வழிகாட்டுவதற்காக உருவாக்கப்பட்டவை.

கடந்த மூன்று நூற்றாண்டுகளாக, ஐரோப்பிய யாத்ரிகர் பலர், 'அல்குஃபா'வைக் காணத் தேடிச் சென்றார்கள். பலர் உயிரோடு திரும்பவே இல்லை! திரும்பி வந்தவர்கள், அந்த ஊரைக் காண முடியாமல் சுற்றி அலைந்தவர்களே.

குறிப்பிட்ட தியானத்தின் மூலமாகவே அதை அடையமுடியும்; அப்போதுதான் அவர்களுக்கு வெளிப்படும். ஒருமுறை அதைப் பார்த்துவிட்டால், அவர் தியானத்தின் ஒரு பகுதியை உணர்ந்ததாக அர்த்தம். தியானம் வழியாக சூஃபி ஞானி மட்டுமே அதற்குள் நுழைய முடியும். அது ஒரு இரகசியப் புனித இடம். இஸ்லாத்தைவிடப் பழைமையானது அது!

தீர்த்த யாத்திரைத் தலங்கள் உலகறிந்தவையே. யாத்திரிகர்கள் போய் வரவும் செய்கிறார்கள். ஆனால், சரியான சக்தி மையத்தை அவர்கள் காண்பதில்லை. அவை, காட்டப்படும் இடத்திற்கு அருகில், எங்கோ மறைத்து வைக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு சுவையான நிகழ்ச்சி...

காந்தியின் பிரதம சீடரான வினோபா பாவே காசிவிசுவநாதர் ஆலயத்திற்கு அரிசனங்களுடன் சென்றார்.

ஆசார பிராமண அறிஞரான கர்பாத்ரி என்பவர், ''நீங்கள் ஆலயப் பிரவேசம் செய்யலாம். அதனால் இது அசுத்தப்பட்டு விடப்போகிறது. நாங்கள் வேறு கோயில் கட்டிக் கொள்ளப் போகிறோம்,'' என்றார்!

அப்படியொரு புதிய கோயிலைக் கட்டவும் செய்தார்! பழைய கோயில் அவருக்குப் பயனற்றுப் போய்விட்டது. வெளிப்பார்வைக்கு, கர்பாத்திரியைவிட வினோபா அதிக விபரம் புரிந்த மனிதராகத் தோன்றுகிறார். கர்பாத்ரி, நவீன உலகின் போக்கும், அறிவும் இல்லாத, பழைய காலத்து மனிதராகத் தோன்றுகிறார். ஆனால், அவை

ஆதரிக்கும் ஆழமான கருத்தைக் கவனித்தால், கர்பாத்ரிதான் அதிக அறிவுள்ளவர் என்பது விளங்கும்!

உண்மை என்னவென்றால், பழைய விசுவநாதர் கோயிலும் மெய்யானதன்று; கர்பாத்ரி கட்டியதும் மெய்யானதன்று! உண்மையான கோயில் வேறொன்று! அது இரகசியமாக மறைத்து வைக்கப் பட்டிருக்கின்றது! இல்லாவிட்டால் ஏதாவதொரு சமுதாய - சமய சீர்திருத்தவாதி வந்து அதன் புனிதத்தையும் கெடுத்துவிடக் கூடும்!

இப்போது உள்ள விசுவநாதர் ஆலயம் புனிதம் கெட்டது. ஒரு கோயிலின் புனிதத்தைக் கெடுப்பதில் சிரமம் எதுவும் இல்லை. நினைத்தால் உடனே செய்து விடலாம்! மற்ற கோயிலும் மாசுபட்டதுதான். உண்மைக் கோயில் மறைந்தே இருக்கிறது!

'அல்குஃபா' கிராமத்தின் நிலைமை போலவே, காசி விசுவநாதர் ஆலயத்திற்குள் பிரவேசிப்பதற்கான இரகசியத் திறவுகோல் மந்திரங்கள் இருக்கின்றன. அபூர்வமாக ஏதாவதொரு பாக்கியசாலி மட்டுமே உள்ளே பிரவேசிப்பது சாத்தியமாகிறது. சாதாரண ஆட்கள் மெய்யான கோயிலுக்குள் நுழையவே முடியாது.

கதவைத் திறக்கத் தனி மந்திரங்கள் உண்டு. அதுதவிர வேறு வழியே கிடையாது. அதை அனுபவ பூர்வமாக உணரவும் முடியாது. தீர்த்தாடனம் செல்கிறவர்கள் தவறான கோயிலுக்குச் சென்று வழிபட்டுத் திரும்புகிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, உண்மையான கோயிலென்று நினைத்து இப்போதுள்ள கோயிலுக்கு வந்து வழிபட்டுச் செல்வதால், இந்தப் பொய்க் கோயிலும் ஒருவிதமான புனிதத்தைப் பெற்று விட்டது!

எல்லா மதங்களுமே, 'அன்னிய மதத்தவர் தம் கோயிலுக்குள் பிரவேசிக்கக் கூடாது' என்று தடுக்க முயல்கின்றன. ஏன் அப்படி? இந்த விதியை வகுத்தவர்களுக்கு, அன்னியர் பிரவேசத்தால் என்ன ஆபத்து நேரும் என்று தெரியும்! ''அணு விஞ்ஞானிகளைத் தவிர வேறு யாரும் உள்ளே நுழையக் கூடாது,'' என்று அணு ஆராய்ச்சிக் கூடத்தில் அறிவிப்புப் பலகை இருக்கும். அதைப் போன்றதுதான் கோயில் விவகாரமும்!

விஞ்ஞானத் துறையில் அதை ஒப்புக் கொள்கிற நாம், கோயில் விஷயத்தில் ஒப்புக் கொள்வதில்லை! கோயிலுக்கு என்று ஒரு தனி விஞ்ஞானம் இருப்பது நமக்குத் தெரிவதில்லை! கோயில்களும், தீர்த்தாடன மையங்களும் குறிப்பிட்ட சில மக்களுக்கு மட்டுமே ஆனவை!

ஒரு நோயாளியைச் சுற்றி, மருத்துவர்கள் நின்று கொண்டு, அவனுடைய நோயைப் பற்றி விவாதிக்கிறார்கள். அது நோயாளியின் காதில் விழுகிறது; ஆனால், விளங்குவதில்லை. கிரேக்க, லத்தீன் கலைச் சொற்கள் கொண்டு அவர்கள் பேசுவதால் புரிவதில்லை.

இதேபோல, ஒவ்வொரு மதமும் தமக்கேயான குறியீட்டு மொழியை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அதனால், நாம் நினைத்திருக்கிற இடங்கள் மெய்யானவை அல்ல. தவறானவர்கள் கைகளுக்குப் போய் விடக்கூடாது என்றும், தவறாகப் பயன்பட்டு விடக்கூடாது என்றும், அவற்றைப் பாதுகாத்து வந்திருக்கிறது மாபெரும் மரபு. பொதுமக்களுக்கு அவற்றால் சிரமங்களே தவிர, எந்தப் பயனும் இல்லை.

'அல்குஃபா' ஊருக்குள் நுழைந்தால் பைத்தியம் பிடித்துவிடும்! எதிர்பாராமல் நுழைகிறவரும் பைத்தியம் பிடித்தே வெளியே வருவார்! 'அல்குஃபா'வில் உருவாக்கும் சக்தி அலை அதிர்வுகளைத் தாங்கிக் கொள்ளும் சக்தி சாதாரண மனிதர்களுக்கு இல்லாமற் போவதுதான் அதற்குக் காரணம். அதனால், சரியான முன் தயாரிப்பும், கட்டுப்பாடும் இல்லாமல், அதற்குள் நுழையாமல் இருப்பதே நல்லது.

'அல்குஃபா'வின் சில அம்சங்களைப் புரிந்து கொண்டால், நமது தீர்த்த யாத்திரைத் தலங்களைப் புரிந்து கொள்வது எளிது. 'அல்குஃபா'வில் உறங்க முடியாது என்று சொல்கிறார்கள்! அதனால், விழித்திருக்கும் அனுபவம் இல்லாதவர்கள் அங்கே பைத்தியமாகி விடுகிறார்கள்!

இரவில் விழித்திருப்பதுதான் சூஃபி ஞானிகளின் மாபெரும் ஆற்றல். இரவு முழுவதும் விழித்திருக்க அவர்களால் முடியும். ஒருவர் தொண்ணூறு நாள்கள் உண்ணாமல் இருந்தால் மிகமிகப் பலவீனமாகி விடுவார். ஆனால், செத்துவிடவும் மாட்டார்; பைத்தியமும் பிடிக்காது. சாதாரண ஆரோக்கிய மனிதர்கள் தொண்ணூறு நாள்கள் உண்ணா நோன்பை எளிதில் மேற்கொள்ள முடியும். ஆனால், இருபத்தோரு நாள்கள் உறங்காமல் இருக்க முடியாது!

மூன்று மாதம் உண்ணாமலிருக்க முடிந்தாலும், மூன்று வாரம் உறங்காமலிருக்க முடியாது. மூன்று வாரம் என்பது கூட அதிகம்தான் - ஒரு வாரமே சிரமம். ஆனால், 'அல்குஃபா'வில், உறக்கமே சாத்தியமில்லை!

இலங்கையிலுள்ள யாரோ ஒருவர், ஒரு புத்த சன்னியாசியை என்னிடம் அனுப்பி வைத்தார். அவரால் மூன்று ஆண்டுகளாக,

சரியாகத் தூங்க முடியவில்லையாம். நாள் முழுவதும் அவரது கை கால்கள் நடுங்கிக் கொண்டே இருந்தன. தொடர்ந்து வியர்வையும் வழிய, மிகவும் சிரமப்பட்டார். காலடி எடுத்து வைக்கவே பயம்!

எல்லா சுய நம்பிக்கைகளும் இழந்தவராகி விட்ட அவர், சற்று மனம் பேதலித்தவராகவும் காணப்பட்டார். வலிய தூக்க மருந்துகளாலும் உறக்கம் வரவில்லை. சும்மா நிம்மதியில்லாமல் படுத்துக் கிடப்பார். ஆனால், உள்ளூர விழிப்பு இருந்து கொண்டே இருந்தது.

புத்தரின் 'அனபனாசதி யோகத்தை'ப் பயன்படுத்தினீர்களா என்று அவரைக் கேட்டேன். பௌத்த சன்னியாசிகளுக்கு அது தவிர்க்க முடியாத ஒன்று. அவர் ஆமாம் என்றார். அப்படியானால் தூக்கத்தை மறந்துவிட வேண்டியதுதான். அந்த யோகத்தின் விளைவு உறக்கமின்மைதான்.

ஆனால், அது ஆரம்ப கட்டம்தான். உறக்கமின்மைக்கு அடுத்த கட்டம் உண்டு. அதற்குள் செல்ல வேண்டும் உடனே. முதல் கட்டத்திலேயே நின்று கொண்டிருந்தால், பலவீனம்தான் விளையும். பைத்தியமும் பிடிக்கலாம், மரணமும் சம்பவிக்கலாம்!

உள்ளிருக்கும் உறக்கம் அழிக்கப்பட்டவுடனே பிரக்ஞையின் தன்மை மிகவும் மாறிவிடும். அப்போது, அடுத்த வளர்ச்சி நிலைக்கு உடனே நகர்ந்துவிட வேண்டும். அந்த இரண்டாவது கட்டம் என்ன என்பது தெரியுமா என்று, அந்தத் துறவியைக் கேட்டேன். 'அது பற்றி யாருமே சொல்லவில்லை' என்றார் அவர்.

இரண்டாவது கட்டம் பற்றி புத்தகம் எதிலும் சொல்லப் படவில்லை. முதல் கட்டத்தை எழுதி வைப்பதும் ஆபத்துதான். காரணம் முதற்கட்ட இறுதியில் உறக்கமின்மை பற்றிக் கொள்கிறது. அதனால்தான், சில விஷயங்கள் இரகசியமாக வைக்கப்படுகின்றன; யாருக்கும் தீங்கு ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காகத்தான். ஆன்மத் தேடலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உதவுவதற்காகவே, வழிகாட்டுவதற்காகவே அவை அமைந்துள்ளன.

அதனால்தான் தீர்த்த யாத்திரைத் தலங்கள் தேவைப்படுகின்றன; அதேசமயம் மெய்யான இடங்கள் மறைத்தும் வைக்கப்படுகின்றன. சரியான பக்குவநிலை வரும்வரை, விலகி இருக்கச் செய்யவே பொய்யான இடங்கள் உருவாக்கப்படுகின்றன. தப்பான ஆள் சரியான இடத்தை நெருங்கவே முடியாது; சரியான ஆள் எப்படியும் கண்டுகொள்வார்.

ஒவ்வொரு தீர்த்த யாத்திரைத் தலத்தின் மர்மத்தைத் திறப்பதற்கும், அதற்கான பிரத்தியேக சாவி இருக்கும். சூஃபி மகான்களின் புனித இடங்களை, சமணரின் சாவி கொண்டு திறக்க முடியாது. அதேபோல சூஃபிகளின் சாவி கொண்டு சமண புனித தீர்த்தத்தைத் திறக்கவும் முடியாது.

ஒவ்வொரு சமயத்திற்கும் தனிப்பட்ட திறவுகோல் இருக்கவே செய்கிறது. அதைச் சொல்ல நான் விரும்பவில்லை. என்றாலும் ஒன்றைச் சான்றாகச் சொல்கிறேன்.

திபேத்தியர்களுக்கென்று தனிப்பட்ட இரகசிய வரைபடங்கள் அல்லது யந்திரங்கள் இருக்கின்றன. அவைதாம் திறவுகோல்கள். இந்துக்களுக்கும் அம்மாதிரியானவை ஆயிரக்கணக்கில் உண்டு. வீடுகளில் அவர்கள் 'லபா - சுபா' என்பது போன்ற சில வாசகங்களை எழுதி வைத்துக் கொள்கிறார்கள். அதற்கு 'வளமும் - நலமும்' என்று பொருள். அதற்கடியில் சில எண்கள் குறிப்பிடப்பட்டிருக்கும். அவை குறியீடுகள். அவை புனித தலங்களின் திறவு கோல்கள். ஆனால், அவை எதற்கு என்று அவர்களுக்குத் தெரியாது. முன்னோர்கள் செய்தார்கள் என்று, இவர்களும் செய்து வருகிறார்கள்.

வெளியில் குறிப்பிடப்படும் உருவம் ஒவ்வொன்றும் உமக்குள்ளே பிரக்ஞையில் ஒரு உருவத்தை உருவாக்கிவிடும். சான்றாக, சாளரத்தின் வழியாக சில நிமிடங்கள் வெளியே பார்த்துக் கொண்டிருந்துவிட்டுக் கண்களை மூடினால், சாளரச் சதுரத்தின் 'நெகடிவ்' வடிவம் மனக்கண்ணில் தோன்றும்.

அதேபோல ஒரு யந்திரத்தைப் பார்த்தபடி தியானம் செய்தால், அது உங்கள் மனதில், அந்த வடிவம் அல்லது எண்ணின் எதிர்மறை வடிவத்தை உருவாக்கிக் காட்டும். சில சிறப்பு தியானப் பயிற்சிகளுக்குப் பிறகு இதை நம்மால் காண முடியும்.

அந்த யந்திரம் மனதில் தோன்றிய பிறகு, சில வழிபாடுகள் செய்தால், ஆன்மிகப் புனித யாத்திரை உடனே ஆரம்பமாகி விடும், உள்ளே.

முல்லாவின் வாழ்வில் நிகழ்ந்ததாக ஒரு கதை. அவர் தம் கழுதையைத் தொலைத்து விட்டார். அது ஒன்றுதான் அவர் சொத்து. ஊர் முழுக்க அதைத் தேடிப் பார்த்து விட்டார், கிடைக்கவில்லை. பரிதாபப்பட்ட கிராம மக்களும் தேடிப் பார்த்தார்கள். கிடைக்கவில்லை.

அது ஒரு புனித மாதம். யாத்ரிகர்கள் அந்த ஊர் வழியாகத் தலயாத்திரை சென்று கொண்டிருந்த காலம். கழுதை அந்தக் கூட்டத்தோடு போயிருக்கலாம் என்று ஊரார் சொன்னார்கள். அப்படித்தான் இருக்க வேண்டும் என்று முல்லா நஸ்ருதீனும் நினைத்து, கழுதை இனிக் கிடைக்காது என்ற முடிவுக்கு வந்தார்.

'என்றாலும், கடைசியாக ஒரு முயற்சி செய்து பார்த்து விடுகிறேன்' என்றார் அவர். அப்படிச் சொல்லிவிட்டு, அங்கேயே அப்படியே நின்று, கண்களை மூடிக் கொண்டார்!

பிறகு, சட்டெனக் குனிந்து கை கால்களால் விலங்கு போல நடக்க ஆரம்பித்தார்! வீட்டைச் சுற்றிப் போனார்! பிறகு, தோட்டத்தைச் சுற்றி வந்தார்! அப்புறம் அப்படியே நடந்துபோய் ஒரு பெரிய பள்ளத்தில் பார்த்தார்! அந்தப் பள்ளத்தில்தான் அவரது கழுதை விழுந்து கிடந்தது!

நண்பர்கள் ஆச்சரியப்பட்டார்கள். 'இது எப்படி? எப்படி இதைச் செய்யத் தோன்றியது? ஏன்?' என்று கேட்டார்கள். முல்லா பதில் சொன்னார்.

''ஒரு மனிதனால் தன் கழுதையைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்றால், திறவுகோல் அவனிடம் இல்லையென்று அர்த்தம். அதனால், கழுதையைக் கண்டுபிடிக்க நான் கழுதையாக வேண்டி வந்தது! நான் கழுதையானவுடனே, ஒரு கழுதையே எங்கே தேடவேண்டும் என்பது தெரிந்து விட்டது. கழுதை எங்கே இருக்கிறது என்பது எனக்குத் தெரியாதுதான். ஆனால், கழுதையாய்க் கண்களை மூடி நடந்தேன். கண்களைத் திறந்தபோது எதிரே பள்ளம்! அதில் என் கழுதை!'' என்றார் அவர்.

முல்லா நஸ்ருதீன் ஒரு சூஃபி ஞானி. இந்தக் கதையைப் படிப்பவர்கள் சும்மா சிரித்து விட்டுப் போய்விடுவார்கள். ஆனால், அதற்குள் ஒரு திறவுகோல் இருக்கிறது. தேடலுக்கான சாவி அது. ஆன்மத் தேடலுக்கு, அது ஒன்றுதான் வழி.

அதனால், ஒவ்வொரு புனித இடத்திற்கும் ஒரு சாவி இருக்கிறது. அது யந்திர வடிவிலும் இருக்கும். அப்படிப்பட்ட இடங்கள், உங்களை, சக்தி வாய்ந்த வெள்ளப் பெருக்கின் நடுவில் தள்ளிவிட்டு விடுகின்றன. அப்புறம் நீங்கள் சிரமமின்றி வெள்ளத்தின் போக்கிற்கேற்ப மிதந்து செல்லலாம்.

இன்னொரு முக்கியமான அம்சம். மனித வாழ்வில் பிரக்ஞை ஒன்றைத் தவிர, மற்ற எல்லாமே பொருள்கள்; பொருள்ளால்

உருவாக்கப்பட்டவை; உருவானவை. ஆனால், உள் பிரக்ஞை என்ன என்பது நமக்குத் தெரியாது. நமது உடலை நமக்குத் தெரியும். இது எல்லா வகையிலும் பொருளோடு தொடர்புடையது.

இரசவாதம் பற்றிய சில விஷயங்களை நாம் இப்போது புரிந்து கொள்வது நல்லது. அப்போதுதான் புனித தலங்களின் இரண்டாவது அம்சத்தை, அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

இரசவாத வித்தையின் வழிமுறை மதத்தின் வழிமுறைதான். தண்ணீரை நீராவியாகவும், நீராவியை மறுபடியும் தண்ணீராகவும், இதையே மறுபடியும் நீராவியாகவும்... இப்படியே ஆயிரக்கணக்கான முறை, ஒரே நீரைச் செய்து கொண்டே வந்தால், அந்தத் தண்ணீர் ஓர் அபூர்வமான சக்தியைப் பெற்றுவிடும்!

சாதாரணத் தண்ணீரும் அதுவும் ஒன்றல்ல. ஆரம்பத்தில் இது ஒரு வேடிக்கை போலத்தான் தோன்றும். இதனால், தண்ணீரின் தன்மை எப்படி மாறும்? தண்ணீரை மீண்டும் மீண்டும் வடிகட்டி சுத்தப்படுத்திக் கொண்டே இருப்பதால், அதன் குணம் எப்படி மாறும்? அது சுத்தமாக இருக்கும்; அவ்வளவுதான். ஆனால், இன்று, அறிவியல், நீரின் பண்பு மாறுகிறது என்பதை ஒப்புக் கொள்கிறது. அது எப்படி என்று தெரியாவிட்டாலும், பண்பு மாற்றம் ஏற்படவே செய்கிறது. பல்லாயிரம் முறை அப்படியே செய்து கொண்டு வந்தால், மிகச் சிறந்த தூய நீர் கிடைக்கவே செய்யும்.

உங்கள் உடலின் 70% பகுதி தண்ணீர்தான் என்பது உங்களுக்குத் தெரியுமா? கடல் நீரின் இரசாயனக் கலவையும் அப்படித்தான். சரியான அளவு உப்பைச் சாப்பிடவில்லையானால், உடலின் உப்பு அளவு குறைந்துபோய் விடும். கடல் நீரில் உள்ள அளவைவிடக் குறைந்துவிடும்.

உடலின் உப்பு அளவு குறையும்போது உங்கள் பிரக்ஞையிலும் மாற்றம் ஏற்படும். ஆயிரம் மடங்கு சுத்திகரிக்கப்பட்ட நீரை அருந்தினாலும், உங்கள் விருப்பங்கள் மனப்போக்குகளில் மாற்றம் ஏற்படும்.

இரசவாதிகள் இன்னொரு வகையான சோதனையை மேற்கொண்டு வருகிறார்கள். தண்ணீரை இலட்சக்கணக்கான முறை தூய்மைப்படுத்த வேண்டுமானால் பல ஆண்டுகள் பிடிக்கும். அதனால், ஒவ்வொரு நாளும் அதைச் செய்ய ஆரம்பித்தார்கள்.

அதாவது, ஒருநாள் கொதிக்க வைப்பது; மறுநாள் குளிர வைப்பது. இது இருவகையான மாற்றங்களை ஏற்படுத்தும். ஒரே

வகையாகச் செய்து கொண்டிருந்தால் சலித்துப் போய்விடும், சில நாட்களிலேயே. அதனால், அவர் தம் சோதனையை நிறுத்தி விட்டுப் பழைய மனநிலைக்குத் திரும்பி விடுவார். அந்த வேளையில் அவரது சலிப்பே ஒரு திருப்புமுனையாகி விடும். அந்தச் சலிப்பே புதிய பிரக்ஞையாகப் பிறப்பெடுத்து விடும்.

நாள்தோறும் இரவு பத்து மணிக்குப் படுக்கப் போய்க் கொண்டிருந்தால், பிறகு, அந்த நேரம் வந்ததும் உறக்கம் கண்களைச் சுழற்றும். அப்போது தூங்கப் போகாமல் விழித்திருக்க முயன்றால், அரைமணி நேரம் கழித்து அதிகமாக உறக்கம் வரும், என்றுதான் நினைப்போம். ஆனால், அப்படி நிகழ்வதில்லை! உறக்கம் சுத்தமாகக் கலைந்துபோய், காலையில் காணப்பட்டததை விட அதிக விழிப்புணர்வு ஏற்பட்டு விடுகிறது!

அந்தப் பத்து மணி ஒரு திருப்பு முனையாக மாறி விடுகிறது. அந்த நேரம் வழக்கமாகத் தூங்கும் நேரம். அதைப் புறக்கணித்தால், உடலின் வழக்கமான இயக்கமுறை, ஒழுங்கு, பாதிக்கப்பட்டு விடுகிறது. நாம் விழித்திருக்க வேண்டும் என்பதை உடல் புரிந்து கொண்டு விடுகிறது. அதனால், அது, தான் சேமித்து வைத்திருக்கும் அணையிலிருந்து, உற்சாக வெள்ளத்தைத் திறந்து விட்டு விடுகிறது. அப்புறம் உறக்கம் எப்படி நிற்கும்? உற்சாகம்தானே நிலைக்கும்!

ஆயிரம் மடங்கு நீரைத் தூய்மைப் படுத்தியவர் சலித்துப் போவார். அவரது குரு அதைத் தொடர்ந்து செய்யச் சொல்லலாம். இன்னும் பத்துப் பதினைந்து ஆண்டுகள் செய்யச் சொல்லலாம்! சகிக்க முடியாத ஒரு கட்டம் வரும். இனி ஒருமுறை செய்தால், செத்தே விடுவோம் என்ற நிலை! ஆனால், குரு தொடர வற்புறுத்துகிறார்!

அதனால், ஒரு பக்கம் நீரின் தரம் கூடுகிறது. மறுபக்கம் அவரது மனோபாவம் மெதுவாக மாற்றம் அடைந்து விடுகிறது. அப்புறம் - அந்தச் சிறப்பான தூயநீர், பயன்படுத்துகிறவர் பிரக்ஞையையும் மாற்றி விடுகிறது.

அது கங்கை நீரைப்போல! மற்ற உலக ஆற்று நீர்களை விட வேறு சில தனிப்பட்ட அம்சங்கள் கங்கை ஆற்று நீருக்கு ஏன் இருக்கிறது என்பதை விஞ்ஞானிகளால் இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை.

கங்கை நதி பாயும் அதே மலையிலிருந்து பிறந்து பாயும் வேறு ஆற்று நீர்களுக்கும், கங்கையின் தனிச்சிறப்பு இல்லை!

அதே மலை. அதே மேகங்கள். அதே மழை. அதே பனி உருகல். என்றாலும் கங்கையின் நீர் வேறாக இருக்கிறது. ஏன் என்பதைக்

கண்டுபிடித்து நிரூபிக்க முடியவில்லை - சில விஷயங்கள் நிரூபிக்க முடியாதவை தாம். கங்கையில் ஓர் இரசவாதம் ஏற்படுகிறது. நான் சொல்லி வருவதில் பல விஷயங்களை நிரூபிப்பது கடினம்.

கங்கை சாதாரண நதி அன்று. அந்த நதி முழுவதுமே ஓர் இரசாயனச் சாலை. அதனால்தான், கங்கைக் கரையில் அத்தனை புண்ணியத் தலங்கள்.

கங்கை நதி நீர் முற்றிலும் வேறுபட்டது என்பதை இரசவாதிகளும், விஞ்ஞானிகளும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மற்ற நதி நீரைச் சேமித்து வைத்தால் கெட்டுவிடும். கங்கை நீர் கெடாது! பல ஆண்டுகள் வைத்திருந்தாலும் கெடாது. ஆனால், மற்ற ஆற்று நீர்கள் சில வாரங்களிலே நாறி விடும்.

ஆற்றில் பிணங்களை வீசினால், ஆறு கெடும். அதன் நீர் நாறும். ஆனால், ஆயிரக்கணக்கான பிணங்களையும் உள்வாங்கிக் கொண்டு, கெட்டு நாறாமல் இருக்கிறது, கங்கை!

இன்னொரு வியப்பான அம்சம். சாதாரணமாக, எலும்பு, தண்ணீரில் கரையாது. ஆனால், கங்கை நீரில் கரைந்து விடுகிறது! மிச்சம் மீதியே இருப்பதில்லை! தனக்குள் போடப்படும் எல்லாவற்றையும் கரைத்து, அதன் ஆதி மூல, மூலக நிலைக்குக் கொண்டு வந்து விடுகிறது.

சவங்கள் எந்த முறையிலும் பூரணமாக அழிய பல ஆண்டுகள் பிடிக்கும். ஆனால், கங்கையில் விரைவில் கரைந்து விடுகின்றன. அப்படியொரு இரசவாதம்! கங்கை இதற்காகவே படைக்கப்பட்டது போல் தோன்றுகிறது.

மற்ற ஆறுகள் பாய்வதுபோல், கங்கை மலையிலிருந்து பாய்வதில்லை. அது பாயும்படியாகச் செய்யப்பட்டுள்ளது! இதைப் புரிந்து கொள்வது எளிதல்ல.

கங்கையின் பிறப்பிடம் 'கங்கோத்ரி' என்ற மிகச் சிறிய சுனை. ஆனால், உண்மையான பிறப்பிடம் அதுவன்று! அது மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது! இப்போதுள்ள இடம் வெறும் வெளிமுகப்பு மட்டுமே. மக்கள் இதைத்தான் சென்று, கண்டு, வழிபட்டுத் திரும்புகிறார்கள்.

உண்மையான கங்கைப் பிறப்பிடம் பல்லாயிரம் ஆண்டுகளாக மறைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது! சாதாரண முறையில் அந்த இடத்தை அடைவது சாத்தியமில்லை. சூக்கும சரீரம் கொண்டே

அங்கே செல்ல முடியும். நமது பருவுடல் கொண்டு பயணம் செய்ய முடியாது.

சூஃபிகளின் ஊரான 'அல்குஃபா' பற்றி முன்பு குறிப்பிட்டேன். ஒரு நோக்கம் எதுவும் இல்லாமல் அங்கே நம் உடலுடன் போய்விடுவது சாத்தியம்தான். அங்கே தேடிப் போக விரும்பினால், தவறான வரைபடத்தைத் தந்து விடுவார்கள்! தேடிப் போகாமல், எந்த நோக்கமும் இல்லாமல் போனால், எதிர்பாராமல் அங்கே போய்விடக் கூடும்.

எதிர்பாராமல் 'அல்குஃபா'வை அடைந்து விடுவது சாத்தியமே தவிர, கங்கையின் பிறப்பிடத்தை அடைவது சாத்தியமே இல்லை! பருவுடல் தாங்கி அங்கே செல்ல முடியாது. ஆனால், சூக்கும சரீரத்தில் போக முடியும். உண்மையான கங்கோத்ரி சாதாரணக் கண்களுக்குத் தெரியாது.

தியானத்தில், பருவுடல் பின்னே தங்கிவிட, சூக்கும சரீரம் கங்கோத்ரியை நோக்கிப் பயணம் செய்யும். அப்போதுதான், அப்போது மட்டுமே, கங்கை நீரின் சிறப்பு அம்சங்களைப் புரிந்து கொள்ள முடியும். அதனால்தான், அதை நிரூபிக்க முடியாது என்று சொன்னேன். நிரூபிக்க எந்த வழியும் இல்லை.

கங்கையின் பிறப்பிடத்தில் இரசவாதம் நிகழ்கிறது. அதனால்தான், கங்கையின் இரு கரைகளிலும் புனிதத் தலங்களை இந்துக்கள் அமைத்திருக்கிறார்கள்.

இந்துக்களின் புனித தீர்த்தத் தலங்கள் ஆற்றங்கரைகளிலும், சமணரின் புனிதத் தலங்கள் மலைகளின் உச்சியிலும் ஏன் அமைந்திருக்கின்றன என்று நீங்கள் வியப்படையலாம்.

பசுமையற்ற வரண்ட மலைமீதே சமணரின் புனிதத் தலங்கள் அமைந்திருக்கின்றன. பசிய மரச்சோலைகள் நிறைந்த மலைகள் விலக்கப்படுகின்றன. இமயம் போன்ற அழகிய மலைகள்கூட நிராகரிக்கப்படுகின்றன. ஒரு மலை வேண்டுமென்றால், இமய மலையை விடச் சிறந்தது வேறு என்ன கிடைத்துவிடும்?

ஆனால், சமணர்கள் வேண்டுவதோ வரண்ட மலைகள்! வெயில் காயும், பசுமையற்ற சூடேறிய பாறைகள் கொண்ட தண்ணீர் இல்லாத மலைகள்! காரணம், அவர்கள் அனுபவிக்கும் இரசவாதம் உடலின் வெப்பத்துடன் தொடர்புடையது. இதற்கு நேர் மாறாக, இந்துக்களின் இரசவாதம் தண்ணீர் என்ற மூலகத்துடன் தொடர்புடையது.

ஒவ்வொருவருக்கும் தனித்தனி சாவிகள் ஆறோ, குளமோ, பசுமையோ இல்லாத இடம் இந்துக்களுக்குத் தீர்த்தத்தலம் ஆகாது. இவர்களின் சோதனையெல்லாம் தண்ணீரின் தொடர்பு கொண்டவை. இவர்களின் புனிதத் தலங்கள் தண்ணீரை ஆதாரமாகக் கொண்டவை; தண்ணீரால் உருவானவை.

ஆனால், சமணத் தலங்கள் நெருப்பாதாரம் கொண்டவை. உடலில் நெருப்பைப் பாய்ச்சும் இடங்களே அவர்களின் புனிதத் தலங்கள்.

இந்து வேதங்களும், முனிவர்களும், நீர் ஆதாரத்தையே வலியுறுத்துகிறார்கள். அதனால்தான், இந்து சன்னியாசிகள் பால், தயிர், வெண்ணெயைப் பயன்படுத்துகிறார்கள், தம்முடலில் ஈரப்பதம் இருப்பதற்காக. தேவையான ஈரப்பதம் இல்லாவிட்டால், இந்து சாவி திறக்காது!

இதற்கு மாறாக, உடலில் வரட்சியை ஏற்படுத்துவதே சமணரின் நோக்கம். இந்த வரட்சியைப் பாதுகாக்க வேண்டியிருப்பதால்தான் அவர்கள் குளிப்பதில்லை! சமண சன்னியாசிகளின் உடல் அழுக்கேறி நாறுவது இதனால்தான்! ஆனால், குளிக்காமைக்கான காரணத்தை அவர்களால் விளக்க முடிவதில்லை.

ஏன் அவர்கள் எப்போதாவது குளிக்கிறார்கள்? அவர்களுடைய சாவி தண்ணீர் அன்று; நெருப்பு. நெருப்புத்தான் அவர்களின் தவம்; அதுதான் சுய சித்ரவதை! எல்லா வகையிலும் உள்ளே தீயை எழுப்புவதுதான் சமணரின் நோக்கம். அவர்களின் உடல்களின் மேல் தண்ணீர் ஊற்றினால், உள் நெருப்பு பலவீனப்பட்டுவிடும் என்று நினைக்கிறார்கள்! அதனால், பசுமையற்ற, நீரற்ற வரண்ட மலைகளில் நாம் சமண முனிவர்களைப் பார்க்க முடிகிறது. சூடேறிய பாறைகளின் சூழலில்தான் அவர் இருப்பார்!

எல்லா மதங்களிலும் உண்ணாவிரதம் உண்டு. விரதத்தின்போது தண்ணீர் அருந்தலாம்; ஆனால், சமணம் நீர் அருந்தக் கூடாது என்கிறது!

இல்லறச் சமணர்களால், வீட்டில் தண்ணீர் பயன்படுத்துவது தவிர்க்க முடியாத ஒன்று. அதனால், குறைந்தபட்சம் இரவிலாவது தண்ணீர் குடிக்காமல் இருக்குமாறு அவர்கள் வற்புறுத்தப்படுகிறார்கள். ஆனால், தண்ணீரோடு சேர்ந்து பூச்சி புழுக்கள், கிருமிகள் உள்ளே போய்விடக் கூடாது என்பதற்காகவே அந்த நிபந்தனை விதிக்கப்படுவதாக சமணர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

சமணரின் எல்லா விதிகளுமே அகத் தீயைக் கொழுந்துவிட்டு எரிச் செய்வதற்காகத்தான். மகாவீரரைப் போலக் குறைந்த அளவு நீர் அருந்துவதால், ஆணின் விந்து வரண்டுபோய் விடும் என்பது இன்னொரு சுவையான செய்தி! அதனால், பிரம்மசரியம் காப்பது எளிதாய் விடுகிறது. கொஞ்சம் ஈரப்பதம் உடலில் இருந்தாலும் விந்து பாயத் துடிக்கும்!

சமணரின் ஆதாரபூர்வமான புனிதத் தலங்கள் வரண்ட இடங்களில் அமைந்திருந்தாலும், பிற்காலத்தில் அவர்கள் மற்றவர்களைப் பார்த்து, நீர் நிலைகள் அருகே புனித இடங்களை அமைக்கத் துவங்கினார்கள். இவை அர்த்தமற்றவை; ஆதார பூர்வமானவையும் அல்ல.

இந்துக்களின் ஆதாரபூர்வமான தீர்த்தத் தலம், ஆற்றங்கரைகளில், பசுமை விரித்த அழகிய சோலைகள் அருகேதான் இருக்கும். ஆனால், சமணர் தேர்ந்தெடுத்த மலைகள் அழகற்றவை. பசுமை இருந்தால்தானே அழகிருக்கும்?

சமண முனிவர் குளிக்காததோடு பல்லும் விளக்க மாட்டார்! பல் விளக்கவும் தண்ணீர் வேண்டுமே! இந்த வரட்சியின் அடிப்படையைச் சமண வேத நூல்களின் மூலம்தான் சரியாகப் புரிந்து கொள்ள முடியும்.

அவர்களின் கடுந்தவமே அகத்தீயை எழுப்புவதுதான். தண்ணீரின் தொடர்பால் தீயின் கடுமை குறைந்துவிடும். தண்ணீரின் இந்தப் புறக்கணிப்பு, தீயைக் கொழுந்துவிட்டு எரியச் செய்வதற்கான எதிர்மறை வழி.

நமக்குள் மூலகங்கள் சமநிலையில் உள்ளன. ஏதாவது ஒரு மூலகத்தின் மூலமாக ஆன்மப் பயணம் போக விரும்பினால், அதற்கு மாறான மூலகங்களைப் புறக்கணிக்க வேண்டி நேர்கிறது. நெருப்பின் மீது கவனம் செலுத்தினால் நீர் அதற்கு விரோதமாகிறது. நீர் குறையக் குறைய உள்ளே நெருப்பு கனன்று எரிய ஆரம்பிக்கும்.

கங்கையில் இரசாயனச் சோதனையும் நடக்கிறது; இரசவாதமும் நடக்கிறது. கங்கையில் குளித்த பின் ஒருவர் புனிதத்தில் பிரவேசித்து விடலாம். கங்கையில் நீராடியவுடனே உடலில் உள்ள நீர், மாற்றம் அடைகிறது. ஆனால், அந்த மாற்றம் சற்று நேரம்தான் நீடிக்கும். சரியான முறைப்படி சோதனை செய்தால் ஆன்மப் பயணம் ஆரம்பமாகி விடும். இன்னொன்றையும் மறந்துவிடக் கூடாது. கங்கை நீரையே அருந்தி வருபவர், வேறு நீர் அருந்தினால், சிரமத்தில் சிக்கிக் கொள்வார்!

கங்கை நீரைப் போலவே இருக்கும்படி மற்ற ஆற்று நீரையும் மாற்ற முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், முடியவில்லை. காரணம், சாவி தொலைந்துவிட்டது!

கங்கையில் நீராடிய பின், கோயிலுக்குச் சென்று, வந்தனை வழிபாடுகள் செய்வதெல்லாம், அகத்தின் ஆன்மப் பயணத்திற்குப் புறத்தில் உள்ளவற்றைப் பயன்படுத்திக் கொள்வதுதான்.

வேறு மூலகங்களும் புண்ணியத் தலமாகப் பயன்படுகின்றன. அவை மிகுந்த அக்கறையுடன் உருவாக்கப்பட்டுள்ளன.

சான்றாக, மறைந்த எகிப்திய நாகரிகத்தால் உருவாக்கப்பட்ட பிரமிடுகளைச் சொல்லலாம். பிரமிடுகள் தீர்த்தத் தலங்கள்!

பிரமிடுகளில் உள்ள சுவையான அம்சம், அதற்குள் பரிபூரண இருள் குடிகொண்டிருப்பதுதான். அந்தக் காலத்தில் மின்சாரம் கிடையாது. அவை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டவை. அந்தக் காலத்தில் உள்ளே சென்றவர்கள் தீப்பந்த வெளிச்சத்தில்தான் போயிருக்க வேண்டும். ஆனால், சுரங்கப் பாதைச் சுவர்களில் புகையின் சுவடே இல்லை!

பிரமிடுக்குள் செல்லும் பாதை வளைந்து வளைந்து நீண்டு செல்வது. எப்படிப் போனார்கள்? எண்ணெய், நெய் விளக்குகள் கொண்டு போனதற்கான அடையாளமும் உள்ளே இல்லை. யாருமே உள்ளே செல்லவில்லை யென்றால், அந்தப் பாதைகள், படிக்கட்டுகள், கதவுகள், உட்சாளரங்கள் எதற்காக?

பெரிய புதிர்தான்! புதிர் அவிழாமல் போனதற்குக் காரணம், அந்தப் பிரமிடுகள் மன்னரின் சமாதிகள் என்ற தவறான கருத்துத்தான்.

உண்மையில் அவை தீர்த்தத் தலங்கள். அகத்தின் நெருப்பில் சோதனை செய்பவரின் உடல் ஒளிவீசும்! அப்படிப்பட்டவர்கள் மட்டுமே உள்ளே நுழையத் தகுதி படைத்தவர்கள். மின்னொளியும், தீப்பந்தமும் இல்லாமல், தம் உடலின் ஒளி கொண்டே மேன்மக்கள் உள்ளே சென்றிருக்க வேண்டும்!

ஆனால், அந்த உடல் வெளிச்சம், தீயுடன் தொடர்பு கொண்ட சில தனிச் சிறப்புடைய தியான முறைகளால் மட்டுமே வெளிப்படுத்த முடியும். உள்ளே செல்லுகிறவர்களுக்கான தகுதியாக அந்த உடல் வெளிச்சம் அன்று கருதப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரமிடுகளை ஆராயப் பல விஞ்ஞானிகள் முயன்றார்கள். அதில், ஒரு விஞ்ஞானியின்

உதவியாளர் காணாமல் போய்விட்டார். எல்லாரும் உள்ளே செல்லும் பாதைகளில் விளக்கொளியில் தேடினார்கள். ஒரு முழுநாள் ஆகியும் அவர் கிடைக்கவே இல்லை. அப்புறம் அவர், இரவு இரண்டு மணிக்கு வெளியே ஓடோடி வந்தார், பைத்தியம் பிடித்தவர் போல!

''நான் சுரங்க இருளில் போய்க் கொண்டே இருந்தேன். ஏதோ ஒரு வழி திறந்ததுபோல் தோன்றியது. தொடர்ந்து மேலே போனேன். குறிப்பிட்ட இடத்தைக் கடந்ததும் சட்டென என் பின்னால் கதவு மூடியது போல வழி அடைத்துக் கொண்டது. திரும்பி நகர்ந்து தடவிப் பார்த்தேன். ஒரு பாறை நான் வந்த வழியை அடைத்துக் கொண்டிருந்தது, கதவு போல. அது எப்படி, எங்கிருந்து நகர்ந்து வந்து கச்சிதமாக அடைத்துக் கொண்டது என்பது தெரியவில்லை.

''சத்தம் போட்டுப் பார்த்தேன். பயனில்லை. வேறு வழியில்லாமல் தொடர்ந்து இருளில் போய்க் கொண்டே இருந்தேன். அப்புறம்... நான் எப்படி வெளியே வந்தேன் என்பதே தெரியவில்லை. அதை விளக்கிச் சொல்ல என்னால் முடியவில்லை!'' என்றார் அவர்.

அவர் அரைக் கிறுக்குப் போல் உளறினார். எதை எதையோ பார்த்ததாக உளறினார். மற்றவர்கள் எவ்வளவோ தேடிப் பார்த்தும் அவர் எந்த இடத்தில் வெளியேறினார் என்பதைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை!

அவர் மயங்கி விழுந்து கனவு கண்டிருக்க வேண்டும் என்றே எல்லாரும் நினைத்தார்கள். என்றாலும் அவர் சொன்னதை, சொன்னபடியே எழுதி வைத்துவிட்டார்கள். தொடர்ந்து ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தபோது, ஒரு எழுத்துப் பிரதி அவர்கள் கைக்குக் கிடைத்தது. அதிலும் அந்த ஆள் சொன்னது போலவே முன்பு யாரோ எழுதி வைத்திருந்தார்கள்!

அதனால் மர்மம் துலங்கவில்லை; மேலும் ஆழமாகி விட்டது! சில மனிதருடைய மனோநிலைக்கு ஏற்றபடி உள்ளே நிகழ்ச்சிகள் நடக்கின்றனவா, அல்லது எதேச்சையானதா என்பது தெளிவாகவில்லை. சிலரின் சில மனோநிலைகள் கதவைத் திறக்கவும், மூடவும் செய்யுமோ? எப்படி என்று தெரியவில்லை. ஆனால், கதவு திறப்பதற்கான வழியும் வேறு இருப்பதாகத் தெரியவில்லை.

நான் குறிப்பிட்டு வரும் இரகசிய இடங்களுக்கான கதவுகள் இருக்கின்றன; சாவிகளும் இருக்கின்றன. ஆனால், அவை மிகச் சிலருக்கு மட்டுமே தெரியும். அந்த இடங்கள், ஒருவரது பிரக்ஞையைத் தூண்டும் விதத்தில் அமைந்திருக்கின்றன. பிரமிடின் உள்மண்டபங்கள்,

அறைகள், அவற்றின் அளவுகள் திட்டவட்டமான முறையில் அமைக்கப்பட்டிருப்பதே இதற்குச் சான்று.

அறையின் மேற்பகுதி தாழ்வாக இருந்தால், ஏதோ ஒன்று உங்களை அழுத்துவது போல உணர்வீர்கள். உங்களை எதுவுமே அழுத்துவதில்லைதான். ஆனால், உங்களுக்குள் அப்படிப்பட்ட உணர்வு தோன்றி விடுகிறது.

உயர்ந்த மேற்பகுதி கொண்ட விசாலமான அறைகளுக்குள் நுழையும்போது, நமக்குள் ஏதோ விசாலமடைவதாக உணர்கிறோம். தியானத்திற்கு உதவும் முறையில் அறைகளை அமைத்துவிட முடியும்.

ஒவ்வொரு புனித இடத்திற்கும் தனி இசை உண்டு. எல்லா இசைகளும் அப்படிப்பட்ட இடங்களிலிருந்தே பிறக்கின்றன. அவை தியானம் செய்பவர்களால் உருவாக்கப்பட்டவை. இசைக்கலை மட்டுமல்லாமல் நாட்டியக் கலையும் கோயில்களிலேயே தோன்றின. நறுமணம் கூட முதன் முதலில் கோயில்களில்தான் பயன் படுத்தப்பட்டது.

இசையால் இறைவனை அடையலாம் என உணரப்பட்டது. இசையின் மூலமாக அதற்கு நேர்மாறான திசையிலும் போகலாம். குறிப்பிட்ட நறுமணம் தெய்வத்தை நெருங்கச் செய்யும். இன்னொரு நறுமணம் புலன் உணர்வுகளைத் தூண்டிவிடும்.

சில அறைகளில் விரைவில் தியானம் கைகூடும். சில அறைகளில் தியானம் தடைப்பட்டு விடும்!

கைதிகளை மூளைச் சலவை செய்வதற்காக சீனாவில், தனிப்பட்ட அறைகளைக் கட்டினார்கள்! முன்கூட்டித் திட்டமிட்டு உருவாக்கப்பட்டவை அவை. அளவுகள் மாறிவிட்டால், மூளைச் சலவை சிரமமாகிவிடும். பல நீண்ட சோதனைகளுக்குப் பிறகே, அவற்றின் நீள அகல உயரங்கள் வரையறை செய்யப்பட்டன. அந்த மாதிரியான அறைக்குள் நுழைந்தவுடனே கைதியின் மனதில் பாதிப்பு உண்டாகி விடுகிறது.

அவனது மனம் மாறுவதற்கு, அல்லது சிதைவதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்பதும் கண்டறியப்பட்டது! அத்தகைய மனச் சிதைவை சில இசைகள் விரைவுபடுத்தும் என்பதும் கண்டு பிடிக்கப்பட்டது! தலையின் மீது குறிப்பிட்ட இடத்தில் அடித்தாலும் அது விரைவாகும்!

கைதியின் தலைக்கு மேல் நீர்நிறைந்த பாத்திரம் தொங்கும். அதனடியில் ஒரு சிறு துளை. நீர், துளித்துளியாக அவனது உச்சந்தலை

மேல் கொட்டிக் கொண்டிருக்கும்! அவன் நின்று கொண்டிருப்பான். அசையாதபடி கட்டிப் போடப்பட்டிருப்பான். தலையையும் அசைக்க முடியாது. உட்காரவும் முடியாது!

ஒரு மணி நேரத்திற்கு மேல் கைதியால் தாக்குப் பிடிக்க முடியாது. தண்ணீர் தலைமேல் கொட்டும் சப்தம் பெரிதாகிக் கொண்டே போகும்! கடைசியில் மலையே தலைமீது விழுவது போல் தோன்றும்! குறிப்பிட்ட அளவுள்ள அறையில், திரும்பத் திரும்ப தலையில் நீர் சொட்டும்போது, இருபத்து நான்கு மணி நேரத்தில் அவனது புத்தி பேதலித்து விடும். அப்புறம் அவன் பழைய ஆள் அல்ல. முற்றிலும் மாறியிருப்பான். என்றாலும் இதைத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டே இருப்பார்கள்!

இந்தியாவில் சாதகனுக்கு எல்லா வகையிலும் உதவும்படியாக ஆலயங்களும், புனித தலங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோயில் மணியோசை, நறுமணத் தூபங்கள், மலர்கள், எல்லாம் சிறப்பான முறையில் திட்டமிட்டு அமைக்கப்பட்டவை. இரவும் பகலும் தியானம் கலையாமல் இருக்க, உள்ளே ஓர் ஒத்திசைவு தோன்றுவதற்காகவே இவை ஏற்படுத்தப்பட்டன.

தீபாராதனை எல்லா நேரங்களில் நடப்பதில்லை. ஒரு நாளின் குறிப்பிட்ட நேரங்களில், குறிப்பிட்ட வினாடிகள், குறிப்பிட்ட மந்திரம் சொல்லியே நிகழ்த்தப்படுகிறது. காலையில் இவ்வளவு நேரம், நண்பகலில் இவ்வளவு நேரம், மாலையில் இவ்வளவு நேரம் என்ற பாகுபாடுகளும் உண்டு.

ஓசை அந்த அறையில் அதிர்வுகளை உண்டாக்கும். ஓர் ஓசை முடிவதற்குள் அடுத்த ஓசை அதன்மேல் எழும். ஒருநாளின் குறிப்பிட்ட நேரங்களில், இடைவெளியில்லாமல் பல்லாயிரம் ஆண்டுகள் அங்கே அது நிகழ்ந்துகொண்டே இருக்கும்.

தண்ணீரைத் தொடர்ந்து தூய்மைப் படுத்திக் கொண்டே வந்தால், அதன் பண்பு மாறும் என்று முன்பு குறிப்பிட்டேன். ஓசையும் ஓர் அறையில் தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருந்தால், அந்த அறையின் தன்மையே மாறிவிடும். அந்த அறைக்குள் செல்லும் சாதகனுக்கு அது மிகவும் உதவும்.

நமது தனித்தன்மை பருப்பொருள்களால் உருவானது. அதனால், பருப்பொருள்களில் ஏற்படும் மாற்றம் நம் தனித்தன்மையைப் பாதிக்கும். மனிதன் புறநிலைப் படைப்பு. அதனால், அவனைப் புறத்திலிருந்து மாற்றுவது எளிது. உள் மாற்றங்கள் ஆரம்பத்தில் சிரமம்

தரும். அதனால், உடலளவில் அவனை மாற்ற, பொருள்கள் கொண்டு சில ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருக்கிறது.

இன்னொன்றையும் இங்கே புரிந்து கொள்ள வேண்டும். சாதாரணமாக நாமெல்லாரும் தனித்தனி என்று நினைக்கிறோம். இது ஒரு தவறான நம்பிக்கை! நாமெல்லாரும் ஒன்றாக அமர்ந்திருக்கும்போது, மௌனமாக இருந்தால், நாம் பலரல்ல; ஒருவரே! மௌனத்தின் ஒருமை அங்கே தங்கி நிற்கிறது. அப்போது நம் பிரக்ஞை, அதிர்வுற்று எல்லாருக்குள்ளும் பரஸ்பரம் பாய ஆரம்பித்து விடுகிறது.

தீர்த்தத் தலம் கூட்டுச் சோதனைக் களம், ஆண்டின் குறிப்பிட்ட நாளன்று பல்லாயிரம் மக்கள் தீர்த்தாடனம் வருகிறார்கள்; ஒரே நோக்கம், ஒரே ஆசையுடன் குறிப்பிட்ட நாள் குறிப்பிட்ட நட்சத்திரத்தன்று, பல நூறு மைல்களுக்கு அப்பாலிருந்து மக்கள் வந்து ஓரிடத்தில் கூடுகிறார்கள்.

அவர்களுடைய ஒன்றுபட்ட ஆசையும், ஆவலும், நோக்கமும், கூட்டு வழிபாடும், ஒன்றாய்ச் சங்கமித்து மாபெரும் பிரக்ஞையை ஏற்படுத்தி விடுகிறது. அப்போது அங்கே பலர் இல்லை என்பதுதான் உண்மை.

'கும்பமேளா' கூட்டத்தைப் பார்த்தால், தனிமனிதர்களாக நமக்குத் தோன்றுவதில்லை. அது ஒரு கூட்டம். அதற்கு முகம் இல்லை. தனிமனித முகங்கள் அங்கே இல்லை. முகமற்ற இலட்சக்கணக்கானவர் கூட்டம் அது. பத்து லட்சம் பேர் கூடும் இடத்தில் யார் யார் என்று சுட்டிக்காட்ட முடியுமா?

யார் ஏழை, யார் பணக்காரர்? யார் மன்னர், யார் பிச்சைக்காரர்? கண்டுகொள்ள முடியாது. யாருக்குமே அங்கு முகமில்லை; அடையாளமில்லை. எல்லாருடைய பிரக்ஞையும் ஒருவருக்குள் ஒருவராய்ப் பாய்கிறது. பத்து லட்சம் பேரின் பிரக்ஞை சங்கமித்து ஒன்றுபட்டால், மாபெரும் ஒற்றைப் பிரக்ஞை உருவாகிவிடும்! அந்த நிலையிலிருந்து தெய்விக நிலைக்குப் பிரவேசித்தல் எளிது! தனித்தனியே செய்யும் முயற்சியைக் காட்டிலும் அது மிக மிக எளிது. தொடர்பு கொள்ள எளிதான பெரிய பிரதேசம் அது!

நீட்சே நடந்து செல்லும்போது, அவரது கால்பட்டு ஒரு நீளமான புழு சுருண்டு பின்வாங்கிக் கொண்டதாக, அவர் ஏதோ ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். ஏன் அது அப்படியானது என்று அவர் வியப்படைந்திருக்கிறார். தீங்கிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள,

அது, தனது தொடர்புப் பிரதேசத்தைச் சுருக்கிக் கொண்டதாக, பின்பு சிந்தித்து எழுதி வைத்தார்.

அதிக இடத்தை அடைத்துக் கொண்டிருக்கும் பிராணிக்கு ஆபத்தும் அதிகம்தான். அதனால்தான், சிறு புழுக்கள் சட்டெனச் சுருங்கி, அதிக இடத்தை அடைத்துக் கொள்ளாமல் தப்பி விடுகின்றன; எவ்வளவு வேகமாகச் சுருண்டு விடுகிறதோ, அந்த அளவு ஆபத்தும் குறைவு.

மனிதப் பிரக்ஞை ஒன்றுகூடிப் பெரிதாகும் போது, பரம்பொருளுடனான தொடர்பு வாய்ப்பும் அதிகமாகி விடுகிறது. பரம்பொருள் இறங்கி வருவது மாபெரும் சம்பவம். அந்த மாபெரும் நிகழ்வு நம்மால் உருவாக்கப்பட்ட மாபெரும் பிரக்ஞைச் சமவெளியில் எளிதில் நிகழ்ந்துவிடும்.

பிரார்த்தனையின் ஆதார அடிப்படை வடிவமே கூட்டுப் பிரார்த்தனைதான். தனிமனிதப் பிரார்த்தனை வழக்கம் பின்னால் ஏற்பட்டது. மற்றவர்களோடு இணைந்துபோக முடியாத ஆணவம் மனிதருக்குள் தோன்றிய பிறகு வந்ததுதான் தனி வழிபாடு! இது ஆரம்பமானவுடனே, வழிபாட்டின் பயனே போய்விட்டது!

வழிபாடு தனித்து நிற்காது.

அதனால்தான், மகான்கள் தீர்த்தத் தலங்களை உருவாக்கினார்கள். குறிப்பிட்ட நாளின் குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட கிரகங்கள் ஒன்று சேரும்போது, குறிப்பிட்ட இடத்தில் கூடும்போது, வாய்ப்பு அதிகரிக்கிறது. நிச்சயமான வாய்ப்பும் உண்டு. அதற்கு முன்பும், அதே நேரத்தில் அவ்வகைத் தொடர்பு நிகழ்ந்திருக்கும். அது ஒரு சுழற்சியாய்த் தொடர்ந்து நிகழ்வது. அதனால், நமது வாய்ப்பு சர்வநிச்சயம் ஆகிவிடுகிறது. வாழ்க்கை அமைப்பே அப்படிப்பட்ட சக்கரச் சுழற்சியாகத் தானே அமைந்திருக்கிறது?

வாழ்க்கையின் அமைப்பு, காலச் சுழற்சியில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பருவமும் ஆண்டின் குறிப்பிட்ட காலத்தில் ஆரம்பமாகிறது. இன்று குறிப்பிட்ட நாளில் ஒரு பருவகாலம் ஆரம்பமாகவில்லை யென்றால், நாம் இடையூறு செய்துவிட்டதாக அர்த்தம். இல்லாவிட்டால் சரியான நாளில், நேரத்தில் அது துவங்கும். கோடை, குளிர்காலம், இளவேனில் எல்லாம் குறிப்பிட்ட காலத்தில் வந்துசேரும் பருவங்கள்.

நம் உடலும்கூட அப்படித்தான். பெண்களின் மாத விலக்கும்கூட, நிலாவின் இயக்கத்தோடு தொடர்புடையதுதான். நலமான, திடமான உடலில், இருபத்தெட்டு நாள்களுக்குப் பின் மாதவிலக்கு ஏற்படும். இந்தக் காலத் தொடர்ச்சி ஒழுங்கு தடுமாறி விட்டால், உடலில் ஏதோ தவறு நேர்ந்து விட்டது என்று பொருள்.

எல்லா நிகழ்ச்சிகளும் வட்டச் சுழற்சியாய் வருவன. குறிப்பிட்ட மாதத்தின், குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட நேரத்தில் தெய்விக ஆற்றல் நிகழுமென்றால், அடுத்த ஆண்டும் அதே நேரத்தில் நிகழவே செய்யும். வாய்ப்புகள் மேலும் கூடும். இந்தக் கணத்திற்கு சக்தி ஏறினால், இந்தக் கணத்திலும் தெய்விக சக்தி பெருகவே செய்யும்; பாயவே செய்யும்.

பல நூற்றாண்டுகளாக, ஆண்டுதோறும், குறிப்பிட்ட நாளில் தீர்த்தத் தலத்தில் மக்கள் கூடி நிற்பதற்கு இதுதான் காரணம். பலப்பல முறை அது நிகழ்ந்திருப்பதால், மீண்டும் நிகழும். நிச்சயமாய் நிகழும்.

கும்பமேளாவின் போது, கங்கையில் யார் முதலில் நீராட இறங்குவது என்பது பற்றிய உரிமை விவகாரம், பலகாலமாக நடந்து வருகிறது. பல்லாயிரம் பேர் ஒரே சமயத்தில், ஓரிடத்தில் மூழ்குவது சாத்தியமில்லையல்லவா?

அந்தச் சிறப்புக் கணம், மிகக் குறுகிய காலம். சரியான கணத்தில் யார் முதலில் மூழ்குவது? பாரம்பரியமாக ஆராய்ந்து சரியான நேரத்தை யார் கணிக்கிறார்களோ அவர்கள்தாம் முதற்குளியல் போட முடியும்.

சில சமயங்களில் சரியான நேரம் தவறிப்போய் விடும். தெய்விக ஆற்றல், மின்னலைப் போல் சட்டென வந்து போய்விடக் கூடியது. சரியான கணத்தில் தயாராக, முழு விழிப்புணர்வோடு இருப்பவருக்கே அது வாய்க்கும். அந்தச் சமயத்தில் விழிப்புணர்வு இல்லாமல், தூக்கக் கலக்கத்தில் இருந்து விட்டால் பெரிய இழப்புத்தான்.

புனித இடத்தின் மூன்றாவது பயன், கூட்டு அனுபவம். தெய்விக ஆற்றல், அங்கேதான் விசாலமான அளவில் வரவேற்கப்படுகிறது. மக்கள் சாதாரண எளிய மக்களாய் இருந்த காலத்தில், அது எளிதாக நிகழ்ந்து வந்தது.

இந்தக் காலத்தைப் போல் அல்ல. முற்காலத்தில் புனிதத் தலங்கள் மிகவும் புனிதமுடையவையாகத் திகழ்ந்தன. அங்கே சென்றவர்கள் யாரும் வெறும் கையோடு திரும்பியதில்லை. ஆனால், இன்று புனித

யாத்திரை போகிறவர்கள் வெறும் கையுடன்தான் திரும்புகிறார்கள். அதனால், மீண்டும் மீண்டும் போய்வர வேண்டியிருக்கிறது.

முற்காலத்தில் தவறாமல் அருளாற்றல் பெற்றே திரும்பினார்கள். எளிய, சாதாரண சமுதாய மக்களுக்கே அந்த வாய்ப்புக் கிடைத்தது. எளிய மக்கள், தம்முடைய தனித்தன்மை பற்றியெல்லாம் நினைக்காதவர்கள். அதனால்தான் அவர்கள் அதிகம் அருள் பெற்றார்கள். எந்த அளவு எளிமையோ அந்த அளவு அருள்!

தம்முடைய ஆளுமை பற்றியெல்லாம் நினைக்காத, அறியாத ஆதிவாசி மக்கள் இன்னும் இருக்கவே செய்கிறார்கள். அங்கே 'நான்' குறைவாகவும், 'நாம்' அதிகமாகவும் இருக்கிறது.

சில ஆதிவாசி மொழிகளில் 'நான்' என்ற சொல்லே இல்லை! ஆதிவாசிகள் 'நாம்' என்றே பேசுகிறார்கள். 'நான்' அவர்களின் மொழியில் இல்லாமற் போனதால் அல்ல; அவர்கள் சமுதாய ஒருமையோடு வாழ்வதால்தான் அப்படி. இது, சில சமயங்களில் ஆச்சரியமான விளைவுகளையும் தந்திருக்கிறது.

மேல்நாட்டுக்காரர்கள், சிங்கப்பூர் அருகிலுள்ள ஒரு சிறிய தீவைப் பிடித்துக் கொண்டார்கள். அந்தத் தீவின் தலைவன் கடற்கரைக்கு வந்து, தன் மக்களிடம் ஆயுதங்கள் எதுவும் இல்லையென்றும், என்றாலும் தாம் அடிமைகளாக முடியாது என்றும் தெரிவித்தான்.

ஆனால், மேல்நாட்டுக்காரர்கள் அடிமைப்படுத்த முயன்றார்கள். தீவின் மக்கள் போராடத் தயாராக இல்லையென்றும், சாகும் வழி தங்களுக்குத் தெரியும் என்றும் சொன்னார்கள்! வெள்ளைக்காரன் ஆச்சரியப்பட்டான். அப்புறம் அங்கே, வரலாற்றுச் சிறப்புமிக்க சம்பவம் ஒன்று நிகழ்ந்தது!

ஐநூறு தீவுவாசிகள் கடற்கரையில் கூடினார்கள். முதலில் தலைவன் கீழே விழுந்து இறந்தான்! அப்புறம் ஒருவர் பின் ஒருவராக அப்படியே விழுந்து உயிர்விட்டார்கள், கடற்கரை மணலில்!

ஆக்கிரமிப்பாளர்கள் திகைத்துப் போய் விட்டார்கள்! ஓர் ஆயுதமில்லாமல், காயப்படுத்திக் கொள்ளாமல் அவர்கள் நினைத்த மாத்திரத்தில் உயிர்விட்டது கண்ட மேல்நாட்டுக் காரர்கள் பேசாமல் திரும்பிப் போய் விட்டார்களாம்!

முதலில், அவர்கள் பயத்தால் விழுந்து சாவதாகத்தான் நினைத்தார்கள். ஆனால், அவர்கள் இயல்பாக உயிர் நீத்திருக்கிறார்கள் என்பது சோதித்துப் பார்த்தபோது தெரிந்திருக்கிறது.

அது எப்படி என்பது இதுவரை யாருக்கும் தெரியவில்லை!

'நாம்' என்பது மேலோங்கி யிருந்தால், மரணம் கூடத் தொற்றுநோய் போல ஆகிவிடும்!

சில சமயம் விலங்குகள் கூட இப்படித்தான்!

ஒரு ஆடு இறந்துவிட்டால், அந்தச் சாவு, மந்தையில் பரவிவிடும்! ஆடுகளுக்கு 'நான்' இல்லை; 'நாம்'தான் இருக்கின்றது! ஆடுகள் நடப்பதைப் பார்த்தால், எல்லா ஆடுகளும் சேர்ந்து ஒரே ஆடு நடப்பதுபோல, ஒரே அசைவில் செல்லும். ஒன்று இறந்தால், மற்றதும் அந்த மரணத்தை உணரும். அப்புறம் மரணம் தொடர்ந்து விடுகிறது.

ஒரு சமுதாயம் 'நாம்' என்ற விழிப்புணர்வு பெற்று விடும்போது, 'நான்' என்பது மறைந்து, புண்ணியத்தலம் சக்தி பெற்று விடுகிறது. 'நான்' உணர்வு வளர வளர, தீர்த்தத் தலங்களின் பயனும் குறைந்து விடுகிறது.

தீர்த்தத் தலங்கள் பற்றி, இறுதியாக ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதுதான், குறியீட்டுச் செயலின் மதிப்பு.

ஒருவர் இயேசுவிடம் வந்து, தம் குற்றங்களை ஒப்புக் கொண்டால், இயேசு அவர் தலைமீது கை வைத்து, ''உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டு விட்டன, போ!'' என்றுதான் சொல்வார். அவர் எப்படி மன்னிக்க முடியும்? மன்னிக்க அவர் யார்?

கொலை செய்தவனை இப்படி மன்னிக்க முடியுமா என்ன?

இந்தியாவில், ஒருவர் என்ன பாவம் செய்திருந்தாலும், கங்கையில் மூழ்கினால் பாவம் தொலைந்துவிடும் என்று சொல்லப்படுகிறது. இது பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுகிறது. திருடியவன், ஊரை மோற்றியவன், கொலை செய்தவன் கங்கையில் நீராடினால் எப்படி பாவ விமோசனம் பெற முடியும்?

இதில், இரண்டு விஷயங்களை நாம் புரிந்து கொள்ள வேண்டும். முதலாவதாக, பாவம் அல்ல பிரச்சனை, அதன் நினைவுதான் பிரதானம்!

பாவம் செய்தவனைப் பற்றிக் கொண்டிருப்பது பாவம் அல்ல, பாவச் செயல் அல்ல; அதன் நினைவு. ஒருவரைக் கொன்றுவிட்டால், அந்தக் கொடிய நினைவு சாகும்வரை விரட்டிக் கொண்டே இருக்கும்.

'கொலை நடப்பதெல்லாம் நாடகத்தின் ஒரு பகுதி. அது முக்கியமல்ல. யாரும் சாவதும் இல்லை; சாகடிக்கப்படுவதும் இல்லை.

ஆனால், அந்த நினைவு நெஞ்சில் பாறாங்கல்லாய், கனத்துக் கொண்டே இருக்கும். ஒரு செயல் செய்யப்பட்டு விட்டவுடனே அது நிரந்தரத்தில் கலந்து காணாமல் போய் விடுகிறது. நிரந்தரம், அந்தச் சம்பவத்தை சாப்பிட்டு விடுகிறது. எதார்த்தத்தில், எல்லாம் நிரந்தரத்திற்கே சொந்தம். அது உன் மூலம் நிகழ்ந்திருக்கிறது. அவ்வளவுதான். நடக்க வேண்டியது நடக்கும்போது நீ குறுக்கே போய் அகப்பட்டுக் கொள்ள, உன் மூலம் அது நடந்து விட்டது. அது உனக்கு குற்றமனப் பாரமாய் ஆகிவிடுகிறது,' என்று உள்ளுணர்வு கொண்டவர்கள் கூறுகிறார்கள்.

''பாவமன்னிப்புக் கேள். உன் பாவங்களை எல்லாம் நான் போக்கி விடுகிறேன்,'' என்று இயேசு கூறுகிறார். இயேசுவின் மீது நம்பிக்கை கொள்ளும் பாவி, நிம்மதியாய், மனச்சுமை இல்லாமல் வீடு திரும்ப முடியும். உண்மையில், இயேசு, பாவங்களை நீக்குவதில்லை; பாவ நினைவுகளிலிருந்தே விடுதலை யளிக்கிறார். நினைவுதான் மெய்யானது. அதையே இயேசு அகற்றுகிறார்.

அதேபோல கங்கையும் பாவ நினைவுகளை, குற்ற மனப்பான்மையைப் போக்கி விடுகிறது, கங்கையின் புனிதத்தில் நம்பிக்கை வைத்தால்! பல்லாயிரம் ஆண்டுகளாக சமுதாய உணர்வு இந்த நம்பிக்கையைத் தனிமனிதன் மனதில் ஆழமாகப் பதிய வைத்திருக்கிறது. அதனால், அந்த நம்பிக்கையில் அவன் நிம்மதியடைய முடிகிறது!

நீரில் குளிப்பதால் பாவம் போய் விடாது. கொலை செய்தது செய்ததுதான். அதை ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், கங்கையின் புனிதத்தில் நம்பிக்கை கொண்டவன் அதில் நீராட, அவனது குற்ற மனப்பான்மை நீங்கி விடுகிறது. அவன் நிம்மதி பெற்று விடுகிறான். கங்கை நீராட்டு ஒரு குறியீடு மட்டுமே.

இயேசு எவ்வளவு காலம் வாழமுடியும்? எத்தனைப் பாவிகள் அவரைத் தேடிப் போக முடியும்? எவ்வளவு பேர் பாவமன்னிப்புக் கேட்க முடியும்? காலம் மிகக் குறுகியது. இயேசு இல்லாவிட்டால் என்ன செய்வது? அதனால், இந்துக்கள் நல்ல நிரந்தர மாற்று ஒன்றைக் கண்டுபிடித்துக் கொண்டார்கள். அதுதான் ஆறு! ஆளை நம்புவதற்குப் பதிலாக இவர்கள் ஆற்றை நம்பினார்கள்!

ஆறு, இவர்களின் பாவங்களை ஏற்றுக் கொண்டு நிரந்தரமாக ஓடிக் கொண்டே இருக்கிறது. இயேசு எவ்வளவு காலம் பாவமன்னிப்பு

வழங்க முடியும்? முப்பத்து மூன்று வயதிற்கும் முப்பத்தி ஆறுக்கும் இடையில் மூன்றே ஆண்டுகள். மூன்றாண்டுகளில் எத்தனை பேருக்குப் பாவவிமோசனம் வழங்கிவிட முடியும்?

அதனால்தான், இந்துக்கள் ஆறுகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள்!

தீர்த்தாடனம் செல்கிறவர் பாவ விமோசனம் பெற்று, மனச்சுமை நீக்கி நிம்மதியாய் வீடு திரும்பலாம். பாவ நினைவு அல்லது குற்ற மனப்பான்மையே பந்தம். அந்த நினைவு, நிழல் போலப் பின்தொடர்ந்து கொண்டே இருக்கும்.

இதிலிருந்து விடுதலை பெற முடியும். ஆனால், ஒரு நிபந்தனை. முக்கியமான நிபந்தனை, உங்களுக்கு நம்பிக்கை இருப்பதுதான். அதாவது பூரண நம்பிக்கை. அது மட்டும் இருந்துவிட்டால் பாவ விமோசனம் கிடைத்துவிடும்.

அப்படியொரு நம்பிக்கை எப்படி வரும்? பல்லாயிரம் ஆண்டுகளாக அப்படி நடந்து வந்திருந்தால் உங்களுக்கு நம்பிக்கை வந்துவிடும். வேறு வழியே இல்லை. இப்படித்தான் பல்லாயிரம் ஆண்டுகளாக இது தொடர்ந்து வந்திருக்கிறது.

சில புண்ணியத் தலங்கள் ஆதியந்தமற்றவை - காசி, அவற்றில் ஒன்று. காசி, புண்ணியத் தலமாக இல்லாத காலம் ஒன்று இருந்ததே இல்லை. மிகப் புராதனமான யாத்ரிக மையம் அது. பிரக்ஞையின் பிரவாகம் என்ற முறையில் அது பெரிய மதிப்பீடு கொண்டது.

மிகப்பலர் அங்கே ஞானம் பெற்றிருக்கிறார்கள். அதன் அமைதியும், புனிதமும் அனுபவித்துப் பாவ விமோசனம் பெற்றிருக்கிறார்கள். அங்கே பாவங்கள் பூரணமாய்க் கழுவப்படும் என்ற நம்பிக்கை, நீண்ட நெடிய காலமாய் ஆழ்ந்து ஆழ்ந்து இந்துக்கள் மனதில் பதிந்திருக்கிறது.

இந்த நம்பிக்கை நாட்டின் சாதாரண மனிதர் நெஞ்சில் ஆழ வேரோடியிருக்கிறது. இப்படிப்பட்ட நம்பிக்கை இருந்தால், அந்த இடம் சக்தி வாய்ந்ததாகி விடும். இல்லாவிட்டால், அது வெறும் பூமியே. ஆனால், ஒரு நீண்ட புனித வரலாற்றுத் தொடர்ச்சி இருந்தால் மட்டுமே, நீங்கள் அதன்மீது நம்பிக்கை வைப்பீர்கள்.

காசி, ஒரு சிவபூமி. அது இந்த பூமிக்குச் சேர்ந்தது அல்ல. பூமியிலிருந்து விலகியிருப்பது. அழிவற்றது. பல நகரங்கள் உருவாக்கப்படுகின்றன. பிறகு அழிக்கப்படுகின்றன. ஆனால், காசி

என்றும் இருக்கும். எத்தனையோ பேர் அங்கே வந்து போயிருக்கிறார்கள் என்பது ஆச்சரியமான விஷயம்...

புத்தர் சென்றார். பல சமண தீர்த்தங்கரர்கள் அங்கே பிறந்திருக்கிறார்கள். சங்கரர் அங்கே சென்றார். கபீர் அங்கே சென்றார். பல அவதார புருஷர்களையும், தீர்த்தங்கரர்களையும், மகான்களையும் கண்டது காசி மாநகரம். அவர்களில் எவரும் இப்போது இல்லை. ஆனால், காசி இருக்கிறது. அந்த மகான்களின் புனிதமும், அவர்களின் ஆன்ம மதிப்பும், அவர்களது வாழ்க்கை நீரோட்டமும், அவர்கள் ஒட்டுமொத்த நறுமணமும் காசியில் கலந்திருக்கின்றன. அவை இன்னும் அங்கே நிலைத்திருக்கின்றன.

இதனால்தான், காசி பூமியிலிருந்து விலகி இருக்கிறது. அதாவது, அறிவு கடந்த நிலையிலாவது. அதனால், அதற்கொரு நிரந்தர வடிவம்; நிரந்தரக் குணம்; ஆளுமை, அமைந்து விட்டது.

காசித் தெருக்களில் புத்தர் நடந்து போயிருக்கிறார். கபீர் அதன் சந்து பொந்துகளில் சொற்பொழிவுகள் ஆற்றியிருக்கிறார். அவையெல்லாம் இப்போது பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்க் கரைந்து போய்விட்டன. ஆனால், அவை எல்லாவற்றையும் காசி, தனக்குள் செரித்துக் கொண்டு வாழ்ந்து வருகிறது.

பரிபூரண நம்பிக்கையுடன் காசிக்குள் செல்பவர்கள் புத்தர் நடந்து போவதைப் பார்க்கலாம்; பார்சுவநாதர் தெருவில் போவதைக் காணலாம்; அங்கே துளசிதாசரையும், கபீரையும் தரிசிக்கலாம்...

பாசத்துடன் அந்த நகரம் சென்றால், பம்பாய், லண்டன் போல வெறும் நகரமாகத் தோன்றாமல், அபூர்வமான ஆன்மிகத் தோற்றத்தில் பொலியும். அதன் பிரக்ஞை புராதனமானது; நிரந்தரமானது.

வரலாறு அழிந்து போகலாம், நாகரிகங்கள் பல தோன்றி அழியலாம், அவை வந்து போகலாம். ஆனால், காசியின் அகவாழ்வின் வெள்ளப் பெருக்கு தொடர்ந்து ஓடிக் கொண்டே இருக்கும்.

அதன் தெருக்களில் நடப்பதும், கங்கைக் கரையில் நீராடுவதும், அங்கே தியானத்தில் அமர்வதும் செய்தால், அதன் உள் நீரோட்டத்தில் நீங்களும் கலந்து விடுவீர்கள்.

'எல்லாவற்றையும் நானே செய்து விடுவேன்,' என்று நினைப்பது ஆபத்தானது. தெய்விக சக்தி பல விதங்களிலும் கிடைக்கிறது. கோயில்கள், புண்ணியத் தலங்கள் மூலமாகத்தான் அந்த உதவியை

நாம் பெற முடியும். அவ்வகை உதவி செய்வதற்காகவே அவை வடிவமைக்கப் பட்டிருக்கின்றன.

எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய சில விஷயங்களை உங்களுக்குச் சொன்னேன். புண்ணியத் தலங்களின் சிறப்பை உணர்த்தவே விளக்கினேன். ஆனால், இவை போதுமானதல்ல. அவ்வகை இடங்களோடு தொடர்பு கொண்ட பல அம்சங்கள், நம்மால் விளங்கிக் கொள்ள முடியாதவை. ஆனால், பல சம்பவங்கள் நிகழ்கின்றன. அறிவு பூர்வமாகவோ, கணித சாம்யங்கள் கொண்டோ அவற்றே விளக்க முடியாது. பல அற்புதங்கள் நிகழவே செய்கின்றன.

இரண்டு மூன்றை மட்டும் சொல்கிறேன். நீங்கள் எங்காவது தனியாக தியானத்தில் அமர்ந்தால், வேறு உயிர்கள் அருகிலிருப்பதை உணர முடியாது. புண்ணியத் தலத்தில் அந்த அனுபவம், ஆற்றல் மிக்கதாக இருக்கும். சில சமயங்களில், உங்களைச் சுற்றி மற்றவர்களின் உயிர்கள் இருப்பதை உணர்வீர்கள். உங்கள் இருப்புகூட அப்போது முக்கியமற்றதாகிவிடும்.

சான்றாக, இந்துக்களுக்கும், திபேத்திய பௌத்தர்களுக்கும் புனிதமான இடம் கைலாசம். ஆனால், கைலாசம் ஆளரவமற்ற இடம். மனிதர்கள் இல்லை, வீடுகள் இல்லை, வழிபடுவோரும் இல்லை, பூசாரிகளும் இல்லை. ஆனால், அங்கே யார் சென்று தியானத்தில் அமர்ந்தாலும், ஆள் கூட்ட நெரிசலை உணரலாம்!

அங்கே எத்தனையோ மகான்கள், முன்பு, அமர்ந்து தியானம் செய்திருக்கிறார்கள்; முக்தியடைந்திருக்கிறார்கள். தியானம் செய்பவர் அவர்கள் இருப்பதை உணரலாம். அங்கே சென்றும், தியானம் செய்ய முடியாமற் போனால், கயிலை, ஒரு வெற்றிடமே.

நிலவில் ஆளில்லை என்கிறார்கள். ஆனால், கயிலையின் அனுபவம் பெற்றவர்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். விண்வெளிப் பயணிகள் நிலவில், மனிதர் இருப்பதற்கான அடையாளம் எதையும் காணவில்லைதான். அதனால், அங்கே யாருமே இல்லையென்று அர்த்தமல்ல.

நிலவில் வாழும் கடவுள்கள் பற்றி சமண நூல்கள் விரிவாக விளக்குகின்றன. அங்கே உயிர்கள் இல்லை என்று விண்வெளிப் பயணிகள் சொன்னது கேட்டு சமணர்கள் சங்கடப்பட்டனர். ஒன்று, விண்வெளிப் பயணிகள் சென்றது தவறான நிலாவுக்காக இருக்க வேண்டும்! அல்லது, சமண நூல்கள் சொல்வது தவறாக இருக்க வேண்டும், என்று சமணர்கள் கூறினார்கள்.

இப்போது, குஜராத்திலுள்ள சமணத் துறவி ஒருவர், விண்வெளிப் பயணிகள் உண்மையான நிலாவுக்குச் செல்லவில்லை என்பதை நிரூபிப்பதற்காக, நிதி திரட்டிக் கொண்டிருக்கிறாராம்!

விண்வெளிப் பயணிகள் மெய்யான நிலையில் காலடி வைத்தது உண்மைதான். இதற்கு நிரூபணமே தேவையில்லை. விவகாரம் எல்லாம் சமண நூல்களில் எழுதி வைத்திருப்பதுதான். உண்மை சமண முனிவர்களுக்கும் தெரியாது. நடந்த உண்மையை ஒப்புக் கொண்டால் சமண சாத்திரங்கள் பொய்யாகி விடும். அதனால்தான் அப்படிச் சொன்னார்கள். இந்தப் பைத்தியக்காரத் தனத்திற்குக் காரணமும் இருக்கிறது. அவர்களுடைய நம்பிக்கை இரண்டாயிரம் ஆண்டுகளாக நிலை பெற்றிருப்பது. நிலவில் உயிருண்டு என்பது... ஆனால், எந்த வகையான உயிர் என்பது அவர்களுக்குத் தெரியாது. கயிலையிலோ, வேறு புண்ணிய தலங்களிலோ இருப்பது போலவும் உயிர்கள் அங்கே இருக்கலாம் தானே?

காசி புகைவண்டி நிலையத்தில் இறங்கியவுடனே கல்லாலும், மண்ணாலும் ஆன பெரிய காசி மாநகரம் உங்கள் கண்களுக்குப் புலப்படும். சுற்றுலாப் பயணிகள் ஊருக்குள் போய்த் திரும்புகிறார்கள். ஆனால், காசிக்கு ஓர் ஆன்மிக வடிவம் இருக்கின்றது. உள்நோக்கிய அகப்பயணம் செய்பவர்களால்தான் அந்தக் காசியை அடைய முடியும்.

அவர்களுக்குக் காசி, மிகவும் வித்தியாசமான, மிக அழகான, கற்பனைக் கெட்டாத நகராகத் தோன்றும். உண்மையில் காசி வேறு எந்த நகரையும் விட அட்டும் அழுக்கும் நிறைந்த ஊர். இது கண்ணுக்குத் தெரியும் காசி.

அழகிய காசி கவிஞனின் கற்பனையில்தான் இருக்கிறது என்று சிலர் சொல்லலாம். ஆனால், அந்தக் காசி அங்கே நிச்சயமாய் இருக்கிறது. பூமி மண்ணில் நிற்கும் காசி, அருவமான காசியுடன் தொடர்பு கொள்ளும், தொடர்புப் பிரதேசம். சும்மா, இரயிலில் வருகிறவர்கள் வெறும் காசியைப் பார்த்துத் திரும்புவார்கள். தியான வாகனத்தில் ஏறி வருகிறவர்கள் ஆன்மிகக் காசியோடு தொடர்பு கொள்வார்கள். அப்படிப்பட்டவர்கள், கங்கையாற்றங் கரையில் சற்றும் எதிர்பாராத மகான்களைச் சந்திப்பார்கள்!

நான் குறிப்பிட்ட கயிலையில் பூமி சாராத உயிர் வடிவங்கள் வாழ்கின்றன. ஐந்நூறு பௌத்தச் சித்தர்கள் அங்கே ஆவி வடிவில் வாழ்ந்து வருகிறார்கள், எப்போதும். ஏதாவது காரணமாக ஒருவர்

அந்த இடத்தை விட்டுப் போக நேர்ந்தால், இன்னொருவர் அந்த இடத்திற்கு வந்த பின்பே, அவர் போகிறார். அந்த எண்ணிக்கை குறைவதே இல்லை. அதனால்தான் கயிலை ஒரு தீர்த்தத் தலமாகத் திகழ்கிறது.

அறிவுக்கு அகப்படும் அம்சமல்ல அது. அதனால்தான் அதைப் பற்றி நான் இதுவரை பேசவே இல்லை. அவர்கள் தீர்த்தர்கள். அவர்களைச் சந்திக்கும்போதுதான் ஒருவர் புனிதர் ஆக முடியும்.

ஓர் இடம் குறிப்பிடப்பட்டு இருந்தால்தான் அவர்களைச் சந்திக்க முடியும். இல்லாவிட்டால் உடல் நீத்த ஆன்மாக்களை எவ்வாறு தேடிக் கண்டுகொள்வது? அப்படித்தான் காசியும். காசியில் அமர்ந்து தியானம் செய்தால், அப்படிப்பட்ட புனிதரைச் சந்திக்க உள் உலகில் நாம் பிரவேசிக்க முடியும்.

அறிவுபூர்வமாக அதை அணுக முடியாது. அறிவிற்கும் அதற்கும் தொடர்பில்லை. உண்மையான புண்ணியத்தலம். வெளி அடையாளத்திற்கு அருகில், வேறு எங்கோ மறைந்திருக்கிறது.

தன்னோடு வாழ்ந்து, சொன்னதெல்லாம் கேட்டு, செய்து, பல முயற்சிகள் மேற்கொண்டும் ஞானம் பெறுவதில் வெற்றி காணாத மற்றவர்களுக்காகவே, கருணை கொண்டு, ஞானி தம் உடலை நீக்குகிறார். போகும்போது, அவர்களுக்காகச் சில குறியீடுகளை விட்டுப் போகிறார்; அல்லது உணர்த்திவிட்டுப் போகிறார்.

அந்தக் குறியீடுகளின் மூலமாகவே, அவர்கள் தம் ஞான குருவுடன் தொடர்பு கொள்வது சாத்தியமாகிறது. இந்த உலகில் பருவுடல்கள் அழிகின்றன. ஆன்மா அழிவதில்லை. உடல் நீத்த ஆன்மாக்களுடன் தொடர்பு கொள்ள, சில திறவுகோல்களை விட்டுவிட்டே அவர்கள் போயிருக்கிறார்கள்.

தீர்த்தத் தலங்களே திறவுகோல்கள், இன்று 'ராடார்' செயல்படுவது போல! கண் எட்டாத் தொலைவிற்கும் ராடார் பாயும். கட்புலனாகாத் தொலைதூர விண்மீன்களையும் எட்டிப் பிடித்துத் தொட்டுவிடும் அது.

புண்ணியத் தலங்கள் 'ஆன்மிக ராடார்கள்.' இன்று இங்கு இல்லாது சென்றுவிட்ட ஆன்மாக்களுடன் தொடர்பு கொள்வது இவற்றின் மூலமாகவே சாத்தியம். இன்னும் ஆன்மப் பயணம் சென்று கொண்டிருப்பவர்களும், குறியிடம் சேராதவர்களும், வழிதவறிச் சென்றுவிடக் கூடாது என்பதற்காக, சென்று விட்டவர்கள் நிறுவியவையே தீர்த்தத் தலங்கள்.

பின்தங்கி நின்று விட்டவர்கள், தம் முன்னேற்றத்திற்காக முன்னோரை ஏதாவது கேட்க விரும்பலாம். அது அவர்களின் வழிதவறிப் போகாமைக்கு உதவக்கூடும். எதிர்காலம் என்னவென்று தெரியவில்லை. பாதை எங்கே போகிறது, எப்படியிருக்கும் என்பதும் தெரியவில்லை. அப்படிப்பட்டவர்களின் ஐயம் போக்கவும், தெளிவு காட்டவும்தான், புண்ணியத் தீர்த்தங்கள், கோயில்கள், மந்திரங்கள், சிலைகள் எல்லாம். இவையெல்லாம் சடங்குகளே என்றாலும், இவற்றின் மூலம் மேலே செல்லும்படியாகத் திட்டமிட்டு அமைக்கப்பட்டவை இவை.

ஓர் ஆதிவாசி மனிதனை உங்கள் வீட்டிற்கு அழைத்து வருவதாக வைத்துக் கொள்ளுங்கள். விளக்கு வெளிச்சம் வேண்டும் போது, நீங்கள் நாற்காலியிலிருந்து எழுந்து, பத்தடி நடந்து போய், சுவரில் உள்ள சுவிட்சைப் போடுவதை அவன் கவனிக்கிறான். உடனே மின் விளக்கு எரிகிறது. சுவரில் மின்கம்பி பதிந்திருப்பதும் அதன் முனையில் பல்பு இணைக்கப்பட்டிருப்பதும் அவனுக்குத் தெரியாது. அதனால் அவன் ஆச்சரியப்படுகிறான். ஏதோ மந்திரவித்தை என்றே அதை நினைக்கிறான். எழுந்து பத்தடி நடப்பதும், சுவரில் சுவிட்சைப் போடுவதும் ஏதோ சடங்கு என்றே நினைப்பார்கள்.

ஒரு சுவிட்சைப் போட்டால் மின் விளக்கு எரிகிறது. இன்னொரு சுவிட்சைப் போட்டால் மின் விசிறி சுற்றுகிறது. மற்றொன்றைப் போட்டால் வானொலி பாடுகிறது. அவனுக்கு மின்சாரம் தெரியாததால் அது மந்திர வித்தை ஆகிவிடுகிறது.

ஒருநாள், நீங்கள் வீட்டில் இல்லாதபோது, அவன் அதைச் செய்து பார்க்கிறான். அப்போது மின்வெட்டு இருந்து விட்டால், அவன் திடுக்கிட்டுப் போவான். எதுவும் ஏன் இயங்கவில்லை? நாம் பத்தடி தூரம் சரியாக நடக்கவில்லையோ? முதலில் வலது காலை எடுத்து வைக்கவில்லையோ? என்றெல்லாம் நினைத்துக் குழம்புவான். சுவிட்சைப் போடும்போது, நீங்கள் ஏதாவது முணுமுணுத்துக் கொண்டிருந்தால், மந்திரம் தெரியவில்லையே என்ற குழப்பம் அவனுக்கு ஏற்படும். அவனுக்கு மின்சாரத்தின் அடிப்படை, இயக்கம் தெரியாததே குழப்பத்திற்குக் காரணம்.

சமயத் துறையிலும் அப்படித்தான். சடங்குகள் புறச்செயல்கள் என்று சொல்கிறோம். உள்ளார்ந்த இரகசியக் கட்டமைப்பை அறியாதவர்களும் சடங்குகள் செய்கிறார்கள். சில நேரங்களில் ஏதாவது விளைவுகள் ஏற்பட்டு விடுகின்றன. அது சடங்கால் விளைந்ததென்று நினைக்க ஆரம்பித்து விடுகிறோம்.

ஒன்றுமே நிகழவில்லை யென்றால், முன்னால் நிகழ்ந்ததெல்லாம் தற்செயலானவை என்று நினைப்போம். சடங்கினால் ஒன்று விளைந்தால், எப்போதும் அது நிகழ வேண்டுமே என்றுதான் எண்ணுவோம். அதனால், சடங்கு புற நிகழ்வாகவே கருதப்படுகிறது. மிகுந்த அறிவு படைத்தவர்களும் அப்படியே நினைக்கிறார்கள். ஒருவகையில் அறிவுடைமை சிறுபிள்ளைத் தனமானது! ஒரு வகையில், அறிவாளி, வயது குறைந்தவன்தான்; பாலகன்தான்! அறிவு, உங்களை மிகுந்த ஆழத்திற்கு இட்டுச் செல்லாது!

நூறு ஆண்டுகளுக்கு முன் பிரான்சில் 'கிராமபோன்' அறிமுகப் படுத்தப்பட்டது. அதைக் கண்டு பிடித்திருப்பதாக ஒருவர் அறிவித்தபோது, பிரஞ்சு விஞ்ஞானக் கழகம், அதை நேரில் வந்து நிரூபிக்குமாறு அவரை அழைத்தது. அவர் வந்தார். விஞ்ஞானிகளின் முன்னிலையில் ஓர் இசைத் தட்டைக் கருவியில் பொருத்தினார். அதை யெல்லாம் கழகத் தலைவர் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

இசைத்தட்டிலிருந்து குரல் வர ஆரம்பித்த உடனே அவர் பாய்ந்து சென்று, கண்டு பிடித்தவரின் கழுத்தை நெரிக்க ஆரம்பித்து விட்டார்! குரல் அவரது தொண்டையிலிருந்துதான் வருவதாகவும், அவர் தட்டிலிருந்து வருவது போல் ஏமாற்றுகிறார் என்றும் தலைமை விஞ்ஞானி நினைத்து விட்டார்!

எவ்வளவு அழுத்தமாகக் கழுத்தை நெரித்த போதும், தட்டிலிருந்து குரல் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது. கண்டுபிடித்த ஆள் பயந்து போய்த் திணறினார். அதில் தந்திரம் இல்லையென்று கூறி, தலைவரை வெளியே அழைத்துப் போனார் கண்டுபிடிப்பாளர். அப்போதும் அறையிலிருந்து குரல் வந்தது.

என்னதான் நிரூபித்தாலும், எல்லா விஞ்ஞானிகளும் அதை எதிர்த்தார்கள்! அவர் ஏதோ தந்திரம் செய்ததாகவே குற்றம் சாட்டினார்கள்! அது சாத்தானின் வேலை என்றார்கள்! 'ஒரு சிறிய தட்டு எப்படிப் பேசும்?' என்பதே அவர்கள் கேள்வி. இதை அறிந்து இன்று நாம் சிரிக்கிறோம். இசைத்தட்டின் அடிப்படை நமக்குத் தெரியாவிட்டால், நாமும் அப்படித்தான் நினைப்போம்.

அணுயுத்தம் வந்து உலகம் அழிந்துபோய், ஒரு 'கிராமபோன்' மிஞ்சி விட்டால், அது ஒரு ஆதிவாசியிடம் கிடைத்துவிட்டால், அவன் அதைப் பாடச் செய்து விட்டால், மற்றவர்கள் அவனை அடித்தே கொன்று விடுவார்கள்! அவனால் அது எப்படி ஒலிக்கிறது என்பதை விளக்க முடியாது. ஏன் உங்களால்கூட விளக்க முடியாமற் போகலாம்.

மனிதகுலம் நம்பிக்கைகள் கொண்டு வாழ்ந்து வருகிறது என்பது ஒரு சுவையான அம்சம். மூன்று நான்கு பேரிடம்தான் சாவிகள் இருக்கின்றன. மற்றவர்களிடம் வெறும் நம்பிக்கைகள் மட்டுமே!

சுவிட்சுப் போட்டால் விளக்கெரியும். இது அன்றாட நிகழ்ச்சி. ஆனால், எப்படியென்று உங்களால் விளக்க முடியுமா? சிலரிடம்தான் சமுதாயச் சாவிகள் இருக்கின்றன. மற்றவர்கள் எல்லாம் சும்மா வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். சாவிகள் தொலைந்து போனால், சும்மா வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் தம் நம்பிக்கையை இழந்து விடுவார்கள். ஒருநாள் மின்விளக்கு எரியாமற் போனால் அவர்கள் பெரும் சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்வார்கள்.

புண்ணியத் தலத்திற்கும், கோயிலுக்கும் தனி விஞ்ஞானம் இருக்கின்றது. அவற்றிற்கென்று தனி விதிகள் இருக்கின்றன. முதல் காலடி வைப்பிற்குப் பிறகே இரண்டாவது கால்வைப்பு. இரண்டாவது தாண்டித்தான் மூன்றாவது. ஒரு காலடி வைப்பு தவறிப் போனாலும் எதிர்பார்த்த பலன் கிடைக்காது.

ஒரு சமுதாயம் உயர்ந்த வளர்ச்சி பெற்றுவிட்டபின், அறிவியல் நல்ல வளர்ச்சியடைந்து விட்டால், அறிவியலின் பயன்பாடு எளிதடைந்து விடும். அப்புறம் அது சிக்கலாக இராது. தொழில் நுட்பம் நல்ல வளர்ச்சியைப் பெறவில்லை யென்றால், பயன்பாடு சிக்கலாகத்தான் இருக்கும்.

ஒரு மின் விளக்கைப் போடுவதைவிட எளிய காரியம் என்ன இருக்கிறது? ஆனால், மின்சாரக் கருவிகள் கண்டுபிடித்தவர்களுக்கு அப்படியா இருந்திருக்கும்? என் பேச்சை ஒலிப்பதிவு செய்வது எவ்வளவு எளிது! ஆனால், 'டேப்ரிகார்டரைக்' கண்டுபிடித்தவர் எவ்வளவு பாடுபட்டிருப்பார்!

ஒரு ஒலிப்பதிவுக் கருவியில் எவ்வளவு சொற்களைப் பதிவு செய்யலாம், என்று யாராவது கேட்டால், 'சும்மா பேசு, எல்லாம் பதிவாகும்' என்றுதானே சொல்வேன். ஆனால், அதைக் கண்டுபிடிக்க எவ்வளவு காலம் பிடித்திருக்கும்! இன்று எல்லாமே எளிதாகிவிட்டது. அது எளிதாக்கப்பட்டு விட்டதால், தொழில் நுட்பத்தின் பயன் சாதாரண மனிதருக்கும் கிடைத்து விட்டது. சாதாரண மனிதனின் கையில், விளைவின் பயன் மட்டுமே இப்போது இருக்கிறது.

சமயமும் அப்படித்தான். சில சமயக் கோட்பாடுகளை வரையறுக்க மகாவீரர் தம் உயிரையே பணயம் வைத்தார். ஆனால், அந்தக் கோட்பாடுகளை நீங்கள் எளிதில் இப்போது அறிந்து கொண்டு

விடலாம். ஒரு பொத்தானை அழுத்துவது உங்களுக்கு எளிதாகி விட்டது. ஆனால், கண்டு பிடித்தவர்கள்தான் காணாமல் போய் விட்டார். உங்கள் கையில் பொத்தான் மட்டுமே இருக்கிறது. அடிப்படையும் தெரியாது; அதன் செயல்முறையும் தெரியாது.

அண்டவெளியில் செல்லும் விண்வெளிப் பயணிகளுடன் தொடர்பு கொள்ளுவதற்காக, 'டெலிபதி' என்னும் 'தொலைவிலுணர்தல்' பற்றி, அமெரிக்க ரஷ்ய விஞ்ஞானிகள் இப்போது தீவிரமாக ஆராய்ந்து வருகிறார்கள்.

விண்வெளிக் கலம் 'லூனா' வான்வெளியில் காணாமல் போய்விட்டது. அதன் வானொலியும் இயங்கவில்லை. அப்போதுதான் விண்வெளி ஆபத்துக்களை அவர்கள் உணர்ந்தார்கள். விண்வெளிக் கலத்தில் ஆள் இருந்து, அதன் வானொலித் தொடர்புக் கருவி பழுதுபட்டுவிட்டால் என்ன ஆவது?

ஏதாவதொரு வழியில் பூமியோடு தொடர்பு கொள்ளும் கருவியை அல்லது முறையைக் கண்டு பிடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. அப்போதுதான் எண்ணங்களை அனுப்ப முடியுமா என்ற வினா எழுந்தது. அதன் பிறகுதான் 'தொலைவிலுணர்தல்' பற்றிய ஆய்வுகளில் இந்த நாடுகள் ஆர்வத்தோடு இறங்கின.

'டெலிபதி' தொடர்பான எல்லாத் தகவல்களையும் சேகரிப்பதற்காக அமெரிக்க அரசு ஒரு குழுவை நியமித்தது. மூன்று நான்கு ஆண்டுகளில் அது சாத்தியம் என்று அந்தக் குழு அறிவித்தது. ஆனால், அந்த முறையில் தொடர்பு கொள்பவர்களால் அது எவ்வாறு நிகழ்கிறது என்பதை விளக்கிச் சொல்ல முடியவில்லை.

அவர்களின் அறிக்கையில், 'அமேசான்' ஆற்றுப் பகுதியில் வாழும் காட்டுவாசிகள் பற்றிய அதிசயமான ஒரு குறிப்பு காணப்படுகின்றது.

குறிப்பிட்ட காட்டுவாசி இனத்தார் வாழும் கிராமங்களில் ஒரு சிறிய மரம் இருக்கிறது. அந்த மரத்தின் மூலமாக, அவர்கள் அடுத்த கிராமத்துடன் தொடர்பு கொள்கிறார்கள்!

சான்றாக, ஒரு கிராமவாசி, அடுத்த ஊருக்கு தன் வீட்டிற்கான பொருள்கள் வாங்கப் போகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் மனைவி அவனிடம் ஏதாவதொன்றைச் சொல்ல மறந்திருக்கலாம். கணவன் போன பிறகு சட்டென நினைவுக்கு வருகிறது என்றால், அவள், தன் கிராமத்தில் உள்ள அந்த மருத்தருகே சென்று, ''இதோ பாருங்க! நான் மறந்திட்டேன்... அத மறக்காம

வாங்கிட்டு வாங்க!'' என்று சொல்வாள். அவனுக்கு அந்தச் செய்தி போய்ச் சேர்ந்துவிடும். அடுத்த ஊரிலிருக்கும் அதே மாதிரியான ஒரு மரத்தின் மூலமாக! அப்படி நடந்ததை, ஆய்வுக்குச் சென்ற குழு, நேரில் பார்த்து, ஆச்சரியப்பட்டு, எழுதியும் வைத்திருக்கிறது!

நாம் தொலைபேசியில் பேசுவதைப் பார்த்து ஆதிவாசிகள் ஆச்சரியப்படுவார்கள். அதன் அடிப்படை நமக்குத் தெரிந்திருப்பதால் நமக்கு அதில் எந்த வியப்புணர்வும் இல்லை. வானொலி கேட்டு நாம் திடுக்கிட்டுப் போய் விடுவதில்லை. அது நமக்குத் தெரிந்த விஷயம். ஆனால், மரத்தின் மூலம் பேசிக் கொள்கிறார்கள் என்பது நமக்கு வியப்பைத் தருகிறது.

ஆய்வுக்குச் சென்ற குழுவினர், கிராமத்தில் நான்கு நாட்கள் தங்கியிருந்து, சோதனை செய்து பார்த்தார்கள். அந்த காட்டு வாசிகளுடன் பேசிப் பார்த்தார்கள். ஏன் என்பதை அவர்களால் சொல்ல முடியவில்லை. அவர்களுக்கு அது தெரியவில்லை. அது அப்படி நிகழ்கிறது. அவ்வளவுதான்.

அவர்களுடைய முன்னோர்கள் மரத்தின் மூலம் பேசிக் கொண்டார்கள். இவர்களும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அது எளிய முறையாக இருக்கிறது. அந்த மரத்தின் அற்புத சக்தியை யார் எப்படி ஆதியில் கண்டுபிடித்துப் பயன்படுத்தினார்களோ தெரிய வில்லை. ஆனால், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அது நடந்து வருகிறது.

அதைக் கண்டு பிடித்தவர்களோடு சாவியும் தொலைந்து போய்விட்டது. என்றாலும், அவர்கள் அந்த மரத்தின் கிளைகளை வெட்டி, பல இடங்களிலும் நட்டு வளர்த்து, தொலைபேசிக் கருவியாகப் பயன்படுத்தி வருகிறார்கள்! இருக்கும் மரம் பட்டுப் போகாமல் பாதுகாத்தும் வருகிறார்கள்.

புத்தர் ஞானம் பெற்ற போதி மரத்தை, பௌத்தர்கள் பட்டுப்போக விடுவதே இல்லை. அந்த முதல் மரம் காய ஆரம்பித்தபோது அசோக மன்னன் அதன் கிளையொன்றை வெட்டி இலங்கைக்கு அனுப்பி வைத்தான். அது அங்கே நடப்பட்டு, வளர்ந்து, இப்போதும் மரமாக விளங்குகிறது.

அதிலிருந்து ஒரு கிளையை வெட்டிக் கொண்டு வந்து இந்தியாவில், புத்த கயாவில் நட்டு மரமாக்கினார்கள். ஆதி மரமே தொடர்ந்து உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அந்த மரம் இருப்பதால்தான் புத்தகயா புண்ணியத் தலமாக ஆகியிருக்கிறது.

புத்தர் ஞானம் பெற்றபோது, அந்தப் போதிமரம் அவரிடமிருந்து ஏதோ ஒன்றை ஆழமாகக் கிரகித்துள்ளது. புத்தருக்கு ஏற்பட்ட ஞானானுபவம் ஈடு இணையற்ற அற்புத நிகழ்ச்சி. ஒரு மரத்தின் மேல் மின்னல் பாய்ந்தால் அது பற்றி எரிந்துவிடும். அதுபோல, பிரக்ஞை, ஒரு மின்னலாய் புத்தர் மீது பாய்ந்தபோது, போதி மரமும் அதேபோல ஞானம் பெற்றிருக்க வேண்டும் என்று கற்பனை செய்வது கடினமல்ல.

பட்டுப்போகாமலிருக்க, புத்தர் இரகசியமாக, அந்த மரத்திற்கு ஏதோ செய்திருக்கிறார். 'என்னை வணங்காதே - இந்த மரத்தை வணங்கினால் போதும்,' என்று அவர் சொன்னார். அதனால்தான் அவர் மறைந்து ஐந்நூறு ஆண்டுகள் வரை, புத்தர் சிலைகளே உருவாகவில்லை. போதி மரமே விக்கிரகம். அதுவே வழிபடப்பட்டது.

பௌத்தக் கோயில்களில் காணப்படும் ஓவியங்களில் போதிமரம் மட்டுமே இருக்கும். புத்தரின் ஒளி வட்டமும் இருக்கும். புத்தர் இருக்க மாட்டார். ஞான அனுபவ ஆற்றலை அந்த மரம் பெற்றிருப்பதற்கான அடையாளம் அது. அதை உணர்ந்தவர்கள் அந்த மரத்தின் மூலம் புத்தரோடு தொடர்பு கொண்டார்கள்.

அதனால், புத்தகயாவுக்கல்ல மரியாதை; போதி மரத்திற்குத்தான். ஞானம் பெறுமுன், புத்தர் நீண்ட காலம் அந்த மரத்தடியில்தான் வாழ்ந்து வந்தார். அதன் அடியில் உள்ள, அவரது காலடிச் சுவடுகளைப் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறார்கள்.

தியானத்தில் அமர்ந்து களைத்துவிடும் போதெல்லாம், புத்தர், பல மணிநேரம் அந்த மரத்தைச் சுற்றிச் சுற்றி வருவார். வேறு எவருடனும் அவர் அவ்வளவு நெருக்கமாக இருந்ததில்லை. வேறு யாருடனும் அவ்வளவு எளிமையுடனும், நிம்மதியுடனும் அவர் தொடர்பு கொண்டிருக்க முடியாது.

அவர் அதனடியில், படுத்து உறங்கினார்; அமர்ந்திருந்தார்; சுற்றிச் சுற்றி வந்தார். அதனுடன் அவர் பேசியும் இருக்கலாம். அந்த மரத்தில் வாழ்க்கைச் சக்தி முழுவதும் புத்தரால் நிரம்பித் ததும்பியது.

அசோக மன்னன் தன் புதல்வன் மகேந்திரனை இலங்கைக்கு அனுப்பியபோது, ''தந்தையே, நான் என்ன பரிசு கொண்டு போகட்டும்?'' என்று மகேந்திரன் கேட்டான். ''உலகிலேயே மிகச்

சிறந்த பரிசு போதி மரம்தான். அதன் கிளை ஒன்றைக் கொண்டுபோ.'' என்றான் மன்னன்.

ஒரு மரக்கிளையைப் பரிசாகத் தந்தவர் உலகில் வேறு யாருமே இல்லை. அது ஒரு பரிசுதான் ஆகுமா? ஆனால், ஈழநாடே அதனால் பாதிக்கப்பட்டது, போதிமரக் கிளை ஏற்படுத்திய அதிர்வு அலைகளால்!

மகேந்திரன்தான் ஈழ மக்களை பௌத்தர்களாக மாற்றினான் என்று சொல்கிறார்கள். அது தவறு. அந்த மாற்றம் செய்தது போதி மரக்கிளை. சரியான சமயத்தில், சரியான ஆள்வசம் அந்த நாட்டிற்கு அதன் கிளையை அனுப்பவேண்டும் என்று புத்தர் இரகசியமாகச் சொல்லி வைத்திருந்தார். காலம் கனியக் காத்திருந்தார்கள் பொருத்தமான ஆள் கிடைத்ததும் அனுப்பிவிட்டார்கள்.

மகேந்திரனும், சங்கமித்ரையும், புத்தர் காலத்தில் வாழ்ந்திருந்த பௌத்த சன்னியாசிகள். போதி மரக்கிளையை யாராவது ஒருவரிடம் கொடுத்தனுப்பிவிட முடியாது. புத்தரை அறிந்த, புத்தரோடு வாழ்ந்தவரே கொண்டு போக முடியும். அதை ஒரு மரக்கிளையாகக் கருதாமல், வாழும் புத்தராக மதிப்பவரே கொண்டுபோக முடியும்.

பிற்காலத்தில், அதே மரத்தின் கிளை ஒன்று இலங்கையிலிருந்து இந்தியாவிற்குக் கொண்டு வரப்பட்டது. லோகாயத வரலாற்றிற்கு அடிநீரோட்டமாக ஓடிக் கொண்டிருக்கும் உண்மை வரலாறு பற்றி ஒருநாள் பேசவேண்டும். அது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

வரலாற்றின் அடியாழத்தில்தான் வரலாற்றின் வேர்கள் இருக்கின்றன. அங்கேதான் ஆதியின் மூலம் இருக்கிறது. வெளியில் காணப்படும் தொடர் நிகழ்ச்சிகள் நாளிதழ்களில் காணப்படுகின்றன. பிறகு புத்தகங்கள் ஆகின்றன. அதுவல்ல உண்மை வரலாறு.

நமது கூர்மையான பார்வையை, உண்மையான வரலாற்றின் மீது செலுத்தும் தகுதி பெறும்போது, அவற்றின் இரகசியங்களை யெல்லாம் புரிந்து கொள்வது எளிதாகி விடும்.



நெற்றியில் சந்தனத் திலகமோ, குங்குமத் திலகமோ வைப்பது பற்றி உங்களிடம் பேசுவதற்கு முன்னால், இரண்டு நிகழ்ச்சிகளைச் சொல்லப் போகிறேன். புரிதலுக்கு இவை உதவும். இரண்டுமே வரலாற்று உண்மைகள்.

1888-ல், தென்னிந்தியாவில், ஓர் ஏழை பிராமணக் குடும்பத்தில் இராமானுஜம் என்பவர் பிறந்தார். பிற்காலத்தில் புகழ்பெற்ற கணித மேதையாகத் திகழ்ந்தார். அவர் அதிகம் படிக்கவில்லை. என்றாலும் அவரது கணித மேதைமை வித்தியாசமானதாக இருந்தது.

நன்கு கணிதம் கற்ற அறிஞர் பலர் புகழ் பெற்று விளங்கியதற்குக் காரணம், அவர்களுடைய பயிற்சியும், நீண்ட காலம் அவர்களுக்குக் கிடைத்த நிபுணர்களின் வழிகாட்டலும்தான்.

ஆனால், இராமானுஜம் பள்ளி இறுதி வகுப்புக்கூட முடிக்காதவர்! அவர் யாரிடமும் பயிற்சியும் பெறவில்லை. எவருடைய வழிகாட்டலும் அவருக்குக் கிடைக்கவும் இல்லை. அப்படியிருந்தும், அவரைப் போல ஒரு கணித மேதை இருந்ததே இல்லையென்று, கணித நிபுணர்கள் கூறுகிறார்கள்!

ஒரு எழுத்தர் வேலை வாங்குவதற்குக் கூட அவர் படாத பாடுபட வேண்டியிருந்தது. ஆனால், அவரிடம் அபூர்வமான கணிதத்திறன் இருக்கும் செய்தி, விரைவில் பரவிவிட்டது. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தின் புகழ்பெற்ற கணித மேதை பேராசிரியர் ஹார்டிக்குக் கடிதம் எழுதச் சொல்லி யாரோ ஆலோசனை கூறினார்கள். அந்தக் காலத்தில் அவர் பிரபலமானவராகத் திகழ்ந்தவர். இராமானுஜம் கடிதம் எழுதுவதற்குப் பதிலாக இரண்டு தேற்றங்களுக்கு விடை கண்டு அவருக்கு அனுப்பி வைத்தார். அவை வடிவியல் தேற்றங்கள்.

அவற்றைப் பார்த்து வியந்த பேராசிரியர், இராமானுஜத்தை உடனே இங்கிலாந்திற்கு வருமாறு கடிதம் எழுதினார்! அவ்வளவு சிறிய வயதுக்காரரால் எப்படி அவற்றிற்கு விடை கான முடிந்தது என்று பேராசிரியர் திகைத்துப் போனார்.

ஹார்டி இராமானுஜத்தைச் சந்தித்தபோது, இராமானுஜனுக்கு முன், தான் ஒரு குழந்தை என்று உணர்ந்தார், கணிதத் துறையில்!

இராமானுஜத்தின் திறமை மனதின் ஆற்றலால் விளைந்ததன்று. அறிவாளிகள் மனதில் நிதானமாகவே யோசிக்கிறார்கள். இராமானுஜமோ சட்டெனச் சொல்லி விடுகிறார்! கணக்கைக் கரும்பலகையில் எழுதியவுடனே, அல்லது சொன்னவுடனே, சிந்திக்க இடைவெளி எடுத்துக் கொள்ளாமல் உடனே பதில் சொல்லிவிட அவரால் முடிந்தது!

அது எப்படி என்பதை, எந்தக் கணித மேதையாலும் கணித்துச் சொல்ல முடியவில்லை. இராமானுஜம் போட்ட கணக்கைப் போட, ஒரு பிரபல கணித மேதைக்கு ஆறு மணிநேரம் பிடித்தது - அப்போதும்கூட, தம் விடை சரியானதுதானா என்பதை அவரால் அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை! இராமானுஜம் சட்டெனச் சொன்னார்; சரியாகச் சொன்னார்!

அவர் மனதின் மூலமாக விடை கண்டதாகத் தெரியவில்லை. அவர் படித்தவரும் அல்ல. மெட்ரிக் வகுப்பில் தோற்றுப் போனவர்! அவரது மேதைமைக்கு வேறு புறக்கரணங்கள் எதுவும் இருக்கவில்லை. என்றாலும் அவர் கணிதத்தில் அதிமனிதனாக விளங்கினார். அவரது மனதைக் கடந்து, அதற்கு அப்பால், அவருக்குள் ஏதோ நிகழ்வதாகத் தோன்றியது.

எலும்புருக்கி நோயால் இறந்தபோது அவருக்கு வயது முப்பத்தி ஆறு. உடல் நலம் மிகவும் கெட்டு, அவர் மருத்துவ மனையில் படுத்திருந்தபோது, ஹார்டி தமது நண்பர்களான சில கணித மேதைகளுடன் அவரைப் பார்க்கச் சென்றார்.

அவர் தம் காரை வெளியில் நிறுத்துவதை, இராமானுஜம் தம் அறையிலிருந்தபடி பார்த்துக் கொண்டிருந்தார். ஹார்டி அறைக்குள் வந்ததும், அவருடைய காரின் எண் மிகவும் வித்தியாசமானது என்று இராமானுஜம் சொன்னார். அந்த எண்ணில் நான்கு சிறப்பு அம்சங்கள் இருப்பதாகவும் தெரிவித்தார்.

இராமானுஜம் காலமான பிறகு, அவர் சொன்னதைப் புரிந்து கொள்ள, பேராசிரியருக்கு நான்கு மாத காலம் பிடித்தது! அதுவும் மூன்று அம்சங்களைத்தான் அவரால் புரிந்து கொள்ள முடிந்தது!

இராமானுஜம், தமது உயிலில், அந்த எண்களைப் பற்றி ஆராயுமாறு குறிப்பிட்டிருந்தார். ஹார்டி இறந்து இருபத்தியிரண்டு ஆண்டுகள் கழிந்த பின்பே, கணித மேதைகளுக்கு அந்த நான்காவது சிறப்பு அம்சம் விளங்கியது!

இராமானுஜம் ஒரு கணிதச் சிக்கலைத் தீர்க்க முயலும் போதெல்லாம், அவரது கருவிழிகள் இரண்டும் மேலேறி, புருவ நடுவை நோக்கி உயர்ந்தன! யோகத்தில் அந்த இடத்தை மூன்றாவது கண்ணின் இருப்பிடம் என்று குறிப்பிடுவார்கள். அந்த நெற்றிக்கண் தூண்டுதல் பெறுமானால், சில அபூர்வமான மண்டலங்கள் முழுவதுமாய்த் தெரிய ஆரம்பித்து விடும்.

நாம் நமது வீட்டிற்குள்ளிருந்து, கதவின் சிறிய துளை வழியே வெளியே பார்த்துக் கொண்டிருக்கும் போது, திடீரெனக் கதவே திறந்து விட்டால், எவ்வாறு முழு வானமும் புலப்படுமோ அதுபோலத்தான் அது!

இரு புருவங்களுக்கும் நடுவில் ஒரு சிறு துளை இருக்கின்றது. அது எப்போதாவது திறக்கும். இராமானுஜத்திற்கு அப்படித்தான் திறந்தது. விழிகள் மேலேறும்போது அது நிகழ்ந்தது. அப்போது விடை கிடைத்தது. அது ஹார்டிக்கும் தெரியவில்லை, மற்ற மேலைநாட்டுக் கணித மேதைகளுக்கும் இதுவரை தெரியவில்லை.

மூன்றாவது கண்ணுக்கும், குங்குமத் திலகம் இடுதலுக்கும் உள்ள தொடர்பை விளக்க, நான் இன்னொரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன்.

எட்கர் கேய்ஸ் என்பவர் 1945இல் இறந்தார். நாற்பது ஆண்டுகளுக்கு முன், அதாவது 1905இல் அவர் கடும் நோய்வாய்ப் பட்டார். நினைவிழந்து, மூன்று நாள்கள் 'கோமா' நிலையில் கிடந்தார்.

அவரை நினைவிற்குத் திரும்பவும் கொண்டுவர எவ்வளவோ முயற்சிகள் செய்தும், முடியவில்லை. அவரது ஆழ்மனம் மீண்டும் மேல் தளத்திற்கு வராது என்று மருத்துவர்கள் முடிவு கட்டினார்கள்.

நம்பிக்கையிழந்த மருத்துவர்கள், மூன்றாம் நாள் மாலை, மரணம் நிச்சயம் என்று சொல்லி விட்டார்கள். நான்கு மணி நேரத்திலிருந்து ஆறு மணி நேரத்திற்குள் உயிர் போய்விடும், என்று சொன்னார்கள்.

ஒருவேளை அவர் சாகாமற் போனால், அது மரணத்தைவிட மோசம். மூளை அழிந்து போகும். மூளைக்குச் செல்லும் இரத்தக் குழாய்களும், 'செல்'களும் தொடர்பறுத்துக் கொண்டு சிதைந்துவிடும், என்றார்கள்.

ஆனால், கேய்ஸ் 'கோமா' நிலையில் இருந்தபடியே பேசத் துவங்கினார்! மருத்துவர்களால் நம்ப முடியவில்லை! உடல் பிரக்ஞையற்றுக் கிடக்கிறது. ஆனால், அவர் பேசுகிறார்! தாம் மரத்தின் மேலிருந்து கீழே விழுந்து விட்டதாகவும், முதுகெலும்பு முறிந்து விட்டதாகவும், அதனால்தான் நினைவு தப்பிவிட்டதாகவும் அவர் கூறினார்!

ஆறு மணி நேரத்தில் தமக்குச் சரியான சிகிச்சை அளிக்காவிட்டால் தாம் இறக்க நேரிடும் என்றும் கூறி, சில பச்சிலைகளின் பேரைச் சொல்லி, அதைச் சாறு பிழிந்து கொடுத்தால் பன்னிரண்டு மணிநேரத்தில் தாம் பிழைத்துக் கொள்ள முடியும் என்றும் கூறினார்!

அவர் சொன்ன மூலிகைகளின் பெயர்கள் அவருக்குத் தெரிந்திருக்க நியாயமே இல்லை. அவரது மூளை கெட ஆரம்பித்து விட்டது, அதனால் உளற ஆரம்பித்து விட்டார் என்றே மருத்துவர்கள் முதலில் நினைத்தார்கள். ஏனென்றால், அவர் குறிப்பிட்ட மூலிகைகள், அதுவரை அவரது நோய்க்கு மருந்தாக அறியப்படவே இல்லை.

சிரமப்பட்டுத் தேடிக் கொண்டு வந்ததில் அவர் பிழைத்து விட்டார்! அவர் சொன்னபடியே பன்னிரண்டு மணி நேரத்தில்!

அப்புறம் அவரிடம் அதைத் தெரிவித்த போது, அப்படிச் சொன்ன நினைவே அவருக்கு இல்லை! அந்த மூலிகைகள் பெயர்கள் அவருக்குத் தெரிந்ததாகவே இல்லை. ஆனால், அன்று முதல் அவர் வாழ்வில் ஒரு பெரிய திருப்புமுனை ஏற்பட்டு விட்டது.

பிற்காலத்தில், குணப்படுத்த முடியாத பல நோய்களுக்கு அவர் இயற்கை வைத்தியம் சொல்ல ஆரம்பித்தார். அவருடைய வாழ்நாளில், அவ்வாறு, முப்பதாயிரம் பேரை அவர் குணப் படுத்தினார்!

அவர் சொன்னதெல்லாம் சரியான மருந்தாகவே இருந்தது! விதிவிலக்கே இல்லாமல் அவர் அனைவரையும் குணப்படுத்தினார்! ஆனால், அது எப்படி என்று அவரால் விளக்க முடியவில்லை!

நோயாளி வந்து தம் நோயைத் தெரிவித்தால், அவர் கண்களை மூடிக் கொள்வார். அவரது கருவிழிகள் புருவ நடுவிடம் நோக்கிப் போகும். அவை அவ்வாறு அங்கே நிலைத்திருக்கும்போது, அவர் எல்லாவற்றையும் மறந்து விடுவார். ஒரு கட்டத்திற்குப் பிறகுதான் அவர் நினைவு திரும்பும். அந்த நினைவு மறந்த நிலை வராமல், அவரால் மருந்தைக் குறிப்பிட முடியாது. அவரது வாழ்வில், இரண்டு முறை குறிப்பிட்ட சிகிச்சை, மிக முக்கியத்துவம் வாய்ந்தது. அதை நாம் நினைவில் கொள்வது நல்லது.

அமரிக்க நாட்டின் மிகப் பெரிய செல்வர்களில் ஒருவர் 'ரோத்சைல்ட்ஸ்.' அவருடைய குடும்பத்தில் ஒரு பெண் நீண்டகாலமாக நோய்வாய்ப் பட்டிருந்தாள். எந்த சிகிச்சையும் பலனளிக்கவில்லை. அவளை எட்கர் கேய்சிடம் அழைத்து வந்து காட்டினார்கள். தமது ஆழ்மன நிலையில் அவர் ஒரு மருந்தைக் குறிப்பிட்டார்.

அவரது ஆழ்மன நிலையில் அவர் நினைவிழந்து காணப்பட்டாலும், அவர் முழுப் பிரக்ஞை நிலையில்தான் இருந்திருப்பார் என்றே விபரம் அறிந்தவர்கள் சொல்வார்கள். உண்மையில், அந்த ஆழ்மன நிலை, மூன்றாவது விழியை அடைகிற வரைக்கும்தான் நிலைத்திருக்கும்.

'ரோத்சைல்ட்ஸ்' கோடீஸ்வரர். எந்த மருந்து எங்கிருந்தாலும் அவரால் தருவித்துவிட முடியும். ஆனால், அவரால் அப்போது முடியவில்லை! அது எங்குக் கிடைக்கும் என்பதை யாராலும் சொல்ல முடியவில்லை. அப்படியொரு மருந்து உண்மையில் இருக்கிறதா என்பதே சந்தேகமாக இருந்தது.

உள்நாட்டு, வெளிநாட்டுப் பத்திரிகைகளில் எல்லாம் விளம்பரம் செய்தார்கள். மூன்று வாரங்களுக்குப் பிறகு ஸ்வீடனிலிருந்து ஒருவர் கடிதம் எழுதியிருந்தார். தற்போது அப்படியொரு மருந்தே இல்லையென்றும், இருபது ஆண்டுகளுக்கு முன் தன் தந்தை அப்படியொரு மருந்தைக் கண்டுபிடித்தார் என்றும், ஆனால் அதை அவர் தயாரிக்கவே இல்லையென்றும், ஆனால், அதே பெயரில், அதை அரசாங்கத்தில் பதிவு செய்திருந்தார் என்றும் குறிப்பிட்டிருந்தார்!

தந்தையார் இறந்து விட்டதால், அவர் எழுதி வைத்திருந்த செய்முறையை அனுப்பி வைத்திருந்தார். அதன்படி மருந்து தயாரிக்கப்பட்டது. அந்தப் பெண்மணி பூரணகுணம் அடைந்தாள்!

கண்டுபிடித்ததோடு நின்றுபோன, கடைக்கு வாராத, அந்த வெளிநாட்டு மருந்து பற்றி கேய்சுக்கு எப்படித் தெரிந்தது?

இன்னொரு சமயம், அவர் ஒருவருக்கு இன்னொரு மருந்தைச் சொன்னார். ஆனால், அந்த மருந்து கிடைக்கவே இல்லை. ஓராண்டு கழிந்த பின்பு, அந்த மருந்து கிடைக்கும் என்று ஒரு விளம்பரம் வெளிவந்தது. அதற்கு முன்னால் அது ஆய்வுச் சாலைகளில் சோதனை நிலையில் இருந்திருக்கிறது! அதற்குப் பெயர்கூட வைக்கப்படவில்லை!

அதற்கு முன்னால், பிற்காலத்தில் வைக்கப்போகும் பெயரை கேய்ஸ் எவ்வாறு கூறினார்? எப்படியோ, அந்த மருந்து கொடுக்கப்பட்டு நோயாளியும் குணமானார்!

சில சமயங்களில் அவர் குறிப்பிடும் மருந்து கிடைக்காமல் நோயாளிகள் இறந்திருக்கிறார்கள். ஏன் அப்படி, என்று அவரைக் கேட்டபோது, ''நான் என்ன செய்யட்டும்? நான் ஒன்றும் செய்வதற்கில்லை,'' என்று சொன்னார்.

''நான் நினைவிழந்த நிலையில் இருக்கும் போது, அந்த மருந்துகளின் பெயர்களைப் பார்ப்பது யார், அவற்றைச் சொன்னது யார் என்றே எனக்குத் தெரியாது. எனக்குள் அப்படிச் சொல்லும் ஆளுக்கும் எனக்கும் தொடர்பே இல்லை,'' என்று அவர் கூறினார்.

ஒன்று மட்டும் உறுதி. அவர் அந்த நிலையில் இருந்து பேசும்போது, அவரது கருவிழிகள் மேலே ஏறி நின்றன.

நாம் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது, நமது கருவிழிகள் மேலேதான் போய் விடுகின்றன. உறக்கம் எவ்வளவு ஆழமோ அந்த அளவு கருமணிகள் மேலே போகும். உளவியல் அறிஞர்கள், உறக்கம் பற்றி ஆழமாக ஆராய்ந்து வருகிறார்கள்.

கண்ணின் கருமணிகள் கீழே இருக்கும்போது அசைவு அதிகம். மேலே போகும்போது அசைவு குறைவு. இமைகளுக்குள் கருவிழி அதிகம் அசையும்போது, பரபரப்பான கனவு தோன்றும். கருவிழி அசைவை விஞ்ஞானிகள் REM என்று குறிப்பிடுவார்கள். Rapid eye movement என்பதன் சுருக்கம் இது.

கருமணிகள் கீழே இறங்க இறங்க 'ரெம்' என்ற அசைவு அதிகம். இது அதிகரித்தால் வேகமான கனவு வரும். கருமணி மேலே ஏற அசைவு குறையும்; உறக்கம் ஆழமாகும். 'ரெம்' இல்லாமலே போகும்போது, மிக ஆழ்ந்த உறக்கம் ஏற்படும். அந்த வேளையில், கருமணிகள் இரு புருவ நடுவை அடையும்.

சமாதி என்னும் ஆழ்நிலைத் தியான நிலையில் நிகழ்வதுதான், ஆழ்ந்த உறக்கத்தின் போதும் நிகழ்கிறது. சமாதி நிலையிலும் கருமணிகள் புருவ மத்தியைத்தான் அடைகின்றன.

இரு புருவ மத்தியில் கருமணிகள் இருக்கும்போது, இந்த உலக வாழ்க்கை முடிந்துபோய், அடுத்த உலக வாழ்க்கை ஆரம்பமாகிறது என்பதைச் சுட்டிக் காட்டவே, இரண்டு வரலாற்றுச் சம்பவங்களைச் சொன்னேன். அந்த மையம் ஒரு கதவு. கதவிற்கு இந்தப் பக்கம் இந்த உலகம். அதற்கு அந்தப் பக்கம் நாம் அறிந்திராத, இயற்கை கடந்ததோர் உலகம்.

அந்த அறியப்படாத உலகின் குறியீடாகவே சிவந்த குங்குமத் திலகம் உருவாக்கப்பட்டது. அதை ஏதோ ஓரிடத்தில் வைப்பது சரியல்ல. குரு ஒருவர், அதை எங்கே வைப்பது என்று, தம் விரல் வைத்துச் சுட்டிக் காட்டுவார். அங்கேதான் வைக்க வேண்டும். கண்ட இடத்தில் வைக்கக்கூடாது. காரணம், ஒவ்வொருவருக்கும் அந்த இடம் வேறுபடும்.

மூன்றாம் கண்ணின் இடம் ஒவ்வொருவருக்கும் வேறுபடுகிறது. புருவ நடுவிற்குச் சற்று மேலேதான் பெரும்பாலோர்க்கு அது அமைந்திருக்கிறது. முற் பிறவிகளில் ஒருவர் நெடுங்காலம் தியானம் செய்தவராக இருந்தால், சமாதி அனுபவம் சிறிதளவு பெற்றவராக இருந்தால், அவரது மூன்றாம் விழி சற்றுக் கீழே இருக்கும்.

அவ்வாறு முன்பு தியான அனுபவமே இல்லாதவராக இருந்தால், நெற்றியின் நடுவில் அந்த இடம் இருக்கும். போன பிறவிகள் எப்படிப்பட்டவை என்பதை, அதன் நிலை சொல்லிவிடும்! அந்த அனுபவம் முற்பிறவிகளில் பெற்றவரின் மூன்றாம் கண், மற்ற இரு கண்களுக்குச் சமமான நேர்கோட்டில், இருக்கும். அதாவது மற்றவரை விடக் கீழே இறங்கி இருக்கும். ஆனால், அதற்கும் கீழே இறங்காது.

மூன்று விழிகளும் ஒரே நேர்கோட்டில் அமையும் போது, ஒரு சிறிய அதிர்வும், சிறு நிகழ்வும்கூட சமாதி நிலைக்குக் கொண்டுபோய் விடும். அந்த நிகழ்ச்சி மிக அற்பமானதாகக் கூட இருக்கலாம். சிலர்,

வெளிக்குத் தோன்றும் காரணம் எதுவும் இல்லாமலேயே, சமாதி நிலைக்குள் நழுவிச் சென்றுவிடுவது நமக்கு வியப்பளிக்கலாம்.

ஒரு பெண் ஜென் துறவி பற்றிய செய்தி இது... அவள் ஒருநாள் தலையில் தண்ணீர் குடத்தைச் சுமந்தபடி வந்து கொண்டிருந்தாள். எப்படியோ அது தவறிக் கீழே விழுந்து உடைந்துவிட்டது. குடம் கீழே விழும் நிகழ்ச்சியால் அவளுக்குச் சமாதி நிலை சித்தித்தது!

குடம் கீழே விழுந்து உடைந்தது சாதாரண நிகழ்ச்சி. என்றாலும் அது, சமாதி நிலையடையத் தூண்டுகோலாக அமைந்து விட்டது. இரண்டிற்கும் எந்தத் தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை.

இதேபோல இன்னொரு நிகழ்ச்சி. அது 'லாவோ த்சு'வின் வாழ்வில் நிகழ்ந்தது. இலையுதிர் காலத்தில் ஓர்நாள், அவர் மரத்தடியில் அமர்ந்திருந்தார். இலைகள் கீழே உதிர்ந்து கொண்டிருந்தன. அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த 'லாவோ த்சு' சட்டென ஞானம் பெற்றார்!

இலை விழுவதற்கும் ஞானம் பெறுவதற்கும் ஒரு தொடர்பும் இல்லை. கடந்த காலச் சாதனைகள் காரணமாகப் பக்குவ நிலைக்குத் தயாராக இருக்கும்போது, ஒரு சிறு அற்ப நிகழ்வு அதைத் தூண்டிவிட, கருவிழிகள் மூன்றாவது விழியின் இடத்தை நெருங்க, சமாதி நிலை சட்டென வந்து விடுகிறது. தூண்டுதல் எதுவாகவும் இருக்கலாம்.

சிவப்புக் குங்குமத் திலகத்தைச் சரியான இடத்தில் வைத்தால், அது பலவற்றைச் சுட்டிக் காட்டும். முதலாவதாக, திலகத்தை இன்ன இடத்தில்தான் வைக்க வேண்டும் என்று உங்கள் குரு சுட்டிக் காட்டியிருப்பார். அப்புறம் சில அனுபவங்கள் உங்களுக்கு ஏற்பட ஆரம்பிக்கும்.

நீங்கள் கண்களை மூடி அமர்ந்தவுடனே, ஒரு விரல், புருவ நடுவை சுட்டிக் காட்டுவதை உணர்வீர்கள். அது சற்றும் நீங்கள் எதிர்பாராத ஒன்று. மூன்றாவது விழியின் பார்வை அதுதான்.

திலகம், மூன்றாவது விழியின் அளவுக்கே இருக்க வேண்டும்; சரியான இடத்திலும் இருக்க வேண்டும். அப்புறம் அந்த இடம் மட்டுமே உங்கள் நினைவில் இருக்கும், இருபத்து நான்கு மணிநேரமும்! உங்கள் உடல் மறந்தே போகும்! திலகத்தின் நினைவு கூடக் கூட, உடலின் நினைவு குறைந்து கொண்டே போகும்.

அப்புறம் ஒரு நேரம் வரும். அது முதல், எல்லாம் மறந்துபோய், நெற்றித் திலகம் மட்டுமே நினைவில் நிற்கும். அந்த நிலை வந்த பிறகு, உங்களால் மூன்றாம் விழி திறக்க முடியும். இந்தப் பயிற்சி ஏற்பட்ட பிறகு உங்கள் முழுப் பிரக்ஞையும் படிகநிலை அடைந்து, மூன்றாம் விழி நோக்கியே இருக்கும்.

ஒருமுகப்பட்ட பிரக்ஞையின் குவிமையமே மூன்றாம் விழியின் திறவுகோல். கதிரொளியை ஒரு குவி ஆடியின் மூலமாக ஒரு காகிதத்தின் மேல் விழச் செய்தால், ஒளி, புள்ளியாகக் குவியும்போது, அந்த மையப் புள்ளியில் தீப்பிடிக்கும்.

சூரியக் கதிர்கள் ஒன்றுபட்டுச் செறியும்போது, நெருப்புப் பற்றிக் கொள்கிறது. பிரக்ஞை, உடல் முழுவதுமாகப் பரவியிருக்கும்போது, அது உங்கள் வாழ்வைச் சுமக்கிற வேலையைச் செய்கிறது.

அது ஒட்டுமொத்தமாய் மூன்றாம் விழியில் குவியும்போது நெற்றிக் கண்ணில் தீப்பொறி பறக்கிறது! மூன்றாம் விழியே அதில் பற்றி எரிகிறது! அப்போதுதான், உள் உலகப் பிரபஞ்சத்தை அடைத்திருந்த கதவு திறந்து கொள்கிறது.

அதனால், திலகம் சரியான இடத்தில் வைப்பது முக்கியம். உங்கள் குரு, உங்கள் மூன்றாம் விழியின் இடத்தைத் தொட்டுப் பார்த்துத் தெரிந்து கொள்ளாமலேயே, உங்கள் திலகத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்வார். உங்கள் முன்னேற்றத்தை அறிந்து கொள்வார்.

மூன்றாம் விழியின் இடம் கீழே நகர நகர, நீங்களும் திலகத்தைக் கீழே நகர்த்தி வைக்க ஆரம்பித்து விடுவீர்கள். ஒவ்வொரு நாளும் அது நகர்வதை உணர்வீர்கள். அந்த மாற்றமே குருவுக்கு உங்கள் முன்னேற்றத்தை உணர்த்திவிடும்.

ஒரு குருவுக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் இருக்கலாம். சீடன் குரவின் முன் தலை பணிந்து வணங்கும்போது, திலகத்தின் நிலைகண்டு, அவனது முன்னேற்றத்தை அவர் உணர்ந்து கொள்வார். சீடனின் திலகமே அவனது முன்னேற்ற அறிகுறி.

சீடனுக்குத் தடையேற்படலாம். அவனுடைய பிரக்ஞை ஒன்று குவியாமல் போகலாம். திலகத்தைத் தவறான இடத்தில் வைக்கலாம். அதையெல்லாம் குரு கண்டுகொள்வார்.

மையம் கீழே இறங்கும்போது, தியான முறை மாறவேண்டும். மருத்துவ மனையில், நோயாளியின் நோய்க் குறிப்பு அட்டை போலத்தான், சீடனின் திலகம், குருவுக்கு. செவிலி, நோயாளியின்

உடல் வெப்பம், இரத்த அழுத்தம், நாடித் துடிப்பு போன்றவற்றை அதில் அவ்வப்போது குறித்து வைக்கிறாள். மருத்துவர் வந்து பார்த்து, நோயாளியின் நிலையறிகிறார்.

அப்படித்தான் நெற்றித் திலக நிலை கண்டு, குரு, சீடனின் பக்குவ நிலையை அறிகிறார். எப்படி இருக்கிறாய் என்று சீடனை அவர் கேட்க வேண்டியதே இல்லை. சீடனுக்கு எந்தவகை உதவி தேவை, சீடன் என்ன மாற்றம் செய்ய வேண்டும் என்பது குருவுக்குத் தெரிந்துவிடும். திலகத்தின் மதிப்பு இதுதான். தியான மாற்றத்தைத் தெரிவிக்கும் அறிகுறி அது.

மூன்றாம் விழியின் இன்னொரு முக்கியமான அம்சம், அது ஆத்ம சக்தியின் மையம் என்பது. யோகத்தில் அதை 'ஆணைச் சக்கரம்' என்பார்கள். அந்த மையத்திலிருந்துதான் நமது வாழ்வின் கட்டுப்பாடுகள் எல்லாம், வழிநடத்தப்படுகிறது. நமது வாழ்வில் காணப்படும் ஒழுங்கும், ஒத்திசைவும் அந்த மையத்திலிருந்துதான் பிறக்கின்றன.

இதை இன்னொரு வகையிலும் புரிந்து கொள்ளலாம்... நம் எல்லாருக்குமே பாலுணர்வு மையம் உண்டு. நமக்கு இது தெரிந்திருப்பதால், அந்த மையம் மூலம் புரிந்து கொள்வது எளிது. ஆனால், மூன்றாவது விழிச் சக்கரம் பற்றி நமக்குத் தெரியாது.

பாலுணர்வு மையம் தூண்டப்படாதவரை நமக்குக் காமம் எழாது. நமது வாழ்வின் எல்லா ஆசைகளும் அந்த மையத்திலிருந்தே பிறக்கின்றன. ஒவ்வொரு குழந்தையும், காமத்திற்குத் தகுதியானதாகவே பிறக்கிறது; காம இச்சையை நிறைவு செய்துகொள்ளத் தேவையான உறுப்புகளும் பூரணமாக உடலில் அமைந்திருக்கின்றன.

பிள்ளை பெறும் கால கட்டம் முழுவதற்கும் தேவையான கருக்களுடன்தான் பெண் பிறக்கிறாள் என்பது அதிசயமான அம்சம். அந்தக் கால கட்டத்திற்குப் பிறகு ஒரு கருமுட்டை கூட உற்பத்தியாவதில்லை. வாழ்வின் முதல் நாளில், அவளிடம் எவ்வளவு கருமுட்டைகள் இருக்கின்றன என்பதை வைத்து, அவள் எவ்வளவு குழந்தைகளைப் பெறமுடியும் என்பது வரையறுக்கப்பட்டு விடுகிறது.

அவள் பூப்படைந்த பிறகு, அவளது கருப்பையிலிருந்து, மாதந்தோறும் ஒரு கருமுட்டை வெளியேற்றப்படுகிறது. அது, ஒரு ஆண் விந்துவின் கருவைச் சந்திக்கும் வாய்ப்பு அமைந்தால், கர்ப்பம்

தரித்துவிடும். அப்புறம் கருமுட்டை தோன்றாது. அது உருவாகிக் குழந்தை பிறந்து சில மாதங்கள் ஆகும்வரை கருமுட்டை தோன்றுவதில்லை.

பாலுணர்வு மையம் தூண்டப்படாதவரை காம இச்சை எழுவதில்லை. அந்த மையம் செயலற்றுக் கிடக்கும் போது, காம உறுப்புகள் சரிவர அமைந்திருந்தாலும் கூட இச்சை எழுவதில்லை.

பதின்மூன்று அல்லது பதினான்கு வயது அடையும் போது, அந்த மையம் தூண்டப்பெறுகிறது. நாம் அதைத் தூண்டாவிட்டாலும் கூட அது இருப்பது நமக்குத் தெரிந்து விடுகிறது. காரணம் இயற்கையின் தூண்டுதல். சூழ்நிலை மாறாக இருந்துவிட்டால், அது இருப்பது மிகச் சிலருக்குத்தான் தெரியவரும்.

காம நினைவு மனதில் குறுக்கிட்ட மாத்திரத்தில், உற்பத்தி அமைப்பு முழுவதுமே கிளர்ச்சி பெற்றுவிடுவது பற்றி, நீங்கள் எப்போதாவது வியப்படைந்ததுண்டா? நினைவு என்னவோ மனதில் மட்டுமே - அது காம மையத்தை விட்டு தூரத்தில் இருக்கிறது. என்றாலும், காம உணர்வுகள் அந்த மையத்தைத் தூண்டிவிட்டு விடுகின்றன.

காம எண்ணம், அந்த மையத்தைத் தன் பக்கமாக ஈர்த்துக் கொண்டு விடுகிறது. தண்ணீர் பள்ளத்தை நோக்கிப் பாய்வது போல, ஒவ்வொரு எண்ணமும் அதன் சார்பு மையத்தால் ஈர்க்கப்படுகிறது.

ஆத்ம சக்தி மையமான மூன்றாம் விழி மையத்தின் செயல்பாடுகள் என்ன என்பதைப் பார்ப்போம்.

இந்தப் பிறவியில், மூன்றாம் விழியின் ஆணைச் சக்கரத்தால் தூண்டுதல் பெறாதவர்கள், ஆயிரம் விதங்களில் அடிமைகளாக இருப்பார்கள். அந்த மையம் இல்லாமல் சுதந்திரம் இல்லை.

நமக்கு, அரசியல், பொருளாதாரச் சுதந்திரங்கள் பற்றித் தெரியும். ஆனால், இவை உண்மைச் சுதந்திரங்கள் அல்ல. காரணம், ஆத்மசக்தி இல்லாதவன், மூன்றாம் விழி அதிர்வு இல்லாதவன், ஏதாவது ஒரு வகையில் அடிமையாகத்தான் வாழ முடியும்.

அவன் ஏதாவது ஒன்றில் சுதந்திரம் பெற்றிருந்தாலும், வேறு ஏதாவது ஒன்றில் அடிமையாகவே இருப்பான். தனக்குத்தானே எஜமானனாகும் ஆளுமை ஆற்றல், மனோசக்தி, அவனிடம் இருக்காது. தன்னைக் கட்டுப்படுத்தவே அவனால் முடியாது. அவனது உடலும், உணர்வுகளும் அவனை அடக்கி ஆண்டு கொண்டிருக்கும்.

பசிக்கிறது என்று அவன் வயிறு சொன்னால், அவனுக்குப் பசிக்கும். உடல், நோயடைந்ததாகச் சொன்னால், அவன் நோயாளி ஆகிவிடுவான். அவன் காம மையம், உடலுறவுக்கு ஆசைப்பட்டால், அவனுக்குக் காம இச்சை எழும். வயதாகிப் போய்விட்டதாக உடல் சொன்னால், அவன் கிழவனாகி விடுவான். உடல் உத்தரவிடுகிறது. அவன் கீழ்ப்படிகிறான்.

ஆனால், ஆத்ம சக்தி மையம் தூண்டப்பட்டவுடன் உடல், ஆணையிடுவதை நிறுத்திக் கொள்கிறது! மாறாக அடங்கிப் போகவும் ஆரம்பித்து விடுகிறது! அமைப்பு முழுதுமே தலைகீழாய் மாறிவிடுகிறது.

அப்படிப்பட்ட மனிதர் தனது இரத்த ஓட்டத்தை நிறுத்த விரும்பினால், அது நின்றுவிடும்! இதயத் துடிப்பை நிறுத்தும்படிக் கட்டளையிட்டால், இதயம் நின்றுவிடும்! நாடித்துடிப்பை நிறுத்தச் சொன்னால், துடிப்பது நின்றுவிடும்! அப்படிப்பட்டவர், தன் உடல், மனம், உணர்வுகளின் எஜமானர் ஆகிவிடுகிறார்.

ஆனால், ஆணைச் சக்கர மையத்தின் தூண்டுதல், செயல்பாடு, இல்லாமல் இதெல்லாம் நிகழாது. எந்த அளவுக்கு அந்த மையத்திற்கு விழிப்புணர்வைக் கொண்டு வருகிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் உங்களின் எஜமானர்.

அந்த மையத்தைத் தூண்டிவிட, யோகத்துறையில் பல சோதனைகள் செய்யப்பட்டன. அதில் ஒன்று நெற்றித் திலகம். அந்த மையத்தில் விழிப்புணர்வு ஏற்படும்படிச் செய்து விட்டால், இன்றும் என்றும் மாபெரும் விளைவுகள் உண்டாகும்.

நெற்றியில் திலகம் வைத்தவுடனே, உங்கள் கவனம் அடிக்கடி அதன் மேல் செல்லும். வைக்கப்பட்ட இடமும் உடலின் மற்ற பகுதிகளிலிருந்து விலகிவிடும். அந்த இடம் உணர்வு மயமானது. சரியான இடத்தில் திலகம் அமைந்து விட்டால், நீங்கள் அதை நினைத்தேயாக வேண்டும். உடலிலேயே மிகவும் உணர்ச்சிமிக்க இடம் அது. அந்த உணர்வைத் தொடுவதற்கான முயற்சிதான் திலகமிடல்.

அந்த இடத்தைக் கண்டுகொள்ள வழிமுறைகள் இருக்கின்றன. நூற்றுக்கணக்கான சோதனைகளுக்குப் பிறகே சந்தனக் குழம்பு தேர்ந்தெடுக்கப்பட்டது. உணர்ச்சி மயமான அந்த இடத்திற்கும், சந்தனக் குழம்பிற்கும் ஓர் ஒத்ததிர்வு இருக்கின்றது.

அரைத்த சந்தனத்தை மூன்றாம் விழிச் சக்கரம் அமைந்துள்ள இடத்தில் வைத்தால், அந்த இடத்தின் உணர்வு ஆழமடைகின்றது.

அந்த இடத்தில் எதையாவது வைப்பது என்பது தவறு. அது, அந்த இடத்தை மோசமாகப் பாதித்து விடக்கூடும்.

சான்றாக, இக்காலப் பெண்கள், கடையில் விற்கப்படும் 'ஸ்டிக்கர்' பொட்டுகளை வாங்கி அணிகிறார்கள். அதற்கு எந்தச் சிறப்பும் இல்லை. யோகத்திற்கும் அதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. மாறாக, அது தீங்குதான் செய்கிறது. மூன்றாவது கண்ணுக்கு.

எது அந்த இடத்தின் உணர்வைத் தூண்டும் என்பதைக் கண்டு கொள்ள வேண்டும். உணர்வைத் தூண்டினால் அந்தப் பொருள் நல்லது. இல்லாவிட்டால் கெடுதல். இந்த உலகத்தில் அற்பப் பொருளும் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தி விடக்கூடும். ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கேயான பாதிப்புச் சக்தி உண்டு.

இதை மனதில் வைத்துக் கொண்டு, பயனுள்ள சில சிறப்புப் பொருள்களைக் கண்டு கொள்ள வேண்டும். ஆணைச் சக்கர மையத்தின் உணர்வுகள் தூண்டப் பெறுமானால் உங்களுக்கும் ஒத்திசைவும், கவுரவமும் கூடும். நீங்கள் மேலும் முழுமையான ஒருமைப்பாட்டை அடைவீர்கள்; உங்களுக்குள் எதுவுமே பிளந்து, பிரிந்து, விலகி நில்லாது. எல்லாமே ஒன்றிணைந்துவிட, நீங்கள் பூரணமானவர் ஆகிவிடுவீர்கள்.

நெற்றியில் வைக்கப்படும் வட்டப் பொட்டுக்கும், நீளமாக வைக்கப்படும் திலகத்திற்கும் வேறுபாடு உண்டு. வட்டப்பொட்டு, பெண்களுக்கானது. பெண்களுக்கு மூன்றாம் விழி மையம் மிகவும் பலவீனமானது. காரணம், அவளது முழு ஆளுமையும் சரணாகதி அடைவதற்காகவே படைக்கப்பட்டிருப்பதுதான் - அவளது அழகே சரணாகதியில்தான் இருக்கின்றது.

ஆணைச் சக்கர மையம், ஆற்றல் பெற்றுவிட்டால், சரணாகதி சாத்தியமில்லை. பலவீனமான மையம்தான் பெண்களிடம் இருக்கின்றது. ஆண்களோடு ஒப்பிடும்போது, பெண்களின் மையம் பலவீனம். அதனால்தான், பெண் ஏதோ ஒருவிதத்தில் இன்னொருவருடைய உதவியைச் சார்ந்து இருக்கிறாள்.

பெண், துணிச்சலுடன் தனித்து நிற்பது, சாதாரணமாகக் காணப்படுவதில்லை. பற்றிக் கொள்ள இன்னொரு கை வேண்டும். சாய்ந்து கொள்ள இன்னொரு தோள் வேண்டும். யாராவது அவளை வழிநடத்திச் செல்ல வேண்டும். இதைச் செய், இப்படிச் செய், என்று யாராவது அவளுக்குச் சொல்ல வேண்டும். அதைப் பின்பற்றுவதில்தான் அவள் மகிழ்ச்சியடைகிறாள்.

பெண்ணின் மூன்றாவது விழிச் சக்கரத்தைத் தூண்டிவிடும் முயற்சி இந்திய நாட்டில் மட்டுமே நிகழ்ந்திருக்கின்றது. அந்தத் தூண்டுதல் இல்லையென்றால், பெண் ஆன்மிக வாழ்வில் முன்னேற்றம் காணமுடியாது என்பதால்தான் அந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. மனோ சக்தியில்லாமல் தியானப் பயிற்சியில் அவள் முன்னேற்றம் காண முடியாது.

அதனால், அந்த இடம் திடமானதாகவும், உறுதியானதாகவும் இருக்க வேண்டும். ஆனால், பெண்ணுக்கு வேறு வகையில் முயற்சி செய்ய வேண்டும். ஆண்களுக்குச் செய்வதுபோல் செய்தால், அவளது பெண்மைத் தன்மை குறைந்துவிடும். அப்புறம் அவளுக்குள் ஆண் இயல்புகள் வளர ஆரம்பித்துவிடும்.

அதனால், வட்டப்பொட்டு, பெண்ணின் கணவனோடு மாறாத, உறுதியான தொடர்பு கொண்டுள்ளது. இந்தத் தொடர்பு தேவை. இல்லாவிட்டால், அவளது சுதந்திரம் கூடிவிட, அவள் தன்னிறைவு பெற்று விடுவாள். எந்த அளவு அவள் சுதந்திரையாக இருக்கிறாளோ அந்த அளவு அவளது மென்மையும், அழகும், இணங்கும் இயல்பும் அழிந்துவிடும்.

மற்றவரின் உதவி நாடுவதில் ஒருவித மென்மையும், இனிமையும் பெண்ணிடம் உண்டு. அவள் சுதந்திரம் பெற்றுவிட்டால், அவள் கடினமானவளாக இறுகிப்போய் விடுவதைத் தவிர்க்க முடியாது. அவளை வலிமையுடையவளாக ஆக்குவதால் அவளது பெண்மை அழிந்துவிடும்; ஒரு தாயாக இருப்பதற்கு இடையூறு ஏற்படும். அப்புறம் அவள் சரணாகதி அடைவது சிரமம். அவளைச் சரணடையச் செய்யவே முடியாது. அதனால், அவளது ஆணை மையத்தை கணவனோடு இணைக்க ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இது இரண்டு வகையில் உதவுபடியாக இருக்கும். அவளது பெண்மையும் பாதிக்காது; அவளது ஆணை மையமும் தூண்டப் பெறும்.

இதை இப்படிப் புரிந்து கொள்வோம்: மூன்றாம் விழிச் சக்கரம் சம்பந்தப்பட்டவருக்கு எதிராகச் செல்லாது. அது சமய குருவுடன் தொடர்பு கொண்டிருந்தால், அது அவருக்கு எதிராகச் செல்ல முடியாது. ஒரு பெண்ணின் கணவனோடு அது சம்பந்தப்பட்டிருந்தால், அவள் அவனுக்கு எதிராகச் செல்ல மாட்டாள்.

கணவனின் ஆழ்ந்த தொடர்புடன், வட்டப்பொட்டை அவள் சரியான இடத்தில் அணிந்து கொண்டால், அவள் அவனைப் பின்பற்றி நடப்பாள். அதேசமயம், அவள் உலகின் மற்றவரைவிட, அதிக சக்தி வாய்ந்தவளாகத் திகழ்வாள்!

மனோவசியம் என்றால் என்ன என்பது உங்களுக்குப் புரிந்திருந்தால், இந்தத் தொடர்பு அம்சத்தை உங்களால் புரிந்து கொள்ள முடியும். ஒருவர் மனோவசியத்திற்கு உள்ளாகி இருந்தால், அவருக்கு, வசியம் செய்தவரின் குரல் மட்டுமே கேட்கும்.

அவருடைய அடக்கமான ஆணையிடும் குரல் கேட்குமே தவிர, பார்வையாளர்கள் இருந்தால்கூட, அவர்களின் உரத்த குரலும் கேட்காது. இந்தியப் பெண் வட்டப்பொட்டு வைத்துக் கொள்வதும் இதே போலத்தான். அவளுக்கு அது, ஆழ்ந்த கருத்தைத் தூண்டிவிடும்.

மனோவசியத்திற்கு உள்ளானவர், வசியம் செய்தவருக்கு மட்டுமே கதவு திறக்கிறார். மற்றவர்களுக்கு அவர் கதவு மூடிக் கொள்கிறது. கிசுகிசுத்தாலும் கூட, அவர் செய்து விடுவார். மற்றவரின் உரத்த குரல்கூட அவர் காதில் விழாது. அந்த மனிதரின் பிரக்ஞைக்கு ஒரே வாசல் மட்டுமே உண்டு. அது வசியம் செய்தவருக்கு மட்டுமே திறக்கும். அவரது மூன்றாம் விழிச் சக்கரம், வசியம் செய்தவரோடு மட்டும் பந்தப்பட்டு விடுகிறது.

இதே போலத்தான், பெண்ணின் வட்டப்பொட்டு அவள் கணவனுடன் மட்டும் பந்தப்பட்டு விடுகிறது. அவள் தன் கணவனை மட்டுமே பின்பற்றுவாள். அவனுக்கு மட்டுமே சரணடைவாள். அதுதவிர, உலகின் மற்றவர்களிடையில், அவள் தன் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வாள். அவளது பெண்மை இயல்புக்கு எந்தக் குறையும் நேராது.

கணவன் இறந்தவுடன் அவள் தன் திலகத்தை அழித்து விடுகிறாள். காரணம், இனி அவள் யாரையும் பின்பற்ற வேண்டியதில்லை! அதன் அறிவியல் அம்சம் என்ன என்பது மக்களுக்குத் தெரியாது. பெண், விதவையாகி விடுவதால் பொட்டு அழிக்கப்படுகிறது என்று மக்கள் நினைக்கிறார்கள். காரணம் வேறானதாக இருக்கிறது.

அதன் பிறகு அவள், அதிக சுதந்திரத்துடன் ஆண் பிள்ளைபோல வாழ்நாள் முழுதும் வாழலாம்; மிகுந்த சுதந்திரம் பெற்றால், அது அவளுக்கு மேலும் நல்லதாகிறது. அற்பக் காரியத்திற்கும் கூடப் பிறரைச் சார்ந்திருக்கும் நிலை, அவளை விட்டு அடியோடு விலகிப் போய் விடுகிறது.

பொட்டுப் பரிசோதனை ஆழமானது. சரியான இடத்தில், சரியான பொருள் கொண்டு, சரியாக வைக்க வேண்டும். இல்லாவிட்டால் அதற்கு அர்த்தமே இல்லை. அது வெறும் அழகுக்கு

என்றால், அதற்கு எந்தவித மதிப்பும் இல்லை. வெறும் சம்பிரதாயமாக மட்டுமே அமையும்.

அதனால்தான், பெண்ணுக்கு முதன் முதலாகப் பொட்டு வைப்பதை ஒரு சடங்காகச் செய்கிறார்கள். அது, குரு சீடனுக்குத் திலகம் சூட்டுவது போன்றது. அப்படிச் செய்தால்தான் அது பயனுள்ளதாக அமையும்.

அவையெல்லாம் இப்போது அர்த்தமற்றுப் போய்விட்டன. அவற்றிற்குப் பின்னால் உள்ள அறிவியல் சங்கிலி முழுசாய்த் தொலைந்து விட்டது. எல்லாம் வெறும் சடங்காகி விட்டது; உள்ளீடற்ற வெறும் கூடாகிவிட்டது. சிலர், இன்னும், எந்த நோக்கமும் இல்லாமல், அன்பும் இல்லாமல் அதைச் சுமந்து திரிகிறார்கள்.

பயன்தரும் மூன்றாம் விழிச் சக்கரம் பற்றி, மேலும் சிலவற்றைச் சொல்கிறேன். ஆணைச் சக்கரத்திலிருந்து நேர் மேலே இழுக்கப்படும் கோடு, மூளையை இரு சம பாகங்களாகப் பிரிக்கிறது. இடம், வலம், என. மூளை, அந்தக் கோட்டில்தான் ஆரம்பமாகிறது.

நமது மூளையில் பாதிகூடப் பயன்படுத்தப் படுவதில்லை என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்! நம்மிடையே அதி புத்திசாலிகளாக உள்ள அறிஞர்கள்கூட பாதிப் பகுதியைப் பூரணமாய்ப் பயன் படுத்துவதில்லை! மற்ற பகுதி சும்மா கிடக்கிறது, வளர்ச்சியே இல்லாமல்!

அது ஏன் அப்படியிருக்கிறது என்பது, விஞ்ஞானிகளுக்கும், மனோதத்துவ நிபுணர்களுக்கும், இன்னும் புதிராகவே இருக்கிறது. அறுவை செய்து பாதி மூளையை அகற்றி விட்டாலும் கூட, ஒருவர் இயல்பாகவே இயங்க முடியும்! அது அகற்றப்பட்டதுகூட அவருக்குத் தெரியாது!

ஆனால், இயற்கை எதையுமே தேவையில்லாமல் படைக்காது என்பது விஞ்ஞானிகளுக்குத் தெரியும். ஒரு தனி மனிதருடைய மூளையில் தவறு ஏற்படலாமே தவிர, ஒட்டு மொத்தமான சமுதாய முளைகளில் தவறு நேராது. சமுதாயத்தின் அரைவாசி மூளை பயன்படாமல் செயலற்றுப் போனாலும் கூட.

அந்த அரைவாசி மூளை செயல்படுவது, யோகத்தில் மூன்றாம் விழிச் சக்கரம் செயல்பட ஆரம்பித்தால்தான். அரைவாசி மூளை மூன்றாம் விழிச் சக்கரத்திற்குக் கீழே உள்ள மையத்தோடு இணைந்திருக்கிறது. மற்ற அரை மூளை, அந்தச் சக்கரத்திற்கு மேலே உள்ள மையத்தோடு இணைந்திருக்கிறது.

மூன்றாம் விழிச் சக்கரத்திற்குக் கீழே உள்ள மையங்கள் செயல்படும்போது, மூளையின் இடப்பகுதி வேலை செய்கிறது. மேலே உள்ள மையங்கள் செயல்படும்போது, மூளையின் வலப்பாகம் செயல்படுகிறது. மறுபாதி செயல்படாதவரை அதுபற்றி எதையும் நாம் தெரிந்து கொள்ள இயலாது.

ஸ்வீடனில் ஒருவர், இரயிலிலிருந்து கீழே விழுந்து விட்டார். அவரை மருத்துவமனைக்குக் கொண்டு போனார்கள். அப்போது அவருக்கு, பத்து மைல் சுற்றளவில் ஒலிபரப்பும் வானொலி நிலையங்களின் நிகழ்ச்சிகள் கேட்க ஆரம்பித்தன! மூளையில்தான் ஏதோ பழுது ஏற்பட்டுவிட்டது என்று முதலில் நினைத்தார்கள். காரணம், தம் காதில் ஏதோ ரீங்காரம் எழுவதாகத்தான் அவர் தெரிவித்தார்.

ஆனால், இரண்டு வாரங்களில் அவர், வானொலி நிகழ்ச்சிகளைத் தெளிவாகக் கேட்க ஆரம்பித்து விட்டார். அவர் பயந்துபோய், என்ன கோளாறு என்று மருத்துவரைக் கேட்டார்.

மருத்துவர், அவர் கேட்டதைச் சொல்லும்படிக் கேட்டார். நோயாளி, கேட்ட பாடலைச் சொன்னார். அதை, மருத்துவர் வீட்டிலிருந்து புறப்படும்போது கேட்டுவிட்டுத்தான் வந்திருக்கிறார். அவர் புறப்படும்போது ஒலிபரப்பு முடிந்துவிட்டது.

மறு ஒலிபரப்பு ஆரம்பமாகும் நேரத்திற்கு மருத்துவமனைக்கு ஒரு வானொலிப் பெட்டியைக் கொண்டு வந்தார்கள். சோதனை செய்ததில், அந்த வானொலியில் ஒலிபரப்பானதே, அவரது காதுகளில் ஒலித்திருக்கிறது. அவரது காதுகள் வானொலி ஏரியல்களாகச் செயல்பட்டிருக்கின்றன என்பது தெரிந்தது! அவருக்கு ஏதாவது அறுவை நடத்தியே ஆகவேண்டும். இல்லாவிட்டால் அந்த வானொலி ஓசையை நிறுத்த வழியே இல்லை! அவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், வானொலி அவரது செவிகளில் ஒலித்துக் கொண்டே இருந்தது!

இந்த நிகழ்ச்சி நமக்கு ஒன்றைத் தெளிவாக்குகிறது - காதுக்கு மகத்தான சக்தி இருக்கிறது! இந்த நூற்றாண்டின் இறுதியில், வானொலிப் பெட்டி இல்லாமலேயே நம்மால் நிகழ்ச்சிகளைக் கேட்கும் நிலை வரலாம்! காதில், ஆரம்பிக்கவும், நிறுத்தவும் செய்கிற ஒரு கருவியை மாட்டிக் கொண்டால் போதும்!

இரயில் விபத்தின் காரணமாக அந்த யோசனை வந்தது. பல யோசனைகளும், புதிய கண்டுபிடிப்புகளும் விபத்துகளாலேயே

கண்டுபிடிக்கப்பட்டன. நமது பழைய சிந்தனைகள் காரணமாக, காதுக்கு அப்படியொரு சக்தி இருப்பதாக நம்மால் நினைக்கவே முடியவில்லை.

வானொலி, பிற்காலத்தில்தான் கண்டுபிடிக்கப்பட்டது. காதுகள் வந்த பின்னால்! காதுகள் முன்மாதிரி! காது இருப்பதால்தான் வானொலி. காதின் மற்ற ஆற்றல்கள் என்ன என்பது தெரியவில்லை. ஏதாவது ஒரு விபத்தின் மூலமாகக் கண்டு கொண்டால்தான் உண்டு!

இரண்டாம் உலகப் போரின்போது, இதே போன்ற நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டது. காயம்பட்ட ஒருவன் மயக்கமடைந்தான். அவனுக்கு நினைவு திரும்பியபோது, அவனால் விண்மீன்களைப் பார்க்க முடிந்தது, பகல் நேரத்திலேயே!

விண்மீன்கள் எப்போதும் அங்கேதான் இருக்கின்றன. கதிரொளியின் வீச்சால் பகலில் புலப்படுவதில்லை. வெகு தொலைவில் உள்ள அவற்றைக் கதிரொளி, காணாமல் தடுத்து விடுகிறது.

கதிரவனைவிடப் பல்லாயிரம் மடங்கும், பல லட்சம் மடங்கும், ஒளியும், பருமனும் மிக்க விண்மீன்கள் இருக்கின்றன. அவை, கதிரவனை விட வெகு தொலைவில் இருக்கின்றன. கதிரொளி நமது பூமியை அடைய சுமார் ஒன்பது நிமிடங்கள் ஆகின்றன. நமக்கு மிக அருகிலுள்ள விண்மீனின் ஒளி; பூமியை அடைய நான்கு 'ஒளியாண்டுகள்' ஆகின்றன!

ஒளி, வினாடிக்கு ஒரு லட்சத்து எண்பத்தி ஆறாயிரம் மைல் வேகத்தில் செல்லக் கூடியது. இந்த வேகத்தில் பயணம் செய்தும்கூட, கதிரொளி பூமியைச் சேர சுமார் ஒன்பது நிமிடங்கள் ஆகின்றன. அருகிலுள்ள விண்மீன் ஒளியோ நான்கு ஆண்டுகள் எடுத்துக் கொள்கிறது!

ஒளி பூமியை அடைய, நான்காயிரம் ஆண்டுகள் எடுத்துக் கொள்ளும் விண்மீன்களும், நான்கு லட்சம் ஆண்டுகள், நான்கு கோடி ஆண்டுகள், கோடானுகோடி ஆண்டுகள் எடுத்துக் கொள்ளும் அளவுக்கு, அளவு கடந்த தொலைவில் உள்ள விண்மீன்களும் பிரபஞ்ச வெளியில் இருக்கின்றன!

சில விண்மீன் ஒளிகள், புறப்பட்ட காலத்தில் பூமியே உருவாகவில்லை என்றும், அவை வந்து சேரும் போது பூமியே இல்லாமற் போகலாம் என்றும் விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்! பூமி என்றொரு கிரகம் இருந்ததே அந்த உலகிற்குத் தெரியாமல்

போய்விடும்! அவை பயணத்தில் இருக்கும்போதே பூமி அழிந்து விடலாம்!

காயம்பட்ட மனிதன் பகலில் விண்மீன்களைப் பார்த்தான். அவன் விழிகளுக்கு என்ன நேர்ந்தது? அவற்றிற்கு அதீத சக்தி கிடைத்தது. இந்த நிகழ்ச்சி கண்ணின் அபூர்வ ஆற்றலை வெளிப்படுத்துகிறது. நமது கண்களில் அழுத்தமான ஆற்றல் உறங்கிக் கொண்டிருக்கிறது. அது நமக்குத் தெரியாது.

அது நமக்கு ஓர் அற்புதம்போலத் தோன்றுகிறது. ஆனால், அது அற்புதமல்ல. நமக்குள் எத்தனையோ அற்புதங்கள் அடங்கி யிருக்கின்றன. ஆனால், அவை வெளிப்படுவதில்லை. பூட்டிய கதவுகளுக்குள் அவை அடைபட்டுக் கிடக்கின்றன.

நமது அரைவாசி மூளை பயன்படுத்தப்படாமல் இருப்பது பற்றியும், நெற்றிக் கண் தூண்டுதல் பெற்றால் அது செயல்பட ஆரம்பிக்கும் என்றும் குறிப்பிட்டேன். அதுதான் யோக தரிசனம்.

அண்மைக் கால நிகழ்ச்சிகளால் அந்த அகப்பார்வை வெளிச்சத்துக்கு வந்துவிடவில்லை. இருபதாயிரம் ஆண்டுகளாக நமக்குத் தெரிந்திருக்கும் உண்மைதான் அது. விஞ்ஞான முடிபுகளை, உறுதியாகச் சார்ந்திருக்க வழியில்லை. காரணம், இன்று உண்மையாக இருப்பதை விஞ்ஞானம் ஆறு மாதத்தில் பொய்யாக்கி விடும்!

ஆனால், இந்த யோகக் காட்சி, குறைந்தபட்சம் இருபதினாயிரம் ஆண்டு அனுபவப் பழைமை கொண்டது. இப்போதுள்ள இந்த மனித நாகரிகம்தான் முதலாவது என்ற மயக்கம் நமக்கு உண்டு. ஆனால், பல, மனித சமுதாயங்கள் முன்னே தோன்றி மறைந்து விட்டன. இதே அறிவியல் சிகரங்களை மனிதன் நமக்கு முன்னே பலமுறை எட்டிப் பார்த்து விட்டான். அந்தச் சமுதாயங்கள் அழிக்கப்பட்டு விட்டன.

1924ல், ஜெர்மனியில் அணுசக்தி ஆய்வு மையம் ஒன்று நிறுவப்பட்டது. ஒருநாள் திடீரென ஒருவர் அந்த மையத்திற்கு வந்தார். தம் பெயர் 'ஃபால்கநெலி' என்று சொல்லிக் கொண்டார். அணு ஆராய்ச்சி மேற்கொள்ள வேண்டாம் என்று எச்சரித்தார்! 'நமக்கு முன்னே, பல சமுதாயங்கள் அணுசக்தியால் அழிந்திருக்கின்றன. ஆய்வைத் தொடராமல் நிறுத்தி விடுவது நல்லது,' என்று எச்சரித்துவிட்டு உடனே வெளியேறி விட்டார்! அப்புறம் அவரைக் கண்டுபிடிக்க எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தார்கள். முடியவே இல்லை!

1940-ல், ஜெர்மனியின் மாபெரும் விஞ்ஞானி, ஹீசென்பர்க், அணுசக்தியின் ஆய்வில் ஈடுபட்டிருந்தபோது, அதே ஆள், விஞ்ஞானியின் பணியாளரிடம் ஒரு கடிதத்தைத் தந்து விட்டு மறைந்தார். அந்தக் கடிதத்தில் முன்பு தெரிவித்த அதே செய்தி காணப்பட்டது. ஆள் கிடைக்கவே இல்லை!

1945ல் ஹிரோசிமா மீது அணுகுண்டு வீசப்பட்டது. அதில் சம்பந்தப்பட்ட பன்னிரண்டு விஞ்ஞானிகளுக்கும் அதே ஃபால்கநெலி கடிதங்கள் அனுப்பினார். 'முதலடி எடுத்து வைத்து விட்டீர்கள். கடைசிக் காலடி வைப்பு அதிகத் தொலைவில் இல்லை. இனியும் காலமிருக்கிறது. உடனே நிறுத்தி விடுங்கள்,' என்று எச்சரித்திருந்தார்.

மாபெரும் அமெரிக்க அணு விஞ்ஞானி ஒப்பன்ஹீமர் அணு ஆயுதத் தயாரிப்பில் பெரும் பங்கு வகித்தவர். அந்தக் கடிதம் அவரை மிகவும் பாதித்தது. உடனே அவர் தம் பொறுப்பிலிருந்து விலகினார். ''நாம் பாவம் செய்துவிட்டோம்'' என்ற தலைப்பில் ஓர் அறிக்கையையும் வெளியிட்டார்.

அதற்குப் பிறகும்கூட ஃபால்கநெலியைக் கண்டுபிடிக்க முடியவில்லை!

அவர் சொன்னது மெய்தான். பல சமுதாயங்கள் அணுசக்தி கண்டுபிடித்து, அதனால் அடியோடு அழிந்திருக்கின்றன.

மகாபாரதப் போரிலும் அணு ஆயுதங்களுடன் விளையாடி நாம் அழிந்து போயிருக்கிறோம்!

ஒரு குழந்தை பெரியவனாகும்போது, தன் தந்தை செய்த பிழையையே செய்கிறது. அவர் எச்சரித்தாலும் சரி, அவருக்கு அவர் தந்தையும் எச்சரிக்கை செய்திருப்பார். அவரும் கேட்கவில்லை. அறிவுரை சொன்னாலும் தன் பிள்ளையும் கேட்பதில்லை. இன்றைய தலைமுறை வயதான பின் அதே அறிவுரையைச் சொல்லிக் கொண்டிருக்கும்.

சமுதாயங்களும் அப்படித்தான். முந்தைய சமுதாயங் களிடமிருந்து பாடம் கற்றுக் கொள்ளாமல் பிழை செய்கிறது. நாகரிகங்களும்கூட, குழந்தையாய் இருந்து, வாலிபப் பருவமடைந்து, மூத்து, மரணமடைகின்றன.

யோகக் காட்சி அனுபவம் இருபதினாயிரம் ஆண்டு அனுபவம் கொண்டது என்பது சரிதான். ஒருவனுடைய இளமையைச் சோதித்தறிய பத்துப் பேரையாவது சோதித்துப் பார்க்க வேண்டும்.

ஒருவருக்குச் சரியாக இருப்பது எல்லாருக்கும் சரியாக இராது. அதனால், ஒருவரைச் சோதித்துக் கணிப்பது சரியாக இருக்காது. அதனால்தான், யோகக் காட்சி இருபதினாயிரம் ஆண்டு அனுபவப் பழைமையுடையது என்று தெளிவாகச் சொல்கிறேன்.

இந்த உலக வாழ்விற்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதை அறிய, செயலற்றுக் கிடக்கும் மறுபாதி மூளையைச் செயல்படுத்த வேண்டும். அதற்கு, மூன்றாம் விழித்தூண்டுதல் பெறவேண்டும். இதைத்தான் யோகம் இருபதாயிரம் ஆண்டுகளாக வலியுறுத்தி வருகிறது.

பொருள் கடந்த பூரணத்தை அறிய விரும்பினால், மறுபாதி மூளை செயல்பட வேண்டும்.

அந்த அரைப் பகுதி மூளைக்குச் செல்லும் வழியின் கதவுதான் மூன்றாம் விழிச் சக்கரம். அங்கேதான் நாம் திலகம் அணிகிறோம்!

அது வெளி அடையாளம் மட்டுமே. சரியான இடம், அதற்கு நேர் உள்ளே, ஒன்றரை அங்குல ஆழத்தில் இருக்கின்றது. நெற்றிக்குள் இருக்கும் அந்த மையம், உலகு கடந்த, பொருள் கடந்த, அப்பால் பிரதேசத்திற்கான, கதவாகச் செயல்படுகின்றது!

இந்தியாவில் திலகம் வைக்கும் பழக்கம் உருவாக்கப்பட்டது போல, திபேத்திலும் உண்டு. ஆனால், அங்கே, திலகம் வைக்கும் இடத்தில் துளையே போட்டு விடுகிறார்கள்! மூன்றாம் விழிச் சக்கர மையத்தை அடைய, திபேத்தியர்கள் இவ்வாறு கடுமையான முயற்சிகளை மேற்கொள்கிறார்கள். வேறு யாரையும்விட திபேத்தியரின் தேடலே அதிகம். அவர்களுடை எல்லா விஞ்ஞானங்களும், வாழ்வின் பல்வேறு அம்சங்களைத் தேடும் முயற்சிகளும், மூன்றாம் விழியைப் புரிந்து கொள்ளுதலின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன.

நான் முன்பு குறிப்பிட்ட, எட்கர் கெய்ஸ், தன்வயம் இழந்த நிலையில்தான் மருந்துகளைக் குறிப்பிட்டிருக்கிறார். அமெரிக்காவில் அவர் ஒருவர்தாம் அப்படிச் சொன்னவர். திபேத்தில் அப்படியில்லை. சமாதி நிலையில் இருக்கும் எல்லாரிடமும் மக்கள் மருந்தாலோசனை கேட்பார்கள். அவர்கள், நெற்றியில் துளையிட்டு மூன்றாம் விழி மையத்தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்கிறார்கள்.

தியானத்தின் மூலம் அடைவதைவிட, அவ்வாறு துளையிட்டுப் போகும் முறை சரியானதாகத் தோன்றவில்லை. இந்திய முறை தியான முறை.

மூளையின் மறுபாதி, மூளையின் விழித் தூண்டுதல் மூலமாகச் செயல்படுவது. யோகத்தின் மூலமாக இருந்தால், அது பிரக்ஞையின் வளர்ச்சியால் நேர்ந்திருக்கும். பிரக்ஞை எவ்விதத் தூய்மையும் பெறாமல், அறுவை மூலம் வெளியிலிருந்து உள்ளே போவதில் பெரிய ஆபத்து இருக்கிறது.

அப்படிப் போகும் மனிதன், தியானத்தின் வழியாக எந்தப் பக்குவமும் பெறாதவனாக, பழைய மனிதனாகவே இருக்க நேர்வதால், மறுபாதி மூளை தவறான காரியங்களுக்குப் பயன்பட நேரிடும்! தியானத்தின் மூலம் பிரக்ஞையில் மாற்றம் ஏற்படுவதே சிறந்தது.

அக மாற்றம் ஏற்படாமல், மறுபாதி மூளையைச் செயல்படச் செய்யும் ஆள், சுவர்களை ஊடுருவிப் பார்க்கவும், புறத்தடைகள் கடந்து காணவும் சக்தி பெறலாமே தவிர, கிணற்றில் விழுந்தவரைக் காப்பாற்றக் கூட முன்வர மாட்டார்! ஆனால், மறைந்து கிடக்கும் புதையல்களைத் தேடிப் போவதிலேயே குறியாக இருப்பார்! அப்படிப்பட்டவர் விரும்பினால், உங்களைத் தம்முடைய சுயநலனுக்கு ஏற்றபடி ஆட்டிப் படைக்கவும் தயங்க மாட்டார்.

இந்தியாவிலும் அவ்வாறு புறச்சோதனைகள் நடந்திருக்க முடியும். ஆனால், இந்தியர்கள் அதை முயற்சிக்கவே இல்லை. பிரக்ஞை பூர்வமான மாறுதல் உள்ளே நிகழாமல், அப்படிச் செய்வது ஆபத்தானதென்று யோகிகளுக்குத் தெரியும். அது தீய வழிகளில் பயன்படவே உதவும். குழந்தையின் கையில் கத்தியைக் கொடுப்பது போன்றது அது. அது மற்றவரையும் குத்திவிடலாம்; தனக்கே அழிவு தேடிக் கொள்ளவும் செய்யலாம்.

புதிய சக்திகளைத் தூண்டி விடுமுன் மனமாற்றம் தேவை.

உறங்கும் மூளையை விழித்துக் கொள்ளச் செய்வதற்கான வழி, திபேத்தியர்களுக்குத் தெரிந்தே இருந்தது. ஆனால், ஆன்மிக ஒழுக்கத்தில், அது சிறந்த நாடாக மலரவே இல்லை. எத்தனையோ சாதனைகள் செய்திருந்தும் ஒரு புத்தரைப் பெற்றெடுக்க அதனால் முடியவில்லை. பல சக்திகளை அந்த நாடு வளர்த்துக் கொண்டது, பல அபூர்வ விஷயங்களை அது அறிந்திருக்கிறது. ஆனால், எல்லா ஆற்றல்களையும் அது அற்ப காரியங்களுக்கே செலவழித்தது.

இந்தியா புறக்கருவிகள் கொண்டு சோதனைகள் நடத்த முயலவே இல்லை. இந்தியாவின் கவனம் முழுதும் மூன்றாம் விழிச் சக்கரத்தின்

மேலேயே இருந்தது. அது உள்முகமாக நடந்த சோதனை. தன் சக்தி முழுவதையும் அதைத் திறப்பதற்கே செலவாயிற்று.

பிரக்ஞை முழுவதையும் மூன்றாம் விழியில் பாயும்படியாகச் செய்வதற்கு மிகப் பெரிய கட்டுப்பாடு தேவை. அந்தக் கட்டுப்பாட்டின் உயர்ந்த நிலைகளுக்கு மனம் செல்ல வேண்டும். இயல்பாக, மனம் கீழ்நோக்கியே இழுக்கப்படும். சரியாகச் சொன்னால், மனம், பாலுணர்வு மையம் நோக்கிக் கீழேதான் பாயும்.

நாம் என்ன செய்து கொண்டிருந்தாலும் சரி - பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தாலும், பதவியை உயர்த்திக் கொண்டிருந்தாலும், வேறு எதைச் செய்து கொண்டிருந்தாலும் - ஒரு நுட்பமான முறையில், அவற்றிற்கான உந்து சக்தியாக இருப்பது காமமே.

பணம் சம்பாதிப்பது, எளிதில் காமத்தை விலைக்கு வாங்கி விடலாம் என்ற நம்பிக்கையில்தான். உயர் பதவிகள் தேடிப்போவதும் இதே காரணத்திற்காகத்தான். அதனால்தான் முன் காலத்தில், ஒரு மன்னனின் புகழ் அவனுடைய மனைவியரின் எண்ணிக்கையை வைத்து மதிப்பிடப்பட்டது!

அது சரியான மதிப்பீடுதான்! உங்கள் அதிகார பலம் வேறு எதற்கு? அதனால், அதிகாரம், பதவி, பணம் எல்லாம், காமத்தின் உந்துதலால் விளைவனவே. நேரடியாக அல்லாமல், சுற்றி வளைத்து, மறைமுகமாக அவ்வாறு காமம் செயல்படுகிறது. உங்கள் சக்திகள் கீழ்நோக்கிப் பாயும்வரை, பாலுணர்வு மையம் நோக்கிச் செல்லும்வரை, உங்களிடம் ஆன்மிக ஒழுக்கம் இல்லை என்றுதான் பொருள்.

உமது ஆற்றல்களை மேல்நோக்கிச் செலுத்த வேண்டுமானால், உங்கள் பாலுணர்வு மையம் நோக்கிப் பாயும் ஆற்றலை, நேர் எதிரான திசையில் திருப்பிவிட வேண்டும். அதன் பாய்ச்சல் முழுவதுமே திசை மாற வேண்டும்.

நீங்கள் வேறு ஒரு புதிய முகத்தை உருவாக்கிக் கொண்டு, முழு முயற்சி செய்து மேல் நோக்கி உயர வேண்டும். மேல் நோக்கிய செங்குத்தான இயக்கம்தான் மிகப் பெரிய ஆன்மிக ஒழுக்கம். அந்தப் பயணத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் தடைகள் ஏற்படும். அதற்குத் தியாகம் தேவை.

மாண்புகள் மிகுந்த விசாலமான பிரதேசங்களைப் பெறுவதற்காக, தரம் தாழ்ந்த எல்லாவற்றையும் இழக்க வேண்டிவரும். சரியான விலை

கொடுத்தேயாக வேண்டும். அந்த விலை கொடுத்து மேலான சக்திகள் பெற்றுவிடும் போது, அதை எவ்வாறு தவறான வழிகளுக்குப் பயன்படுத்த மனம் வரும்?

தவறாகப் பயன்படுத்துதல் என்ற பேச்சுக்கே இடமில்லை. அப்படித் தவறாகப் பயன்படுத்தக் கூடியவர், குறிக்கோளை அடையும் முன்பே ஒழிந்து போய் விடுவார்.

இவ்வகையான புற முயற்சிகள், செயல்பாடுகள் காரணமாகத்தான், திபேத்தில் மந்திர தந்திர வித்தைகள் தோன்றின. அங்கே ஆன்மிக வளர்ச்சி மிகக் குறைவாக இருக்கும்போது எல்லையற்ற சக்திகள் கிடைத்துவிடுமானால், பாவச் செயல்கள்தாம் பெருகும்.

இயேசுவைப் பற்றி சூஃபி ஞானிகளிடையே ஒரு கதை வழங்கப்படுகிறது... கிறித்தவ மதத்தில் இதைப் பற்றிய எந்தக் குறிப்பும் இல்லை. ஆனால், இப்படிப் பல கதைகள், இயேசுவைப் பற்றி, சூஃபிக்களிடையே நிலவி வருகின்றன. இயேசுவைப் பற்றி முஸ்லிம்களிடையிலும் பல கதைகள் உண்டு. இனி சூபி கதை...

இறந்தவர்களைப் பிழைக்க வைக்கும் சக்தி இயேசுவிடம் இருப்பதாகக் கேள்விப்பட்டு, மூன்று சீடர்கள், அவரிடம் வந்து சொன்னார்கள்: 'எங்களுக்கு மோட்ச சாம்ராஜ்யமும் வேண்டாம், இரட்சிப்பும் வேண்டாம். செத்தவரைப் பிழைக்க வைக்கும் இரகசியத்தைக் கற்றுத் தாருங்கள்,' என்று கேட்டார்கள்.

அந்த மந்திரத்தை அவர்கள் தங்களுடைய உயிர் பிழைப்பிற்காகப் பயன்படுத்த முடியாது. காரணம், அவர்கள் இறந்தபின் எவ்வாறு மந்திரம் சொல்ல முடியும்? மற்றவர்களை உயிர்ப்பிப்பதால் என்ன லாபம்? அதனால், 'எப்படிச் சாகாமலிருப்பது என்பதைக் கற்றுக் கொடுக்கிறேன்,' என்றார் இயேசு!

'எங்கள் சாவைப் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. செத்தவனை எவ்வாறு பிழைக்க வைப்பது என்பதை அறிவதில்தான் ஆர்வம்,' என்று அவர்கள் தெரிவித்தார்கள்.

சமாதானம் சொல்லி சலித்துப்போன இயேசு, அவர்களுக்கு அந்த வித்தையைக் கற்றுக் கொடுத்தார். உடனே அவர்கள் அங்கிருந்து புறப்பட்டு விட்டார்கள், பிணங்களைத் தேடி! மந்திரம் மறந்து போவதற்குள் செய்து பார்த்துவிட வேண்டுமென்ற ஆவல்!

முதலில் எதிர்ப்பட்ட கிராமத்தில் செத்தவர் கிடைக்காததால், அடுத்த ஊர் நோக்கி நடந்தார்கள். வழியில் ஒரு எலும்புக்கூடு கிடந்தது. உடல் கிடக்காததால், அதையே உயிரூட்டிப் பார்க்கலாம் என்று மந்திரம் சொல்லிப் பார்த்தார்கள்.

அது சிங்கத்தின் எலும்புக்கூடு!

அது உயிர் பெற்றது! மூவரையும் அடித்துக் கொன்றது!

அறம் தவறிய மனதின் ஆசை. அப்படி விபரீதத்தில்தான் முடியும் என்று சூஃபிகள் சொல்கிறார்கள். ஏராளமான ஞானம் மறைத்துப் புதைக்கப்பட்டிருப்பதற்குக் காரணம், அது தவறானவர் கையில் கிடைத்துவிடக் கூடாது என்பதற்காகத்தான். அவை தகுதி படைத்தவர்க்கே கிடைக்க வேண்டும்.

இதெல்லாம் திலகத்தோடு என்ன தொடர்பு என்று நீங்கள் வியப்படையலாம். ஒரு குழந்தையின் நெற்றியில் திலகம் வைக்கப்படும்போது, அது எதற்கென்று அதற்குத் தெரியாது. அது வளர்ந்து பெரிதாகும்போது புரிந்து கொள்ளும்; திலகத்தின் இரகசியம் அப்போது துலங்கும். அதுவரை, சரியான இடம் எது என்பதைப் பற்றி ஒரு குறிப்பு மட்டும் கொடுக்கலாம்.

குழந்தையின் பிரக்ஞை தகுதி பெறும்போது, அந்த அடையாளத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். நூறு பேரில் ஒருவருக்கு அதைச் சரியாக அணியும் தகுதி கிடைத்தால்கூடப் போதும். மூன்றாம் விழி மையம் ஒருவருக்குத் தெரிந்தால்கூட நல்லதுதான். அதன் நோக்கம் நிறைவேறிவிடும்.

திருமணம், வெற்றி முதலான சிறப்புச் சந்தர்ப்பங்களின்போது, நெற்றியில் திலகம் சூட்டுவது மதிப்புமிக்க செயலாகக் கருதப்படுகிறது. மரியாதை செய்வதற்காகத் திலகம் ஏன் சூட்டப்படுகிறது என்று உங்களுக்குத் தெரியுமா?

ஒன்றிணைதலின் விதி அது. நமது மனம் மிகவும் அதிசயமானது. கவலையின் வினாடிகளை மறக்க விரும்புகிறது. மகிழ்ச்சிக் கணங்களை நினைவில் வைத்திருக்க விரும்புகிறது. வருத்தம் தந்த நிகழ்ச்சிகள் மறந்துபோய், மகிழ்ச்சி தந்த நிகழ்ச்சிகள் மட்டும் நம் நினைவில் நிற்பதற்கு இதுதான் காரணம்.

அதனால்தான், நமது கடந்த காலம் இனிமை நிறைந்ததாக இருந்ததாக, நாம் எப்போதும் நினைக்கிறோம். வயதானவர், தன்

இனிய குழந்தைப் பருவம் பற்றியே எப்போதும் நினைத்துக் கொள்கிறார். துக்க நினைவுகளை மனம் நழுவ விட்டு விடுகிறது. இன்ப நினைவுகளைத் தங்க வைத்துக் கொள்கிறது. இறந்த காலம் இனியதாய்த் தோன்ற இதுதான் காரணம். இனிய கணங்களுக்கு இடையில் இருந்த துயரங்கள் எல்லாம் மறந்துபோய் விடும்.

தனது குழந்தைப் பருவம் இனியது என்று எந்தக் குழந்தையும் சொல்லாது. அவர்கள் வேகமாக வளரவே ஆசைப்படுகிறார்கள். வயதானவர்களே, தம் குழந்தைப் பருவம் இனிதாக இருந்தது என்று சொல்கிறார்கள்.

தவறாகப் புரிந்து கொள்ளுதல் எங்கேயோ ஏற்பட்டிருக்கிறது. நீ எதை விரும்புகிறாய் என்று ஒரு குழந்தையிடம் கேட்டால், நான் சீக்கிரம் வளர விரும்புகிறேன், என்றுதான் சொல்லும். வயதானவர்களிடம் கேட்டால் மீண்டும் குழந்தையாகத்தான் ஆசைப்படுவார்கள்.

குழந்தை, பெரிதாக ஆசைப்படுகிறது. சிகரட் குடிக்க ஆரம்பிக்கிறான். அது பெரியவர்களின் சின்னம், என்பதால். சிகரட் ஒரு கௌரவத்தின் அடையாளமாகத் தோன்றுவதால்தான் எழுபது சதவிகிதச் சிறுவர்கள் புகை பிடிக்க ஆரம்பிக்கிறார்கள் என்று மனவியல் நிபுணர்கள் கூறுகிறார்கள்.

பெரிய, வலிமை மிகுந்த, வாழ்வில் வெற்றி பெற்றவர்களே புகை பிடிக்கிறார்கள், என்று சிறுவர்கள் நினைக்கிறார்கள். அதனால், சிறுவன் புகை பிடிக்கும்போது, தன்னை வேறு ஆளாக நினைத்துக் கொள்கிறான். தான் சாதாரணமானவன் அல்ல என்று நினைக்கிறான்.

'பெரியவர்களுக்கு மட்டும்' என்று திரைப்படம் வெளியிட்டால், மீசையை ஒட்டிக் கொண்டுபோய் படம் பார்க்க முயல்கிறான்! ஏன் அப்படி? சீக்கிரம் பெரியவனாகி விட வேண்டும் என்ற ஆசை சிறுவர்களுக்குள் பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும், குழந்தைப் பருவமே இனியது என்று பெரியவர்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். காரணம், மனம், துயர காலங்களை மறந்துவிடுகிறது. நினைவு வைத்திருக்க அவை தகுதியற்றவை.

பியாகெட் என்ற உளவியல் அறிஞர், குழந்தைகளை வைத்து நாற்பதாண்டுக் காலம் ஆய்வுகள் நடத்தினார். குழந்தைப் பருவத்தின் முதல் ஐந்தாண்டுக் கால நினைவுகள், மனித வாழ்வில் மிகவும் பலவீனமானவை என்கிறார் அவர். அந்த நினைவே வருவதில்லை.

காரணம் அந்தக் காலகட்டத்தின் நினைவுகள் துயரங்கள் நிறைந்தவை. அதை நாம் நினைவில் வைக்கத் தகுதியற்றவை என மனம் தீர்மானித்து விடுகிறது.

நாம் நம் குழந்தைப் பருவத்தை நினைவு கூர்ந்தால் ஐந்து வயது நினைவுதான் வரும் என்கிறார் அவர். சிலருக்கு நான்கு வயது நினைவு. அதற்குக் கீழே போகாது. அந்தச் சில ஆண்டுகளில் நினைவுகள் பதிவாவதே இல்லையா? பதிவாகின்றன. அப்போது யாரும் உங்களைத் திட்டியிருக்க மாட்டார்களா? யாராவது மிகவும் அன்பு செலுத்தியிருக்க மாட்டார்களா?

எல்லாமே நடந்துதானிருக்கும். ஆனால், ஏன், முதல் ஐந்தாண்டு நினைவுகள் நமக்கு வருவதில்லை?

மனிதனின் குழந்தைப் பருவம் நிறைந்த துன்பங்களைக் கொண்டது. ஒரு குழந்தை, பலவீனமாகவும், திக்கற்றதாகவும், பிறரைச் சார்ந்திருக்க வேண்டிய நிலையையும் உணர்கிறது. அதனால், அந்த விரும்பத்தகாத நினைவுகளை அழித்து விடுகிறது.

கேட்டால், 'ஐந்து வயதுக்கு முன்னால் என்ன நடந்ததென்றே தெரியவில்லை,' என்றுதான் சொல்வோம். தந்தை, 'எழுந்திரு' என்று அதட்டியிருப்பார். தாய், 'உட்கார்' என்று சொல்லிக் கண்டித்திருப்பார். ஒவ்வொருவரும், குழந்தையின் விருப்பத்திற்கு எதிராகத் தம் அதிகாரங்களைச் செலுத்தியிருப்பார்கள். காற்றில் அகப்பட்ட காய்ந்த சருகு போல அது அலைக்கழிக்கப்பட்டிருக்கும். சொன்னபடியெல்லாம் குழந்தை கேட்டிருக்கும். எல்லாவற்றிற்கும் மற்றவர்களைச் சார்ந்தே இருக்க வேண்டிய பருவம் அது. மற்றவர் கண்ணில் கோபக் குறி தென்பட்டால்கூடக் குழந்தை நடுங்கியிருக்கும்.

அதனால், நான்கு வயதிற்கு முன்பு தனக்கொரு வாழ்வு இருந்ததையே மனிதன் மறந்து விடுகிறான்.

அவனை மனோவசியத்திற்கு உள்ளாக்கி, நான்கு வயதிற்கு முந்தின நினைவுகளைச் சொல்லச் சொன்னால், சொல்வான்! தாயின் கருப்பையில் இருந்ததைக்கூடச் சொல்வான்! தாய், கர்ப்ப காலத்தில் கீழே விழுந்திருந்தால்கூட அந்தக் குழந்தை வயிற்றுக்குள் அடைந்த அதிர்ச்சியை, மனோவசியம் வெளியே கொண்டு வந்து சொல்ல வைத்து விடும்! சாதாரணப் பிரக்ஞையில், அந்த அடியாழ நினைவுகள் மேலே வருவதில்லை.

மகிழ்ச்சியான பொழுதில் நெற்றித் திலகமிடலுக்கு வலுவான காரணம் இருக்கிறது. மகிழ்ச்சியான நிகழ்ச்சியும், திலகமும்

இணைந்தே நினைவில் நிலைக்கும். இந்த இணைப்பு விதியைப் பற்றிச் சிறிதளவு தெரிந்து கொள்ள வேண்டியது இங்கே அவசியமாகிறது.

பாவ்லாவ் என்ற ரஷ்ய விஞ்ஞானி, இந்தத் துறையில் பல பரிசோதனைகள் செய்தவர். 'எதனை எதனுடனும் தொடர்புபடுத்த முடியும்' என்று அவர் கூறினார். நமது வாழ்க்கை, அத்தகைய தொடர்புகளின் ஒட்டுமொத்த வடிவம் என்றார். அவருடைய சோதனைகளில் ஒன்று நாயுடன் சம்பந்தப்பட்டது. அது உலகறிந்த ஒன்று.

பாவ்லாவ், நாய்க்கு சற்றுத் தொலைவில் உணவை வைத்துவிட்டு, நாயைக் கட்டிப் போட்டார். உணவு, நாயின் பார்வையில் படும்படி இருந்தது. எப்போது உணவு கொடுக்கப்படுமோ அந்தச் சமயத்தில் அவர் மணியோசை எழுப்பினார். மணிக்கும் நாயின் வாயில் ஊறும் எச்சிலுக்கும் தொடர்பில்லை. ஆனால், மணி அடிக்கப்பட்டதும் நாயின் வாயில் எச்சில் ஊறியது.

இப்படியே பதினைந்து தடவை, மணியடித்து உணவு கொடுக்கப்பட்டது. மணியோசைக்கும் எச்சிலுக்குமான தொடர்பு நன்றாக நிலைநாட்டப்பட்டு விட்டது. பதினாறாவது முறை, உணவு வழங்கப்படாமல், மணி மட்டும் அடிக்கப்பட்டது. உடனே நாயின் வாயில் எச்சில் ஊறியது. அந்த ஓசை, அந்தத் தூண்டுதலைச் செய்துவிட்டது. மணியோசை உணவின் குறியீடாக மாறிவிட்டது.

இதே விதிதான் திலகம் வைப்பதிலும் செயல்படுகிறது. திலகம் மகிழ்வான நிகழ்ச்சியோடு தொடர்பு கொண்டது. நல்ல காரியங்கள் நடக்கும் போதெல்லாம் திலகம் பயன்படுத்தப்படுவதால், திலகம் வைத்ததும் நல்ல மகிழ்ச்சி ஏற்பட்டுவிடும். நன்மைக்கும் திலகத்திற்குமான தொடர்பு உறுதிப்பட்ட அம்சம்.

அதனால், மகிழ்ச்சி ஏற்படும் போதெல்லாம் மூன்றாம் விழிச் சக்கரம் நினைவுக்கு வந்து விடும். நாம் உண்மையில் மகிழ்ச்சியாக இருக்கிறோமோ இல்லையோ, மகிழ் கணங்களையே நினைக்க விரும்புகிறோம், எப்போதும். சிறு மகிழ்ச்சி ஏற்பட்டாலும் கூட அதைப் பெரிது படுத்துகிறோம். மகிழ்ச்சியான நிகழ்ச்சிகளைப் பெருக்குகிறோம்; துயர நினைவுகளைச் சுருக்குகிறோம்.

நீங்கள் முதன்முதலாக உங்கள் காதலியைச் சந்தித்தபோது எவ்வளவு மகிழ்ச்சி! இன்று அதை நினைத்துப் பார்த்தாலும்கூட, அது ஒரு பெரிய சம்பவமாகவே தோன்றும். ஆனால், இன்று அவளைச்

சந்தித்தால், மகிழ்ச்சி சுருங்கிப்போகும். என்றாலும், அடுத்த இருபத்து நான்கு மணிநேரத்தில், நீங்கள் அதை மிகைப்படுத்தி விடுவீர்கள்.

இது நிகழும்போது, மூன்றாம் விழி திறப்பதற்காக நீங்கள் மகிழ்ச்சியைப் பயன்படுத்தியதை உணரவேண்டும். இந்த மகிழ்ச்சி நீரோட்டத்தை, மூன்றாம் விழிச் சக்கரத்தைத் தூண்டுவதற்காக நாம் பயன்படுத்தலாம். பல திசைகளிலும் நாம் பயன்படுத்தினால், பயனும் பலவாக இருக்கும்.

திலகம் சூடும் வழக்கமில்லாத நாடுகளுக்கு மூன்றாம் விழி பற்றி எதுவுமே தெரியாது. மூன்றாம் விழி பற்றிக் கொஞ்சம் தொடர்பு இருந்தாலும்கூட, திலகம் வைக்கும் வழக்கம் வந்துவிடும். மற்றவர்களுக்கு அந்த அடிப்படையே இல்லை.

நெற்றித் திலகம் வைக்கும் சிந்தனை, காரணமின்றித் திடீரெனத் தோன்றவில்லை. ஏதாவது ஓரிடத்தில் வைப்பதில் அர்த்தமே இல்லை. அது எதிர்பாராமல், எதேச்சையாக ஏற்பட்ட ஒரு பழக்கமல்ல. அதற்கு ஆழ்ந்த நோக்கம் இருப்பதால்தான், இன்னும் நீடித்து நிற்கிறது.

மூன்றாம் விழி பற்றி இன்னும் சிலவற்றைச் சொல்கிறேன். கவலை ஏற்படும்போது, நெற்றிப் பொட்டில் ஓர் அழுத்தம் ஏற்படும். அப்போது நெற்றி சுருங்கும்; சுருக்கங்கள் விழும். மூன்றாம் விழியிடத்தில், இறுக்கம் ஏற்படும். தொடர்ந்து இறுக்கத்தில் இருப்பவர்கள், சிந்தித்துக் கொண்டே இருப்பவர்கள், அதை வெளிப்படுத்துகிறவர்கள், தங்கள் நெற்றியில் இறுக்கம் ஏற்படும் இடத்தைச் சுட்டிக்காட்டிவிட முடியும்.

முற்பிறவிகளில், மூன்றாம் விழித்தூண்டுதல் பெற அதிகம் பாடுபட்டவர்கள், குழந்தையாகப் பிறக்கும்போது, அதன் நெற்றியில் லேசான ஓர் அடையாளம் இருக்கும், மங்கிய திலகம் போல! அந்த இடத்தை நாம் விரலால் தொட்டால், அது லேசாகப் புடைக்கும்! முற்பிறவிகளில் திலகம் சூடிய இடம் அது! அந்த இடத்திற்குப் பின்னால்தான், மூன்றாம் விழி இருக்கிறது.

மனோதத்துவ மேதைகள் ஒரு சிறிய சோதனை நடத்திப் பார்த்திருக்கிறார்கள்...

ஒரு மனிதனின் நெற்றியை உற்றுப் பார்ப்பதன் மூலம், அந்த ஆளின் மீது நம் அதிகாரத்தைச் செலுத்த முடியும் என்பதை, பிரான்ஸ் நாட்டு உளவியல் மேதை சார்க்கோ நிரூபித்தார்.

எதிரில் இருப்பவரின் நெற்றியை நாம் உற்றுப் பார்த்தால் அவருக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டு விடும். அவ்வாறு முறைத்துப் பார்க்க அனுமதிக்கவும் மாட்டார். அது நாகரிகமான செயலும் அல்ல. ஒருவகை முரட்டுத்தனம்தான் அது.

நெற்றிக்கண், திலகம் வைக்கும் இடத்திற்கு உள்ளே ஒன்றரை அங்குல ஆழத்தில் இருக்கிறது. ஒருவர் உங்கள் முன்னால் நடந்து போகும்போது, மூன்றாம் விழி மையத்திற்கு நேர் பின்னால் உள்ள தலையின் பின்பகுதியை உற்றுப் பார்த்தீர்களானால், சில வினாடிகளில் அவர் சட்டெனத் திரும்பிப் பார்ப்பார்! இந்தச் சோதனையைத் தொடர்ந்து சில நாட்கள் செய்து கொண்டிருந்தால், அவரை அடக்கி ஆள முடியும். நீங்கள் நினைக்கும்படி யெல்லாம் அவர் செய்வார்!

நெற்றிக் கண்ணுக்கு நேர் பின்னால் உள்ள, தலையின் பின்பகுதியில், சரியான இடத்தைப் பார்க்க வேண்டும்; கண் இமைக்காமலும் பார்க்க வேண்டும். அப்போதுதான் உங்கள் ஆணைப்படி அவரை ஏவமுடியும். அவர் வலப்பக்கம் திரும்ப நினைத்திருந்தாலும் கூட, நீங்கள் நினைத்தால் இடப்பக்கம் திரும்பி நடப்பார்! வியப்பான விளைவுகள் கண்டு திகைத்துப் போவீர்கள்.

பின் தலையை உற்றுப் பார்ப்பதைவிட நெற்றியின் மையத்தை உற்றுப் பார்த்தால், விளைவுகள் அதிகம். மிக வியப்பாக இருக்கும்...

தம் ஆற்றலை வெளிப்படுத்த முயலும் சக்தி உபாசகர்களும் கூட, தம் ஆணைச் சக்கரத்தின் மூலம் அவ்வாறு செய்ய முடியும். ஏதாவது ஒரு துறவி, மகான் முன் அமர்ந்து நீங்கள் கண்கள் மூடியிருந்தால், அவர் ஏதோ செய்கிறார் என்றுதான் தோன்றும். அவர் உங்கள் நெற்றியை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கலாம். உங்களுக்குத் தம் மனதால் ஆணை பிறப்பித்துக் கொண்டும் இருக்கலாம்.

''உனக்குள் ஓர் ஒளிவிளக்கு இருக்கிறது.'' என்று சொன்னால், உங்களுக்குள் வெளிச்சத்தை உணர்வீர்கள். ஆனால், அந்த ஒளி நிலைத்திருக்காது. அவரை விட்டு விலகியவுடன் மறைந்துவிடும். சில சமயம் இரண்டு மூன்று நாள் வரை நீடிக்கலாம். பிறகு மறைந்து போகும். அது போலியான சக்தி. மூன்றாம் விழியில் நடந்த அற்ப நிகழ்ச்சி. அவ்வளவுதான்.

மூன்றாம் விழி நமக்குக் கிடைத்த அபூர்வமான பரிசு. அதற்கு எண்ணற்ற பயன்கள் உண்டு.

கிறிஸ்துவ மத போதகர்கள் முதன்முதலாகத் தென்னாட்டிற்கு வந்தபோது, அவர்களில் சிலர், திலகம் அணிய ஆரம்பித்தார்கள். இதன் காரணமாக போப்பாண்டவரின் வத்திக்கானில் விவகாரம் ஏற்பட்டு, மத போதகர்களை விளக்கம் கேட்டு எழுதியிருந்தார்கள்.

சிலர் திலகம் அணிந்து கொண்டார்கள். சிலர் மரக்கட்டைச் செருப்பும் அணிந்து கொண்டார்கள். சிலர் பூணூலும், காவியாடையும் தரித்து இந்து சன்னியாசிகள் போல வாழ்ந்தார்கள்.

அவர்கள் தவறு செய்வதாக தலைமைப் பீடம் கருதியது. ஆனால், மதபோதகர்கள் அதற்கு விளக்கம் அளித்து எழுதினார்கள். அவ்வாறு வாழ்வதால் அவர்கள் இந்துக்கள் ஆகிவிடவில்லை என்றும், திலகம் அணிவதால் அவர்கள் ஒரு இரகசியத்தை அறிந்து கொண்டதாகவும், மரக்கட்டைச் செருப்பு அணிவதால், தியானம் விரைவில் கைகூடுவதாகவும் தியான சக்தி வீணாவதில்லை என்றும் பதில் எழுதினார்கள். மேலும், 'இந்தியர்கள் சில இரகசியங்களை அறிந்திருக்கிறார்கள், அவற்றைக் கிறிஸ்துவ மத போதகர்கள் அறியாதிருப்பது மடத்தனம்,' என்றும் குறிப்பிட்டிருந்தார்கள்!

இந்துக்களுக்கு நிச்சயமாகப் பல விஷயங்கள் தெரிந்திருந்தன. இல்லாவிட்டால், இருபதினாயிரம் ஆண்டுகளாக, சமயத் தேடுதல் இருந்திருக்க முடியாது. உண்மை தேடும் முயற்சியில்தான், அறிவுலக மேதைகள், இருபதினாயிரம் ஆண்டுகளாகத் தம் வாழ்வை அர்ப்பணித்து வந்துள்ளனர். அவர்களுக்கு இருந்தது ஒரே ஒரு ஆசைதான்: 'இந்த வாழ்வுக்குப் பின்னால் மறைந்திருக்கும் அருவமான உண்மையை அறிய வேண்டும். வடிவமற்ற அதை நேருக்கு நேர் சந்திக்க வேண்டும்.'

இருபதினாயிரம் ஆண்டுகளாக இந்த ஒரு தேடலுக்காக ஒரே மனதுடன் தம் அறிவையெல்லாம் பயன்படுத்தி வந்த அவர்களுக்கு, எதுவும் தெரியாது என்பது வியப்பான கருத்து அல்லவா? அவர்களுக்கு உண்மை தெரியும் என்பதும், அதில் அவர்கள் ஈடுபட்டார்கள் என்பதும் இயல்பான உண்மை. ஆனால், இருபதினாயிரம் ஆண்டுக் காலத்தில், இடையூறு விளைவிக்கும் சில நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன.

இந்த நாட்டின் மீது நூற்றுக்கணக்கான அந்நியப் படையெடுப்புகள் நிகழ்ந்துள்ளன. ஆனால், எந்தப் படையெடுப்பாளராலும் முக்கியமான மையத்தைத் தாக்க

முடியவில்லை. சிலர், செல்வத்தைத் தேடினார்கள். சிலர், நிலங்களை ஆக்ரமித்தார்கள். சிலர், அரண்மனைகளையும், கோட்டை கொத்தளங்களையும், கைப்பற்றினார்கள்.

ஆனால், இந்திய நாட்டின் உள்ளார்ந்த அம்சத்தைத் தாக்க எவராலும் முடியவில்லை. முதன் முதலாக அந்தத் தாக்குதல், மேலைநாட்டு நாகரிகத்தால்தான் ஏற்பட்டது. அவ்வகைத் தாக்குதல் நடத்துவதற்கான எளிய வழி, ஒரு நாட்டின் வரலாற்றை அந்த நாட்டினிடமிருந்து பிரித்து வைப்பதுதான். அது வரலாற்றை அழிப்பதற்காகச் செய்யப்படுவது. நாட்டின் மக்களுக்கும் அதன் வரலாற்றிற்கும் இடையில் ஓர் இடைவெளி உண்டாக்கப்பட்டது. இதனால், மக்கள் தம் வேர்களை இழந்தார்கள்; சக்தியிழந்தார்கள்.

மேலை நாகரிகத்தை இன்று அழிக்க வேண்டுமானால், அதன் கட்டடங்களையும், திரையரங்குகளையும், நாடக சாலைகளையும் அழிக்கத் தேவையில்லை. புகழ் பெற்ற ஐந்து பல்கலைக் கழகங்களை அழித்தால் போதும், மேலை உலகப் பண்பாடு முழுவதும் அழிந்து போகும்!

அதன் பண்பாடு, திரையரங்குகளிலோ, உணவு விடுதிகளிலோ, இரவு விடுதிகளிலோ இல்லை. அவை தொடர்ந்து இருந்தாலும்கூட ஒன்றும் ஆகிவிடாது. ஆனால், புகழ்பெற்ற பல்கலைக் கழகங்கள் அழிக்கப்பட்டால், மேலை நாகரிகம் அடியோடு அழிந்துபோகும். நாகரிகத்தின் ஆதாரம் அதன் அறிவில்தான் இருக்கிறது. அது ஒரு நீண்ட சங்கிலிபோல் இருக்கிறது. இரண்டு தலைமுறைக் கால வரலாறு அழிக்கப்பட்டால்கூட, ஒரு நாட்டின் பாரம்பரியத் தொடர்பு அறுபட்டுப்போய், வருங்கால வளர்ச்சிக்கான எல்லா சாத்தியக் கூறுகளும் இல்லாமற் போய்விடும்.

மனிதருக்கும் விலங்குகளுக்கும் உள்ள வேறுபாடு இதுதான். விலங்குகளுக்கு வளர்ச்சியில்லை. காரணம் அவற்றிற்குக் கல்வி நிலையங்கள் இல்லை. முந்தைய நாகரிகத்தை புதிய நாகரிகத்திற்கு மாற்றிக் கொள்ள அவற்றிற்கு எந்த வழியும் கிடையாது.

ஒரு விலங்கின் வாழ்வின் ஆரம்பம், அதன் தந்தையின் வாழ்வு ஆரம்பமான இடத்திலிருந்தே துவங்குகிறது. அதன் குட்டியின் வாழ்வின் ஆரம்பமும் அதே இடம்தான்.

ஆனால், மனிதன், தன் பிள்ளையின் வாழ்க்கை, தான் விட்ட இடத்திலிருந்து ஆரம்பமாகிற முறையில் கல்வியை உருவாக்கி

யிருக்கிறான். இதன் காரணமாகக் கல்வியறிவில் ஒரு தொடர்ச்சி ஏற்பட்டு விடுகிறது. தலைமுறை தலைமுறையாக அறிவைச் சேகரித்துச் சேமித்துக் கொள்வதில்தான் மனித குலத்தின் வளர்ச்சி அமைந்திருக்கிறது.

ஒரு இருபது ஆண்டுக் காலத்திற்கு, பெரியவர்கள் தம் குழந்தைகளுக்கு எதுவுமே கற்றுத் தருவதில்லை என்று முடிவெடுத்தால் என்ன ஆகும் என்று கற்பனை செய்து பாருங்கள்! அதனால் ஏற்படும் விளைவு, இருபதாண்டுக் கால இழப்பு அன்று; இருபதினாயிரம் ஆண்டுக்கால ஞானத்தின் இழப்பு! அந்த இழப்பைச் சரிசெய்ய இருபதாண்டு போதாது; இருபதினாயிரம் ஆண்டுக்காலம் தேவைப்படும்! காரணம், அறிவுச் சேகரிப்பின் தொடர்பு அறுபட்டுப் போவதுதான்.

இரண்டு நூற்றாண்டு பிரிட்டிஷ் ஆட்சியின்போது அந்தப் பெரிய இடைவெளி ஏற்படுத்தப்பட்டது. முந்தைய ஞானத்திற்கும் நமக்குமான தொடர்பு அறுக்கப்பட்டது. கடந்த காலத்தோடு எந்தத் தொடர்பும் அற்ற, முற்றிலும் புதியதான ஒரு புதிய நாகரிகம் நிலை நிறுத்தப்பட்டது.

தமது நாகரிகம் மிகப் புராதனமானது என்று இந்தியர்கள் நினைக்கிறார்கள். ஆனால், அவர்கள் நினைப்பது தவறு. இது வெறும் இருபதினாயிரம் ஆண்டுப் பழைமையான சமுதாயம் மட்டுமே. பிரிட்டிஷார் இன்று இந்தியர்களைவிட பழைய சமுதாயமாக இருக்கிறார்கள். இந்தியா குப்பை என்று கருதியதை, மேலை நாகரிகம் இன்று அறிவென்று நமக்கு வழங்கி வருகிறது! இருநூறு ஆண்டுகளுக்கு முன், தான் பெற்றிருந்த அறிவையெல்லாம், ஒரே வீச்சில் இந்தியா இழந்து விட்டது.

அறிவு மரத்தின் பசுமையான சிறு கிளைகள் எல்லாம் இழந்து போக, மக்கள் அறிவற்ற மூடர்களைப் போல் காட்சியளித்தார்கள். நீங்கள் பொட்டு வைத்துக் கொண்டு வெளியில் போக, யாராவது ஏன் அதை வைத்திருக்கிறீர்கள் என்று கேட்டால், நீங்கள் வெட்கப்படுவீர்கள். ஏனென்றால், உங்களிடம் பதில் இல்லை. ''காரணம் ஒன்றுமில்லை. என் தந்தையார் வைக்கச் சொன்னார். செய்ய வேண்டியதாகி விட்டது. என்ன செய்ய?'' என்று வேண்டுமானால் பதில் சொல்லலாம்.

அதனால், இந்தக் காலத்தில், மகிழ்ச்சியுடன் பொட்டு வைத்துக் கொள்வது சிரமம்; முடியாத காரியம். ஆனால், மடையர்கள் வைத்துக் கொள்ளலாம்! அவர்களுக்கு மற்றவரைப் பற்றிய பயமே இல்லை! அவர்களும் காரணம் தெரியாமல், மற்றவர் சொன்னதால்தான் வைத்துக் கொள்ள முடியும்.

உண்மையான அறிவின் தொடர்புகள் துண்டிக்கப்பட்டு விடும்போது, வெளிக் குறியீடுகள் புரிவது சிரமமாகி விடுகின்றன. ஒரு வித அவலநிலை ஏற்பட்டு விடுகிறது: அதாவது, அறிஞர்கள் விலகி நிற்க ஆரம்பித்து விடுகிறார்கள். அறிஞர்கள் சம்பந்தப்பட்டிருக்கும் வரைதான், எந்த ஒன்றும் அர்த்தமுள்ளதாக இருக்கும்.

அப்படிப்பட்ட பேரிழப்பு ஒரு சமுதாயத்திற்கு ஏற்படும் போதெல்லாம், கடந்த கால ஞானத்தோடு தொடர்பறுத்துக் கொள்ளும் போதெல்லாம், அறிஞர்கள் தூர விலகிப் போய் விடுவதற்குக் காரணம், அவர்கள் முட்டாள்கள்போல் தோன்ற விரும்பவில்லை என்பதுதான்.

அந்தச் சூழலில், அறிவற்ற பொதுமக்கள், கொஞ்ச காலத்திற்கு அந்த சின்னங்களையும், சடங்குகளையும் பின்பற்றிக் கொண்டிருப்பார்கள். அப்புறம் அவற்றிற்கு இயற்கை மரணம் சம்பவித்துவிடும்!

சில சமயங்களில், அறிவற்ற, பின் தங்கிய மக்கள் கூட்டம்கூட, மதிப்பிற்குரியவற்றைப் பாதுகாத்து வந்து விடுவது உண்டு! அவர்கள் அதைப் புரிந்து கொள்ள எப்போது ஆரம்பிக்கிறார்களோ, அப்போதே, அது மறைந்துவிடும்! வாழ்க்கை மிகச் சிக்கலானதுதான்!

அறிவற்ற, பின்தங்கிய மக்கள் கூட்டம் செய்துவரும் ஒவ்வொரு சடங்கையும் கூர்மையாகக் கவனித்தால்தான், இந்தியாவின் இழந்துவிட்ட கண்ணிகளைக் கண்டு கொண்டு இணைக்க முடியும். காரணமின்றி அவர்கள் எதையும் செய்துவிடுவதில்லை. அவர்களுடைய புறச் சின்னங்கள், முந்தைய இருபதினாயிரம் ஆண்டுக் காலத்தோடு தொடர்புடையவை.

அவர்களால் அதற்கு விளக்கும் சொல்ல முடியவில்லை என்பதற்காக, அவர்களைப் பார்த்து முகம் சுழிக்க வேண்டியதில்லை. கடந்த கால அறிவின் சின்னங்களைப் பாதுகாத்து வந்தமைக்காக நாம் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் நாளும் வரக்கூடும். அவற்றைக் கொண்டுதானே ஆய்வுகள் தொடர முடியும்?

இருநூறு ஆண்டுக் காலத்திற்கு முன்னால், தடைபட்டு நின்றுபோன நமது இந்திய அறிவுடன் தொடர்பு கொள்ளத்தான், இன்று கல்வியறிவற்ற மக்கள் அந்தக் காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அவற்றை நாம் செய்வதன் மூலம், நாம் மீண்டும் அவற்றிற்குப் புத்துயிர் தந்து, ஆழமாகப் புரிந்து கொண்டு, இருபதினாயிரம் ஆண்டுக்கால அறிவோடு தொடர்பு கொள்ள முடியும்.

அப்போதுதான், இதுவரை நாம் செய்து வந்தது எவ்வளவு பெரிய தற்கொலை என்பது விளங்கும்!



டாக்டர் பிராங்க் ருடால்ப் தம் வாழ்நாள் முழுதும் திகைப்பூட்டும் ஓர் அதிசய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அதைப் பற்றி உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அப்போது நீங்கள் உருவ வழிபாட்டின் சிறப்புப் பற்றி எளிதாகப் புரிந்து கொள்வீர்கள்.

மிகப் புராதன சமுதாயங்களில், நீண்டகாலமாக இருந்துவரும் ஒரு பழக்கம் பற்றி ஆராய்ந்து, அதிசயமான முடிவுகளுக்கு வந்தார் அவர்.

ஒரு மனிதனைப் பிரதிநிதித்துவப் படுத்தும் ஒரு சிறு களிமண் பொம்மை மூலமாக, அந்த மனிதனுக்குக் குறிப்பிட்ட நோயை உண்டாக்க முடியும் என்று புராதன ஆதிவாசிகள் நம்புகிறார்கள். அந்த முறையில் மரணத்தைக் கூட உண்டாக்க முடியும் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

ஒரு சாதாரண மண்பொம்மை மூலம் எப்படி அதைச் செய்ய முடியும் என்பதைக் கண்டறிய டாக்டர் ருடால்ப் முப்பது ஆண்டுகள் பாடுபட்டார். அவர், 'அமேசான்' காடுகளுக்குச் சென்று பல ஆண்டுகள் ஆதிவாசிகளுடன் வாழ்ந்தார். அந்த அதிசயத்தை, நம்பிக்கை இல்லாமல்தான், அறிவியல் முறையில் அணுகினார். நோயும், மரணமும் உண்டாக்கப்பட்டதை நூற்றுக்கணக்கான முறை தம் கண்களால் நேரில் கண்டறிந்தார்! பாதிக்கப்படும் ஆள் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்தாலும் அதைச் செய்ய முடிந்தது!

அந்த நிகழ்ச்சிகள் உண்மைதாம் என்பதை நீண்ட ஆய்வுகளுக்குப் பிறகே அவர் நம்பினார். ஆய்வுகளின் விளைவாக பல விஷயங்களை அவர் புரிந்து கொண்டார்: முதலாவதாக, அந்தச் சிறிய மண்பொம்மை, அதாவது சிறிய கொடும்பாவி, பாதிக்கப்போகும் ஆளைப் போலவே இருக்க வேண்டும்... ஆனால் கைதேர்ந்த சிற்பியால் கூட அப்படிச் செய்வது சிரமம்தான்.

ஆனால், அப்படிச் செய்யத் தேவையில்லை... அந்த ஆளைப் போன்ற உருவத்தை முதலில் மனதில் உருவாக்க வேண்டும். அதற்கு ஒரு வழி இருக்கிறது... கண்களை மூடிக் கொண்டு அந்த ஆளை நினைத்தால், மனோசக்தி அந்த உருவத்தின் மீது பாயும். அந்த மனத்தோற்றமே அந்த ஆளின் அடையாளமாகி, செயல்படும்.

இரு புருவ நடு அமைந்திருக்கும் மூன்றாம் விழி பற்றி யோக விஞ்ஞானம் கூறுகையில், அந்த இடத்தில் எல்லையற்ற ஆற்றல் சேமித்து வைக்கப்பட்டிருப்பதாகக் குறிப்பிடுகிறது. திலகம் சூடும் அந்த மையம், சக்தி வெளியிடும் கருவியாகச் செயல்படுகிறது.

உங்கள் பிள்ளையோ, பணியாளோ நீங்கள் சொன்னதைச் செய்யாமல் மறுக்கலாம். நீங்கள் ஒரு பரிசோதனை செய்து பார்க்கலாம். உங்கள் ஆற்றல் முழுவதையும், உங்கள் புருவ நடுவில் பாயும்படிக் கவனம் செலுத்திய பிறகு சொல்லிப் பாருங்கள். பத்தில் ஒன்பது முறை அவர்கள் செய்வார்கள். அவ்வாறு கவனம் செலுத்தாமல் சொன்னால், பத்தில் ஒன்பது முறை அவர்கள் செய்ய மாட்டார்கள்.

ஒரு கருத்து, மூன்றாம் விழிச் சக்தியுடன் இணைந்திருக்கும்போது, விரைவாகவும், மிகுந்த அளவிலும் செயல் படும்.

இதேமுறையில், ஒரு உருவத்தையோ, மனிதனையோ மூன்றாம் விழிச் சக்கர ஆற்றலுடன் சேர்த்து நினைத்தால், அந்த எண்ணம்

மண்பொம்மை மீது சென்றால், அப்புறம் அது வெறும் மண்பொம்மை அல்ல. உங்களது செறிவான உள ஆற்றல், அந்தப் பொம்மையின் மண் மீது சக்தி ஏறச் செய்துவிடும். அப்போது ஒரு நோயை, மனதால் அதன் மீது ஒரு நிமிடம் பாய்ச்சினால், அந்த ஆளுக்கு அந்த நோய் வந்துவிடும். அந்த ஆள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் சரி. அந்த ஆளுக்கு மரணமும் ஏற்படுத்திவிட முடியும்!

நிகழ்ந்தவற்றை நேரில் கண்டுதான் ருடால்ப் எழுதி வைத்தார். அந்த ஆதிவாசிகள், அங்கு உள்ள ஒரு மரத்தைப் போன்ற சிறிய களிமண் வடிவத்தைச் செய்தார்கள். அந்தப் பொம்மையின்மீது தம் ஆற்றலைச் செலுத்த, அதே போல உள்ள பெரிய மரம் இலைகள் உதிர்த்துக் காய்ந்து விட்டது! பிறகு, அதற்கு எவ்வளவு தண்ணீர் ஊற்றியும், துளிர்க்காமல், ஒரு மாதத்தில் நோய் வந்து பட்டுப்போய் விட்டது. மரத்திற்கு ஏற்பட்டதுதான் மனிதனுக்கும்!

இதையெல்லாம் நான் சொல்லுவதற்குக் காரணம், விக்கிரக வழிபாடும் இதே போன்றதுதான் என்பதை சுட்டிக் காட்டத்தான். ஆனால், விக்கிரக வழிபாட்டில் உயர்ந்த பரிமாணம் ஒன்று அதிகப்படியாக இருக்கின்றது.

ஒருவர் மீது நோயையும், மரணத்தையும் ஏவிவிட முடியுமானால், ஏன் இறந்தவர்களுடன் தொடர்பு கொள்ள முடியாது? வெளிப்படாமல் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளுக்குள், விக்கிரகத்தின் மூலம் ஏன் ஒரே தாவுதலில் போய்விட முடியாது?

விக்கிரக வழிபாட்டின் அடிப்படை, உங்கள் மனதிற்கும், பிரபஞ்ச மனதிற்கும் உள்ள உறவுதான். தேவை ஒரு பாலம் மட்டுமே. அதை உருவாக்கிவிட முடியும். பாலம் சமைப்பதற்கான ஒரு முயற்சியே விக்கிரகம்.

விக்கிரகம் போல, பருப்பொருளாக வெளிப்பட்டிருக்கும் ஒன்றுதான் பாலமாக அமைய முடியும். ஏனென்றால் வடிவற்ற ஒன்றுடன் நேரடித் தொடர்பு கொள்வது சாத்தியமில்லை.

குணம் குறி உருக்கடந்த ஒன்றைப் பற்றி, ஒருவர் என்னதான் பேசினாலும், அது வெறும் பேச்சாகத்தான் இருக்குமே தவிர, உங்களுக்கு அது எதையும் உணர்த்தாது. உங்கள் மனம் அறிந்த அனுபவங்கள் எல்லாம், உருவம், வடிவம் சார்ந்த அனுபவங்களே. உருவற்றவை பற்றிய அனுபவங்கள் உங்களுக்கு இல்லை. நீங்கள்

அனுபவித்தறியாத எதையும், சொற்கள் கொண்டு, உங்களுக்குள் ஒத்ததிர்வுகளை உண்டாக்க முடியாது.

உருவற்றதைப் பற்றிப் பேசிக் கொண்டே உருவத்துடன் வாழ்ந்து வருவீர்கள். அதனால், உருவற்றதுடன் தொடர்பு கொள்ள நீங்கள் விரும்பினால், ஒரு பக்கம் உருவமும், ஒரு பக்கம் அருவமுமாக உள்ள ஏதாவதொன்றை நீங்கள் உருவாக்க வேண்டி நேர்கிறது. விக்கிரகத்தின் இரகசியமே அதுதான்!

இன்னொரு வகையிலும் இதை விளக்குகிறேன். நம் பக்கமாக ஒரு பாலம் தேவைப்படுகிறது. அது உண்மையான உருவம் கொண்டு இருக்க வேண்டும். அதே சமயம் அதற்கு, ஓர் உருவற்ற பகுதியும் இருக்க வேண்டும். நமது பக்கத்தில் அது வெளிப்படத் தெரியும். மறுபக்கத்தில், அருவமாய்த் தெய்விகத்துடன் கரைந்துவிடும்.

ஒரு விக்கிரகம் வெறும் விக்கிரகமாக இருந்தால், அது பாலமாக முடியாது. அது முற்றிலும் அருவமாக இருந்தாலும், பாலமாக முடியாது. விக்கிரகம் இரண்டு வழியில் பயன்பட வேண்டும். நம் வசத்தில் உருவமாகவும், மறுவசத்தில் உருவற்றுக் கலந்து கரைவதாகவும் இருக்க வேண்டும்.

'விக்கிரக வழிபாடு' என்ற சொற்றொடரே தவறானது, என்கிறேன்! இது உங்களுக்கு வியப்பாக இருக்கும். ஆனால், அது முற்றிலும் தவறான சொல் சேர்க்கைதான். காரணம், வழிபாடு செய்யத் தெரிந்தவருக்கு விக்கிரகம் ஒரு சிலையாகவே இருக்காது. அதை ஒரு சிலையாக நினைக்கும்வரை. ஒருவர் செய்வது வழிபாடே அன்று. அவருக்கு வழிபாடு என்றால் என்னவென்றும் தெரியாது; எப்படிச் செய்வதும் என்றும் தெரியாது.

நாம் இதில் இரண்டு சொற்களைப் பயன்படுத்துகிறோம். ஒன்று, 'விக்கிரகம்;' மற்றொன்று, 'வழிபாடு.' இந்த இரு அம்சங்களையும் ஒரே சமயத்தில் ஒருவரால் உணர்ந்தறிய முடியாது. 'விக்கிரகம்' என்ற சொல், வழிபாடு என்றும் செய்யாதவர்க்குரியது. 'வழிபாடு' என்ற சொல், விக்கிரகத்தையே என்றும் கண்டிராதவர்க்குரியது.

இதை வேறுவிதமாகச் சொல்கிறேன். விக்கிரகத்தை மறையச் செய்யும் கலைதான் வழிபாடு. வெளிப்படத் தோன்றும் ஒன்றை மெல்ல மெல்லக் கரையச் செய்து, உருவிலா ஒன்றுக்குள் பிரவேசிக்கும் கலைதான் வழிபாடு. உருவம் கரைந்து அருவமாகும். வழிபாடு தீவிரமடையும். அருவம் மட்டுமே தங்கி நிற்கும்.

இதனால், 'விக்கிரக வழிபாடு' என்பது சுயமுரண்பாடு கொண்டது. அதனால், வழிபாடு செய்கிறவர், விக்கிரகம் எங்கே போயிற்று என்று திகைத்து விடுகிறார். வழிபாடே செய்யாதவர், கற்சிலை என்ன செய்யும் என்று வியப்படைகிறார். இந்த இருவகையினரும் இருவகையான அனுபவங்களைப் பெறுகிறார்கள். - இவர்கள் இருவருக்கும் இடையில் எவ்விதப் பொதுப்பண்பும் இல்லை.

கோயிலுக்குப் போகும் நீங்கள் சிலையைத்தான் பார்க்கிறீர்கள். அங்கே வழிபாட்டைக் காண உங்களால் முடிவதில்லை. பக்தியின் சின்னமான மீரா, கோயிலுக்குள் சென்றால், வழிபாட்டில் பூரணமாக மூழ்கிவிடுவதைக் காணலாம். அவளுக்கு விக்கிரகமே கிடையாது. உண்மையான வழிபாடு ஆழ்ந்து செல்லும்போது, விக்கிரகம் கரைந்து மறைந்து போய் விடுகிறது.

வழிபாடு என்னவென்று நமக்குத் தெரியாததால், நமக்கு விக்கிரகம் புலப்படுகிறது. வழிபாடு, உலகில் குறையக் குறைய, விக்கிரகங்கள் மிகுதியாகத் தோன்றுவதை நாம் காணலாம். விக்கிரகங்கள் பல்கிப் பெருகினால் வழிபாடு மறைந்துவிடும். அதனால், விக்கிரகங்கள் அழிக்கப்பட வேண்டியவைதாம். அவற்றின் தேவை என்ன? அவை பொருத்தமற்றவை.

மிகப் புராதன ஆதிவாசி எந்த அளவுக்குப் பழையவனாக இருக்கிறானோ, அந்த அளவுக்கு விக்கிரக வழிபாடு செய்வனாக இருப்பவான் என்று பொதுவாக நினைக்கிறோம். அவன் புத்திசாலி ஆகும்போது, விக்கிரக வழிபாட்டை விட்டுவிடுவான் என்றும் கருதுகிறோம்.

ஆனால், இது உண்மையன்று. எதார்த்தத்தில், வழிபாட்டிற்கு ஒரு விஞ்ஞானமே இருக்கிறது. அதைப் பற்றிய அறியாமை அதிகரிக்க அதிகரிக்க, அதைப் புரிந்து கொள்வது சிரமம் என்றும் நமக்குத் தோன்றுகிறது.

இது சம்பந்தமாக நான் இன்னும் ஒன்றைக் குறிப்பிட்டால், அது உங்களுக்கு உதவியாக இருக்கும். மனிதன் சகல துறைகளிலும் முன்னேறியிருக்கிறான் என்று நாம் நம்பிக் கொண்டிருக்கிறோம். இது முற்றிலும் தவறானதொரு எண்ணம். மனித வாழ்வு மிக விசாலமானது. ஒரு துறையில் அவன் முன்னேறினால், மற்ற துறைகளில் எவ்வளவு பின்தங்கி இருக்கிறான் என்பதை உணரக்கூட

முடியாது. அறிவியலில் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருப்பதால், நாம் சமயத்துறையில் மிகவும் பின் தங்கிவிட்டோம்.

எப்போதெல்லாம் சமயம் வளம் பெறுகிறதோ, அப்போதெல்லாம் அறிவியல் பின்தங்கிவிடும். நாம் ஒரு பரிமாணத்தில் வளர்ச்சியடைந்தால், மற்ற பரிமாணங்கள் அடியோடு மறந்து போகும்.

1880-ல், ஐரோப்பாவில், 'அல்டாமிரா' குகைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அந்தக் குகைகளில் காணப்பட்ட ஓவியங்கள் இருபதினாயிரம் ஆண்டுப் பழைமை கொண்டவை என்று சொல்லப்பட்டது. ஆனால், அந்த வண்ண ஓவியங்கள் நேற்று வரையப்பட்டவை போல் புத்தம் புதியனவாகத் தோன்றின!

அதனால், அதைக் கண்டு பிடித்துச் சொன்ன டான் மார்சலானோவுக்கு ஐரோப்பா முழுவதிலுமிருந்து எதிர்ப்புகள் கிளம்பின. பழைய ஓவியங்களின் மேலே அவர்தாம் புதிய சாயம் தீட்டியிருக்க வேண்டும் என்றுதான் எல்லாரும் நினைத்தார்கள். அதைப் பார்த்து வந்த ஓவியர்கள் எல்லாரும், மார்சலானோ பொதுமக்களை முட்டாள்களாகப் பார்க்கிறார், புத்தம் புதியவையான அந்த வண்ணங்கள் புராதனமானவையாக இருக்க முடியாது என்று அறிவித்தார்கள்.

ஒருவகையில் அவர்கள் சொன்னது சரியென்று தோன்றியது. காரணம், ஒரு நூற்றாண்டு கூட முற்றுப்பெறாத வான்கோவின் ஓவியம் மங்கிக் கொண்டு வருகிறது. பிக்காசோ தம் இளமைப் பருவத்தில் வரைந்த ஓவியங்கள், இப்போது அவரைப் போலவே கிழடு தட்டிக் காணப்படுகின்றன. இப்போதைய ஓவியர்களால் பயன்படுத்தப்படும் வண்ணங்கள், ஒரு நூற்றாண்டிற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாதவை. ஒரு நூற்றாண்டிற்குள்ளாகவே அவை மங்க ஆரம்பித்து விடும்.

அந்தக் குகைகள் பற்றித் தீவிரமான ஆய்வுகள் நடைபெற்றன. இறுதியில், அந்தக் குகையோவியங்கள், இருபதினாயிரம் ஆண்டுப் பழைமை கொண்டவைதாம், என்பது ஐயமின்றி நிரூபிக்கப்பட்டது!

பெரிய மர்மம்தான் அது! அதைத் தீட்டி ஓவியர்களுக்கு, நம்மைவிட வண்ணங்களைப் பற்றி அதிகம் தெரிந்திருக்கிறது! நாம் நிலாவுக்கும் போய் வந்து விட்டோம். ஆனால், நூறாண்டுகள் தாக்குப் பிடிக்கக் கூடிய வண்ணங்களை நம்மால் உருவாக்க முடியவில்லை. அந்தக் குகையோவியங்களைத் தீட்டியவர்களுக்கோ,

வண்ணங்களைப் பற்றிய விஞ்ஞான அறிவு, நம்மைவிட மிக அதிகமாக இருந்திருக்கிறது.

எகிப்திய 'மம்மிகள்' ஐயாயிரம் ஆண்டுப் பழைமை கொண்டவை. அவை பிணங்கள். நேற்று இறந்தவர்களின் உடல்கள் போல் காணப்படும் அளவுக்கு, மிகச் சிறப்பாகப் பாதுகாக்கப்பட்டிருப்பவை அவை! எவற்றைப் பயன்படுத்தி அவ்வாறு பாதுகாப்புச் செய்தார்கள் என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஐயாயிரம் ஆண்டுகள் ஆகியும் அவை அழுகிச் சீர்கெடவில்லை. அது எப்படி என்பதுதான் நமக்குத் தெரியவில்லை.

மிகப்பெரிய கற்களைப் பிரமிடுகளின் உச்சியில் பொருத்தியிருக்கிறார்கள். இன்று இருப்பது போல அன்று பெரிய 'கிரேன்கள்' இல்லை. அவ்வாறு செய்திருப்பது மனித சக்திக்கு அப்பாற்பட்டதாகவே தோன்றுகிறது. அவ்வளவு பெரிய கற்களை, அவ்வளவு உயரத்திற்குக் கொண்டு செல்ல, ஏதோ உத்திகள் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது. அது என்ன என்பதை நம்மால் யூகிக்கக்கூட முடியவில்லை.

வாழ்வின் உண்மை பன்முகப் பரிமாணம் கொண்டது. ஒரே காரியத்தைப் பல முறைகளில், பல உத்திகளில் செய்ய வழிகள் இருக்கின்றன. நாம் ஒரு பரிமாணத்தில் பணியாற்றினால், மற்ற பரிமாணங்கள் மறந்து போய்விடும் அளவுக்கு வாழ்க்கை மிக விசாலமானது.

உயர் வளர்ச்சி பெற்ற மக்களால்தான் விக்கிரகங்கள் உருவாக்கப் பெற்றன. நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்ச சக்தியோடு நம்மை இணைக்கும் பாலம்தான் விக்கிரகம் என்பதைக் கவனத்தில் வைப்பது சிறந்தது. வாழ்வின் இறுதி இரகசியத்தைப் புரிந்து கொள்வதற்காக, விக்கிரகம் மூலம் அவர்களால் முயற்சிகள் செய்யப்பட்டன.

நாம் மின்சாரத்தைக் கண்டுபிடித்தோம். அதை அறியாத பழைய சமுதாயங்களைவிட, நமது சமுதாயம், மிக முன்னேறிய நவீன சமுதாயம் என்பது உறுதிதான். நாம் வானொலி அலைகளைக் கண்டுபிடித்தோம். ஒரு வினாடிக்குள் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் செய்திகள் அனுப்ப நம்மால் முடியும். சில அடி தூரத்தில் இருப்பவர்க்கும் சத்தம் போட்டுச் சொல்லும் அந்தச் சமுதாயத்தைவிட, நிச்சயமாக நாம் வளர்ச்சி பெற்றவர்களே.

ஆனால், வாழ்வின் மிக உயர்ந்த மூலதாரத்துடன் தொடர்பு கொள்ளப் பாலம் சமைக்க முடிந்த அந்த மக்களோடு ஒப்பிடும்போது

நாம் வெறும் குழந்தைகளே! நமது மின்சாரமும், வானொலியும், மற்ற கண்டுபிடிப்புகளும் வெறும் விளையாட்டுப் பொம்மைகளே! ஒரே திசையில் தீவிரமாக உழைத்தவர்களால்தான், வாழ்வின் இறுதி இரகசியத்தோடு தொடர்பு கொள்ளும் கலையைக் கண்டுபிடிக்க முடிந்தது.

நான் குறிப்பிட்டதுபோல, விக்கிரகத்தின் ஒரு அம்சத்தைத்தான் மனிதனால் காண முடியும். அந்த வடிவத்திற்கு அப்பால், வடிவற்ற நிலை காண, ஒரு சாளரம் திறந்து கொள்கிறது. ஒரு வீட்டிற்கு வடிவம் இருப்பது போலவே, வீட்டின் சாளரத்திற்கும் ஒரு வடிவம் இருக்கும்.

வடிவமில்லாத சாளரம் இருக்க முடியாது. ஆனால், சாளரம் திறந்து வானத்தைப் பார்க்கும்போது, நீங்கள் வடிவ மற்றதற்குள் பிரவேசித்து விடுகிறீர்கள். சாளரம் திறந்து வானத்தையே பார்த்திராத ஒருவரிடம், நான் என் வீட்டு வடிவுள்ள சாளரம் திறந்து வடிவிலா வானம் கண்டேன் என்றால், உனக்குப் பைத்தியம் என்பார். ஒரு சிறிய சாளரத்தின் மூலம் எவ்வாறு எல்லையற்றதைக் காண முடியும் என்றுதான் நினைப்பார்.

சாளரத்தின் வழியாக தெரிவது சாளரத்தின் அளவாகத்தானே இருக்க முடியும்? தர்க்கரீதியான வினாதான். ஆனால், அதன் வழியாகப் பார்த்தே இராதவரை எவ்வாறு நம்பவைக்க முடியும்? தன் வழியாகப் பார்க்கக்கூடிய பிரதேசத்திற்கு ஒரு சாளரம் எல்லை வகுக்காதது போல, தன் மூலம் வடிவிலாப் பொருளைத் தரிசிக்க, விக்கிரகம் எல்லை வகுப்பதில்லை.

உருவில் வெளிப்படாப் பொருளைக் காண உருவ விக்கிரகம் தடையாய் இருக்கிறது என்று நினைப்பது பெரிய தவறு. சாளரத்தை உடைப்பதன் மூலம், வானத்தையும் உடைத்து விடலாம் என்று நினைப்பவர்கள், உலகில் ஏகப்பட்ட முட்டாள்தனத்தை ஏற்படுத்தி விட்டார்கள்.

விக்கிரகங்களை உடைப்பதன் மூலம், உருவிலா இறைவனைத் தகர்த்து விடலாம் என்று நினைப்பவர்கள், பைத்தியங்களை விட மோசம். வழிபாட்டின் கலையையும், இரசவாதத்தையும் புரிந்து கொள்ளாதவர்களே, விக்கிரகங்களை அழித்துவிட நினைக்கிறார்கள்.

வழிபாடு என்பது, உள்ளார்ந்த, அகவயப்பட்ட, தனிமனித விவகாரம். அதை விளக்கவும் முடியாது; செய்து காட்டவும் முடியாது. அகவயப்பட்ட, வாழ்வின் சொந்த அம்சம் எதுவும் செய்துகாட்ட முடியாதது.

என் இதயத்தை வெட்டிப் பிளந்தால், அதில் நீங்கள் அன்பைக் காண முடியாது. சினத்தையோ, வெறுப்பையோ, மன்னிப்பையோ, கருணையையோ அதில் காண முடியாது. இரத்த ஓட்டத்திற்காக அது துடிப்பதை மட்டுமே பார்க்க முடியும்.

ஒரு மருத்துவர், என்னை, அறுவை செய்யப்படும் மேசை மேல் படுக்க வைத்து, என் இதயத்தைச் சோதித்து, நான் என்றுமே அன்பை அல்லது வெறுப்பை உணர்ந்ததில்லை என்று சான்றிதழ் தந்தால், அவர் சொன்னது தவறு என்று மறுக்க எனக்கு எந்த வழியும் இல்லை. அன்பிருந்தது என்று நான் சொல்வதை அவர் ஒப்புக் கொள்வாரா என்ன? எனக்கு மூளைக் குழப்பம் என்பார்!

நான் அவரிடம், 'நீங்கள் அன்பு, வெறுப்பு போன்ற உணர்வுகளை அனுபவித்தது உண்டா?' என்று கேட்டால், அவர் தர்க்கரீதியானவர் என்றால், நேர்மையானவர் என்றால், அம்மாதிரி உணர்வு மயக்கங்கள் தமக்கும் உண்டு என்றே ஒப்புக் கொள்வார். மற்றபடி, இதயம் என்னவோ இரத்தத்தை உந்திக் கொடுக்கும் உறுப்பு மட்டுமே. ஆனால் அன்பையோ, வெறுப்பையோ உணரக்கூடியது இதயம் போல வேறு எதுவுமே இல்லை!

உங்கள் கண்களை அறுத்து ஆராய்ந்தால், அவை கனவுகள் கண்டதற்கான ஆதாரம், அவற்றில் காண முடியாது. நாம் எல்லாரும் கனவுகள் காண்கிறோம். அவை எங்கே வாழ்கின்றன? கனவு பொய்யாக இருக்கலாம். ஆனால், அது இருப்பது பொய்யன்று. ஒரு கனவு, எவ்வளவு இயல்புக்கு மாறாக இருந்தாலும், அது உள்ளே, எங்கேயோ நிகழ்ந்ததுதான்.

அது ஒரு பயங்கரக் கனவாக இருந்துவிட்டால், விழிப்பு வந்தவுடன் இதயம் 'படபட'வென்று வேகமாக அடித்துக் கொள்கிறது - அது பொய்யாக இருந்தும்கூட! நீங்கள் கனவில் அழுதிருந்தால், விழித்த பிறகு உங்கள் விழிகள் நனைந்திருக்கின்றன! உள்ளே ஏதோ நடந்திருக்கிறது. ஆனால், புறத்தில் உள்ள கண்களால் எதையும் வெளிப்படுத்த முடிவதில்லை. அகவயப்பட்ட, உள்ளுணர்வு சார்ந்த, தனிப்பட்ட எதையுமே வெளியில் பார்க்க முடியாது.

விக்கிரகத்தைப் பார்க்க முடியும் - இதயத்தை, கண்ணைப் பார்க்க முடிவது போல - ஆனால், வழிபாட்டைக் காண முடியாது. அது, காதல் போன்றது; கனவு போன்றது. ஒரு கோயிலைக் கடந்து செல்லும்போது, விக்கிரகத்தைப் பார்க்கலாம்; வழிபாட்டைப் பார்க்க முடியாது.

மீரா, ஒரு சிலையின் முன் ஆடிப்பாடுவது கண்டால் அவளுக்குப் பைத்தியம் என்று நினைப்பீர்கள். காரணம், அவளது வழிபாடு நமக்குப் புலப்படாமல் போய்விடுவதால்தான். அதனால் அவள் ஒரு கல்லின் முன்னால் ஆடுகிறாள் என்றே தோன்றும்!

இராமகிருஷ்ணர், கல்கத்தா தட்சிணேஸ்வர் கோயிலின் பூசாரியாக நியமிக்கப்பட்டார். சில நாட்களிலேயே மக்கள் அவரைப் பற்றிக் குற்றம் குறை சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்!

'மலர்களை ஆண்டவனுக்குப் படைப்பதற்கு முன்னால் அவர் அவற்றை முகர்ந்து பார்க்கிறார்; இறைவனுக்கு அமுது படைப்பதற்கு முன்னால், அவர் அதைச் சுவைத்துப் பார்க்கிறார்,' என்பது அவர்களின் குற்றச்சாட்டு!

இராமகிருஷ்ணரை, ஆலய அறங்காவற் குழுவினர் அழைத்து வந்து நிறுத்தி, அவர் செயல்களுக்கு விளக்கம் கேட்டார்கள்.

தனது தாய் தனக்கு உணவூட்டு முன், அதைச் சுவைத்துப் பார்த்தே கொடுத்ததாகவும், தகுதியில்லாவிட்டால் அவள் அதைத் தனக்குத் தரமாட்டாள் என்றும், அதேபோலக் கடவுளுக்கும் தாம் செய்து வருவதாகவும் அவர் கூறினார்! 'சுவையற்ற உணவை இறைவனுக்கு எப்படிக் கொடுப்பது? வாசமற்ற மலர்களை எப்படி அவருக்குச் சூட்டுவது?' என்பது அவர் வாதம். ஆனால், அது வழிபாட்டு விதிகளுக்கு விரோதம், என்று அறங்காவற் குழு கூறியது.

''வழிபாட்டிற்கு விதிமுறைகளா? அப்படி இருக்க முடியுமா என்ன? அன்பிற்கு விதிகள் உண்டா?'' என்று கேட்டார் இராமகிருஷ்ணர்.

விதிமுறைகள் இருந்தால் வழிபாடு செத்துப் போகும் விதிமுறைகள் இருந்தால் காதலும் செத்துப் போகும். உள்ளுணர்வுகளின் வெளிப்பிரவாகமே காதல். ஒரு தனிமனிதனின் சொந்த உணர்வு அது. இதில் உள்ள சர்வதேசிய உண்மையை அடையாளம் கண்டுகொள்ள வேண்டும்.

இருவர் காதலிக்கும்போது, இருவரும் தத்தமது சொந்தத் தனி வழிகளிலேயே காதலிக்கிறார்கள். வெளிப்பாடு முற்றிலும் வேறாக இருந்தாலும், அனுபவத்தில், ஓர் ஒற்றுமை இருக்கிறது. அவர்களின் காதல் தனித்தன்மை கொண்டதாக இருந்தாலும், இருவரின் காதலுக்குள்ளும் ஒரே ஆத்மாதான் குடி இருக்கிறது

விக்கிரகத்தைக் காணலாம்; வழிபாட்டைக் காண முடியாது என்று சொன்னேன். என்றாலும் நாம், 'விக்கிரக வழிபாடு' என்ற தவறான சொற்றொடரை உருவாக்கியிருக்கிறோம். முற்றிலும் தவறான சொற்றொடர் இது.

வழிபாடு என்பது சுவடு அழித்தல். முதலில் பக்தர் விக்கிரகத்தை உருவாக்கிக் கொள்கிறார்; பிறகு அதை மறையச் செய்து விடுகிறார். உலக அர்த்தத்தில், அவர் சிலையை உருவாக்குகிறார். ஆத்ம அர்த்தத்தில் அவர் அதை அழித்து விடுகிறார். அதை மண்ணால் உருவாக்கி, இறுதி இருப்பிற்குள் கரைய விட்டு விடுகிறார்.

அதன் இன்னொரு அம்சத்தையும் சொல்கிறேன். இந்த நாட்டில், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக விக்கிரகங்களைச் செய்து, நீரில் மூழ்கச் செய்து வருகிறோம். பலருக்கு இது ஆச்சரியமாக இருக்கிறது. 'காளியின் உருவத்தை அவ்வளவு அழகாகச் செய்து, ஏன் சில நாட்களில் நீரில் வீச வேண்டும்?' என்று பலர் என்னிடம் கேட்டார்கள். கணபதியை அழகாக அலங்கரித்துப் பலநாள் வழிபட்டு விட்டுப் பிறகு ஏன் வீசிவிட வேண்டும், கடலிலோ, ஆற்றிலோ, ஏரியிலோ? சுத்தப் பைத்தியக்காரத் தனம்தான்!

என்றாலும், அதற்குப் பின்னால் அழகான கருத்து ஒன்று மறைந்திருக்கிறது.

வழிபாடு என்பதே, உருவத்தைப் படைத்து, பின் அதை மறையச் செய்வதுதான்... விக்கிரகத்திற்கு ஒரு வடிவமும், உருவமும் தருவது. பிறகு, அதை, வடிவற்ற நிலைக்குள் கரைந்து காணாமல் போக விடுவது. அது ஒரு குறியீடு - காளிதேவியின் உருவத்தை நீரில் கரையச் செய்துவிடுவது.

ஆனால், சரியான வழியில் நாம் வழிபடுவதில்லை. சரியான முறையில், ஆழமான முறையில் வழிபட்டு வந்தால், விக்கிரகம் நமக்குள்ளிருந்து மறைந்து போகும்; நம்மால் உள்கிரகிக்கப்பட்டு விடும், நீரில் கரைப்பதற்கு முன்பே.

உண்மையான வழிபாடு இருந்தால், அதை நீரில் கரைக்க வேண்டிய அவசியமே நேராது. அது, இருக்கும் இடத்திலேயே இருக்கலாம். ஆனால், வழிபட்டவர் இதயம், இருப்பிற்குள், பரம்பொருளுக்குள், மூழ்கிக் கரைந்து போகும். விக்கிரகத்தை நீர்நிலைகளுக்குள் வீசி எறிதல், வெடித்துப் போன தோட்டாவை வீசிவிடுவது போலத்தான். அதன் வேலைதான் முடிந்து விட்டதே!

விக்கிரகங்கள், வெடித்துப்போன தோட்டாக்கள் என்றாலும், அவற்றை வீசி எறிவதில் நமக்கு வருத்தம்தான். நாம், இருபத்தியோரு நாட்கள் அதை வழிபட்டு வந்தபோதே, அது தன் வேலையை முடித்திருக்க வேண்டும். அந்தத் தோட்டா வெடித்திருக்க வேண்டும். அப்போதே அது மூழ்கிவிட்டது என்றுதான் பொருள்; மறைந்து விட்டது என்றுதான் பொருள்.

வழிபாடு என்பது மூழ்கிப் போதல்.

விக்கிரகத்தில் அது ஆரம்பமாகிறது. ஒரு முனை இது. வழிபாட்டின் சடங்கு மூலமாகவே நீங்கள் மேலே தொடர வேண்டியிருக்கிறது. நீங்கள் மேலே போகப் போக, விக்கிரகம் பின்தங்கி நின்று விடுகிறது. வழிபடும் நிலை மட்டுமே எஞ்சி நிற்கின்றது.

விக்கிரக நிலையிலேயே நின்றுவிட்டால், வழிபாடு என்ன என்பதே தெரியாமல் போய்விடும். வழிபாட்டு அனுபவத்திற்குள் நகர்ந்தால்தான், வழிபாட்டின் வேரைக் காண முடியும்; விக்கிரகத்தின் உண்மையான நோக்கமும் புரியும்.

விக்கிரக வழிபாட்டின் அடிப்படை விதிகள் என்ன? நீங்கள் தேடிக் கொண்டிருக்கும் இறுதி உண்மைக்குள் எட்டிக் குதிக்க, உறுதியாகக் கால் பதிக்கும் இடமொன்று வேண்டும். அதாவது, நீச்சல் குளத்திலுள்ள குதிபலகை போல.

இறுதி உண்மைக்கு எந்த இடமும் தேவையில்லை. ஆனால், குதிக்கப் போகும் உங்களுக்கு, கால் ஊன்றி எம்பிக் குதிக்க ஓர் இடம் தேவைப்படுகிறது. கடலில் குதிக்க நீங்கள் முடிவெடுக்கலாம். கடல் எல்லையற்றது. உங்களுக்குத்தான் காலூன்றிக் குதிக்க ஓர் கரை வேண்டும்.

குதிக்கும்வரை எங்கே நிற்பீர்கள்?

குதித்தவுடனே, கரை பின்தங்கி நின்று விடும்.

எல்லையற்ற நிரந்தரத்திற்குள் எட்டிக் குதிக்க உதவிய கரைக்கு ஒரு நன்றிகூடச் சொல்ல வேண்டாமா?

முரண்பாடாகத்தான் தோன்றுகிறது. உருவிலிருந்து, உருவற்றதற்குள் எப்படிப் பாயமுடியும்? அறிவுபூர்வமாகப் பார்த்தால் இது தவறுதான். வடிவம் எவ்வாறு, வடிவற்றதற்கு இட்டுச் செல்லும்? வடிவம், உங்களை, ஓர் ஆழ்ந்த வடிவத்திற்குள்தான் இட்டுச் செல்லும்.

கிருஷ்ணமூர்த்தியைக் கேட்டால், அது முடியும் என்றுதான் சொல்வார். சொல்லிலிருந்து சொல் கடந்ததற்குள் எவ்வாறு குதிக்க முடியும்?

ஆனால், எல்லாத் தாவுதல்களுமே, வடிவிலிருந்து வடிவற்றதற்குள்தான். ஏனென்றால், ஆழத்தில், வடிவம், வடிவற்றதற்கு எதிரானதன்று. அதன் ஒரு பகுதி. பிரிக்க முடியாத பகுதி. நமது பார்வைக்கு எல்லை இருப்பதால், அவை இரண்டும் நமக்கு வேறுவேறாகத் தோன்றுகிறது. உண்மையில் அவை இரண்டும் பிரிக்க முடியாதவை.

கரையில் நின்று கடலைப் பார்க்கும்போது, இக்கரையும் அக்கரையும் வேறு வேறாகவே தோன்றும். ஆனால், கடலுக்கடியில் மூழ்கிப் பார்க்கும்போது, இரு கரைகளும் நிலத்தால் இணைந்திருப்பதை அறியலாம். கடலடியில் நிலம்.

அறிவியல் மொழியில் சிந்தித்துப் பார்த்தால் சுவையாக இருக்கும். கடலின் அடிப்பாகம் முழுவதும் மணலும், மண்ணும்தான். கடலுக்குள் குதித்தால் மண்ணைப் பார்க்கிறோம். பூமி மண்ணைத் தோண்டினால் தண்ணீரைப் பார்க்கிறோம். அறிவியல் மொழியில் விளக்கினால், கடலில் அதிக நீரும், குறைந்த மண்ணும் இருக்கிறது. பூமியில் அதிக மண்ணும் குறைந்த நீரும் இருக்கிறது. விகிதாசார வித்தியாசம் மட்டுமே. ஆனால், இரண்டும் வேறு வேறாய் விலகி இருக்கவில்லை - ஒன்றாய், ஒன்றிணைந்து இருக்கின்றது.

உருவம் உருவற்றதோடு இணைந்திருப்பது போலவே, உருவற்றதும் உருவோடு இணைந்திருக்கின்றது. நாம் உருவில்தான் நின்று கொண்டிருக்கிறோம் - விக்கிரகத்தின் அடிப்படைக் கருத்து, நாம் உருவில்தான் இருக்கிறோம் என்பதை ஒப்புக் கொள்கிறது.

இதுதான் நம்முடைய சூழல். நாம் இங்கேதான் இருக்கிறோம். இங்கிருந்துதான் நாம் பயணம் துவங்க முடியும். சேரப்போகும் இடத்திலிருந்து பயணம் ஆரம்பிக்க முடியுமா என்ன?

ஆனால், சில தத்துவ ஞானங்கள் அப்படியும் இருக்கின்றன! நாம் இறுதியில் சேரப்போகும் இடம் எதுவோ அங்கிருந்தே அந்தத் தத்துவங்கள் ஆரம்பமாகின்றன! நாம் இப்போது இல்லாத இடத்திலிருந்து எவ்வாறு பயணம் புறப்பட முடியும்? இருக்கும் இடத்திலிருந்துதான் புறப்பட முடியும்.

நாம் எங்கிருக்கிறோம்? நாம் வடிவில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமது அனுபவங்கள் எல்லாமே வடிவம் சார்ந்தவை. வெளிப்படுத்துதலுக்கு உரியவை. வெளிப்படுத்த முடியாதது எதுவும், வடிவற்றது எதுவும், நமக்குத் தெரியாது.

காதலித்தால், ஒரு வடிவத்தையே காதலிக்கிறோம். வெறுத்தாலும், ஓர் உருவத்தையே வெறுக்கிறோம். நமது கவர்ச்சிகளும், வெறுப்புகளும் உருவம் சார்ந்தவையே. நமது நண்பர்களும், பகைவர்களும் உருவம் கொண்டவர்களே. நாம் எதைச் செய்தாலும், அது வடிவமுடன் தொடர்பு கொண்டதாகவே இருக்கின்றது.

சமயச் சிலைகள், விக்கிரகங்கள் பற்றிய இந்த உண்மையை, அடிப்படைப் புரிதல் ஒப்புக் கொள்கிறது. நாம் வடிவற்றது நோக்கிப் பயணம் புறப்படுகையில், வடிவற்றதற்கு ஏதாவது ஒரு வடிவம் கொடுக்க வேண்டி வருகிறது. அது நமது விருப்பத்திற்கு ஏற்றபடி அமையலாம்.

ஒருவருக்கு மகாவீரருக்குள் உருவற்ற அனுபவம் ஏற்படலாம், இன்னொருவருக்கு கண்ணனுக்குள். மற்றொருவருக்கு இயேசுவுக்குள். இயேசுவின் கண்களுக்குள் ஊடுருவிப் பார்ப்பதன் மூலம் உருவிலா இயேசுவைக் காண்பவர், வடிவற்ற வானத்திற்கு வாசல் திறப்பதைக் காண்பார். யார் இயேசுவின் கரத்தைப் பற்றிக் கொள்கிறார்களோ, அது அவரது கையாய் இராமல், நிரந்தரத்தின் கரமாக மாறிவிடும்.

இயேசுவின் உபதேச மொழி கேட்பவர், தம் இதயம் அதிர்வதை உணர்வார் - அவரது உபதேச மொழிகளால் அல்ல - அந்த மொழிகளுக்கு அப்பால் என்ன இருக்கிறதோ, அதனால். அந்த அதிர்வுகள் இயேசுவின் உருவச் சிலையை உருவாக்கி வழிபடும். வடிவற்ற நிலைக்குள் எட்டிக் குதிக்க எளிய வழி வேறெதுவும் இல்லை.

சிலர் கண்ணனுக்குள் வடிவற்ற நிலை காணலாம். மகாவீரருக்குள் கண்டதுபோல், புத்தருக்குள் அருவ நிலை காணலாம். ஆனால், ஒரு வடிவத்தின் மூலமாக அருவ நிலை காண நம்மால் முடியும். நேரடியாக உருவிலா நிலை காணும் ஆற்றல் நமக்கில்லை. அது வடிவம் கொண்டே நம்மிடம் வரவேண்டியிருக்கிறது.

புனித அவதாரம் என்பது இதுதான் - வடிவற்றது, வடிவும் உருவும் கொண்டும் வருவது - நிரந்தரம், தெளிவான உடலெடுத்து, உங்களுக்கு உணர்த்த முன் வருவது. இது சுய முரண்பாடு போல் தோன்றலாம். ஆனால், புனித அவதாரம் என்பது இதுதான். இந்த அவதாரம் ஒரு மேடை. அங்கே நின்றுகொண்டு நீங்கள் விசாலமான வானத்தைப் பார்க்கலாம்.

இந்த அவதாரம், வடிவற்றதன் ஒரு கணத்தோற்றம். அதனோடு நேரடித் தொடர்பு கொள்ள முடியாததால், ஏதாவதொரு வடிவத்தின் மூலம் அனுபவம் பெற வேண்டியிருக்கிறது.

புத்தரைக் கண்டவர், ஓர் ஓவியம் அல்லது சிலையிலிருந்து அவர் உயிர்பெற்று உதித்தெழுந்து வருவதைக் காண்பார். புத்தரை நேசிப்பவர், புத்தர் சிலை மெல்லக் காணாமல் போய், புத்தர் உயிர் வாழ்வதை அங்கே உணர முடியும்.

புத்தர், மகாவீரர், கண்ணன், இயேசு - ஆகிய எல்லாரையும் வடிவங்கள் வழியாகவே சென்று தொடர்பு கொள்ள முடியும். அதனால், வடிவம் என்பது ஒரு நல்ல ஏற்பாடாகவே தோன்றுகிறது.

விஞ்ஞானமும், கலையும் சேர்ந்து உருவாக்கும் சமய விக்கிரகம், பல கருத்துகளையும், கணக்குகளையும் கொண்டிருக்கின்றது. சிலையை உருவாக்கும்போது, அவற்றை யெல்லாம் நினைவில் கொண்டால், அந்தச் சிலை, உங்களை, ஆழ்நிலைத் தியானத்திற்கு அழைத்துச் செல்லும்.

இது தொடர்பாக, இரண்டு மூன்று விஷயங்களை நினைவில் கொள்வது நல்லது...

நீங்கள் ஏதாவதொரு புத்தர் சிலையைக் காணும்போது, அது ஒரு தனிமனிதரின் சிலையாக அல்லாமல், இருப்பின் ஓர்நிலையாக உணர்வீர்கள். அந்தச் சிலையை ஆழ்ந்து பார்த்தால், சில நொடிகளில், உங்களைச் சுற்றி மாபெரும் கருணை மழை பொழிவதை உணரலாம். புத்தரின் உயர்த்திய கை, அரைவாசி மூடிய கண்கள், சரிவிகித அளவில் அமைந்துள்ள முகம், மாபெரும் கருணை, மென்மையாய் அமர்ந்திருக்கும் நிலை - எல்லாம், ஓர் ஆழ்ந்த அர்த்தத்தில், உங்களுக்குள் கருணையை எழுப்புவதற்காகவே அமைந்துள்ளன.

மாபெரும் பிரெஞ்சு ஓவியர், சீசான்னிடம் யாரோ ஒருவர் கேட்டதற்கு, அவர், ''என் இதயத்தில் எழும் குறிப்பிட்ட உணர்விற்கு என்ன வடிவம் என்பதைக் கண்டு கொள்ளவே நான் ஓவியம் வரைகிறேன். என் முயற்சியில் எனது உணர்வை வெளிப்படுத்த முனைகிறபோது, திரையில் ஓவியம் உருவெடுத்து விடுகிறது,'' என்று கூறினார்.

அந்த ஓவியத்தை ஆழ்ந்து நோக்கும் ஒருவர், அதை வரையும்போது ஓவியர் அனுபவித்த அதே உணர்வை, உணர முடியும்.

நீங்கள் ஓர் ஓவியத்தைப் பார்க்கும்போது, அதன் வடிவத்தை மட்டுமே பார்க்கிறீர்கள். அதற்குப் பின்னால் இருக்கும் உணர்வை உடனே உணர்ந்துவிட முடியாது. ஓவியரின் ஆத்மாவையும் உணர்ந்துவிட முடியாது.

ஒருவர் தாறுமாறாகக் கோடுகள் கிழித்தால், அவை வெறும் கோடுகள் அல்ல. அவற்றைக் கூர்ந்து கவனித்தால் உங்களுக்குள்ளும் ஏதோ சில தாறுமாறான உணர்வுகள் தோன்றும். வெளியில் காண்பதை உள்ளே உணர்த்தி, ஒத்த அதிர்வுகளை உண்டாக்குவது மனதின் இயல்பு. அதே கோடுகளை ஓர் ஒழுங்கு முறைப்படி வரைந்தால், அதைக் காணும் போது, உங்களுக்குள் ஓர் ஒத்திசைவு உருவாவதை உணரலாம்.

ஓர் மலரைக் காணும்போது மனதில் மகிழ்ச்சி உண்டாகிறது. அதற்குக் காரணம், மலரின் இதழ்கள் சீராக சம விகிதப்படி அமைந்திருக்கும் ஒழுங்குமுறை தான். ஆனால், நாம் அதை நினைத்துப் பார்ப்பதில்லை.

ஒருவரின் முக அழகு உங்களைக் கவர்ந்தால், அதற்குக் காரணம், உங்கள் இதயத்தில் உள்ள அழகிய வடிவத்தோடு அது ஒத்துப் போவதுதான். அது ஓர் ஒத்திசைவை உமக்குள் உருவாக்கி விடுகிறது. உமக்குள் ஏதோ ஒன்று அழகாக இருப்பதால்தான் அப்படி.

இதேபோல, அழகற்ற முகம் உங்களுக்குள் ஒரு நிம்மதியின்மையை உருவாக்கி விடுகிறது. அழகியவரால் உருவாகும் ஆனந்தம், அழகு உங்களுக்குள் பாய்ந்து கொண்டிருப்பதால் ஏற்படுவதே. இதன் காரணமாக நீங்கள் இன்னும் அழகு பெற்று விடுகிறீர்கள்.

அழகின்மை என்பது, சமன்பாடுகள் இல்லாமல், ஒழுங்கற்று இருப்பது. இது நமக்குள், ஒழுங்கின்மை, வெறுப்பு, ஒத்திசைவின்மை, நிம்மதியின்மை ஆகியவற்றை ஏற்படுத்தி விடுகிறது.

புகழ்பெற்ற ரஷ்ய நடனக் கலைஞர் நிஜின்ஸ்கி தற்கொலை செய்து கொண்டபோது, அதை விசாரிக்க அவர் இல்லத்திற்குச் சென்றவர்கள், மிகுந்த நிம்மதியின்மையோடு வெளியே வந்தார்கள். காரணம் அவரது இறப்பல்ல; அவரது இல்லம்! அந்த வீட்டில் யார் குடியிருந்தாலும் தற்கொலைதான் செய்து கொண்டிருக்க முடியும் என்று அவர்கள் தெரிவித்தார்கள்!

அந்த வீட்டில் அப்படியென்ன இருந்தது? அவர் தமது வீட்டின் சுவர்களை யெல்லாம் கருப்பும் சிவப்புமாக வண்ணம் தீட்டியிருந்தார்

- இரண்டு ஆண்டுக் காலமாக. அந்தச் சூழலில், பைத்தியம் பிடிக்காமலோ, தற்கொலை செய்து கொள்ளாமலோ இருந்தால்தான் அது ஆச்சரியம்!

அந்த வீட்டில் யார் இருந்திருந்தாலும் அவருக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கும் என்று உள்ளே போய் வந்தவர்கள் தெரிவித்தார்கள்! அபாரமான துணிச்சல் கொண்டவராக அவர் இருந்ததால்தான் அவர் முன்பே தற்கொலை செய்துகொள்ளவில்லை! அந்த வீட்டின் சூழல் முழுவதுமே தாறுமாறாகக் குழப்பமாக இருந்ததாம்!

நீங்கள் பார்ப்பதெல்லாம் உங்களுக்குள், ஓர் எதிரொலியை ஏற்படுத்தி விடும். ஆழ்ந்த பொருளில், நீங்கள், எதைப் பார்க்கிறீர்களோ அதுவாக ஆகிவிடுவீர்கள். புத்தர் சிலைகள் எல்லாமே மற்றவர் இதயங்களில் கருணையை ஏற்படுத்தத்தான். அதுதான் அவரது உள்ளார்ந்த செய்தி.

'உங்களிடம் கருணை இருந்தால், நீங்கள் எல்லாம் பெற்றவர்,' என்று புத்தர் கூறினார். கருணை என்றால் என்ன? அது அன்பு அன்று. அன்பு, வரும் போகும். கருணை என்ற அன்பு, வந்தால் போகாது. மற்றவரிடம் ஏதாவது ஒன்றை எதிர்பார்க்கும் நுட்பமான ஆசை, அன்பில் மறைந்திருக்கிறது. ஆனால், கருணையில், கொடுப்பதற்கு யாரிடமும் எதுவும் இல்லை என்ற விழிப்புணர்வு அடங்கியிருக்கிறது. அதனால்தான் கருணையே இருக்கிறது.

கருணையில், வேண்டிப் பெறும் எண்ணமே இல்லை. அந்த நிலையில் கொடுப்பதற்கான ஆசைகூட எழுவதில்லை. கருணையால், இதயத்தின் எல்லா வாசல்களும் திறந்து கொள்ளும். இயல்பாகவே ஏதாவதொன்றை அது வினியோகிக்க ஆரம்பித்து விடும்.

''நீங்கள் தியானம் செய்தாலும் வழிபாடு நடத்தினாலும் எவ்வித அமைதியைப் பெறுகிறீர்களோ, அதை உடனே மற்றவர்க்கு வழங்கி விடுங்கள்!'' என்று புத்தர் கூறினார். ''ஒரு கணம்கூட அதை சொந்தத்திற்காக வைத்துக் கொள்ளாதீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் சமயவாதியே அல்ல. தியானத்தின் பிறகு உங்களிடம் நிறைய மகிழ்ச்சி ஏற்பட்டால், தேவைப்பட்டவர்களுக்கு வழங்கி விடுங்கள். உங்கள் இதய வாசல்கள் திறந்து கொள்ளட்டும். மகிழ்ச்சி யெல்லாம் தேவையானவர்களை நோக்கிப் பாயட்டும், மலையிலிருந்து கீழே பாய்ந்து வரும் தண்ணீர் போல,'' என்றார் அவர்.

'மாபெரும் கருணையே இறுதி விடுதலை' என்றார் புத்தர். அதனால்தான் புத்தர் சிலைகள் கருணை வடிவில் உருவாக்கப்பட்டன. அந்தச் சிலைகளின் முன்னால் அமர்ந்து வழிபடும் ஒருவர், அவரது கருணையின் ஒத்ததிர்வைத் தமக்குள் பெறுவார்.

ஆனால், புத்தர் சிலையை எவ்வாறு வழிபடுவது? உங்களுக்குத் தெளிவுபடுத்த ஒரு சான்றை விளக்குகிறேன். புத்தர் சிலையை வழிபட வேண்டுமானால், வழிபாட்டின் மையம் இதயமாக இருக்க வேண்டும். இது விளங்காவிட்டால், புத்தர் சிலையைப் புரிந்து கொள்ளவே முடியாது. ஏனென்றால், அதன் முக்கிய நோக்கமே, உங்களுக்குள் கருணையை உருவாக்குவதுதான்.

கருணையின் மையம் இதயம்தான்... அதனால், புத்தரை வழிபடுகையில், நமது விழிப்புணர்வு அவரது இதயத்தின்மேல் இருக்க வேண்டும். ஒரு பக்கம் அவரது இதயத்தின் மேலும், மறுபக்கம் நமது இதயத்தின் மேலும். இரண்டு இதயங்களும் ஒரே தாளகதியில் துடிக்கும் ஆழத்திற்குள் நீங்கள் பாய்ந்துவிட வேண்டும்.

உங்கள் இதயத்திற்கும், புத்தர் சிலைக்கும் இடையில் ஒரு கயிறு பிணைக்கப்பட்டிருப்பதை உணரும் நேரம் ஒன்று வரும். உணர்வது மட்டுமல்ல, அந்தச் சிலையின் இதயம் துடிப்பதை, உங்கள் திறந்த கண்களால் பார்க்கலாம். அது நிகழும்போது, அந்தச் சிலைக்கு உயிர்வந்து விடுவதை உணரலாம். இல்லாவிட்டால் அதற்கு உயிர்தான் ஏது? அதை வழிபடுவதில்தான் என்ன அர்த்தம்?

உங்கள் இதயத் துடிப்பிற்கேற்ப, சரியான முறையில் தியானம் செய்தால், புத்தர் சிலையின் இதயம் துடிக்கும். இருவர் இதயத்திற்கும் ஓர் உறவு நிலைபெறும். கண்ணாடியில் உங்கள் முகம் எதிரொளிப்பது போலவே, உங்கள் இதயம், புத்தர் இதயத்தோடு இணைந்து துடிக்கும்.

உங்கள் இதயம் துடிப்பதை எப்போதாவது கண்ணாடியில் பார்த்திருக்கிறீர்களா? ஒரு கண்ணாடி வெறும் கண்ணாடிதான். அதன் முன்னால் தோன்றும் எல்லா அசைவுகளையும் அது அப்படியே வெளிப்படுத்தும், என்று நீங்கள் கூறலாம். ஓர் ஆழமான சமய அடிப்படையில், சிலையும் ஒரு கண்ணாடிதான். அதனால், உங்கள் இதயமும், சிலையின் இதயமும் ஒன்றுபோலத் துடிக்கின்றன. இது நிகழும் வரை, அந்தச் சிலை ஒரு கல்தான்; அதற்குள் உயிர் ஏற்றப்படவில்லை, என்று பொருள்.

புத்தர் சிலையை வழிபட விரும்பினால், மையம் இதயமாகத்தான் இருக்க முடியும். மகாவீரரை வழிபடும்போது மையம் வேறு. இயேசுவை வழிபட, மையம் வேறு. கண்ணனுக்கு மையம் வேறு.

எல்லாச் சிலைகளும், வேறு வேறான மையம் கொண்டே சமைக்கப்படுகின்றன. ஒரு சமுதாயம், குறிப்பிட்ட சிலையொன்றைப் பல்லாயிரம் ஆண்டுகள் வழிபட்டு வந்தாலும், அதற்கு மையம் தெரிந்திருக்கும் என்று சொல்ல முடியாது. மையம் தெரியாதவரை அதற்கும் நமக்கும் தொடர்பு ஏற்படாது.

மலர் தூவி, தூப தீபங்கள் கொண்டு வணங்கினாலும், அது வெறும் கல் வழிபாடுதான். அந்தக் கல் விக்கிரகம் ஆகவேண்டும்! அதைச் சிற்பி செய்ய முடியாது. நீங்கள்தாம் செய்ய வேண்டும். சிற்பி வடிவம் மட்டுமே கொடுக்கிறார். உயிர் கொடுப்பது யார்? பக்தர்தான் அதற்குள் உயிரைப் புகுத்த வேண்டும். அதன்றி, அது வெறும் கல்தான். சிலை உயிர்பெற்ற பின்பே, வழிபாடு ஆரம்பமாக முடியும்.

சரி. வழிபாடு என்றால் என்ன?

ஒரு சிலைக்குள் உயிரைச் செலுத்த உங்களால் முடியுமானால், நீங்கள் வழிபாடு செய்வதாகப் பொருள்; அதாவது உயிருள்ள விக்கிரகத்தை. இதை ஆழமாகப் புரிந்து கொள்ளுங்கள்: ஒன்று உயிர் பெற்றவுடனே, வடிவுள்ளதும் வடிவற்றதும் அதற்குள் குடிகொண்டிருக்கும். அதன் உடல், வடிவம். உயிர், வடிவற்ற அம்சம். உயிருக்கு வடிவில்லை.

என் கை வெட்டப்பட்டால், என் உயிர் வெட்டப்பட்டு விடுவதில்லை. என்னை மனோவசியம் செய்தோ, மயக்க மருந்து கொடுத்தோ கையை வெட்டினால், வலி தெரிவதில்லை. எனக்குத் தெரியாமலேயே என் மூளை முழுவதையும் வெளியே எடுத்துவிடலாம். எங்கே உயிர் இருக்கிறதோ, அங்கே உருவத்திற்கும் உருவில்லாததற்கும் ஓர் சந்திப்பு நிகழ்கிறது.

பொருளுக்கு வடிவமுண்டு. பிரக்ஞைக்கு இல்லை. விக்கிரகம் கல்லாக இருக்கும்வரை அதற்கு வடிவம் மட்டுமே உண்டு; உயிர் இல்லை. பக்தர் அதற்குள் உயிரை ஏற்றிய உடனே அது உயிர்பெற்று விடுகிறது.

வழிபடுகிறவர் தமது இதயத்துடிப்பை, சிலையில் ஏற்படுத்தாதவரை, இறுதிநிலையின் இதயத் துடிப்பைத் தம்முள் உணரமுடியாது என்பதை மறந்துவிட வேண்டாம். அளவு கோல்

அதுதான். பக்தர் இதயம் சிலையில் துடிக்க, அதற்கு உயிர் வந்துவிடுகிறது. அப்புறம் அதற்கு வடிவமும் இருக்கிறது, வடிவற்றதற்கான வாயிலும் அதில் இருக்கிறது. அந்த வாயில் வழியாகப் பயணம் செய்வதே வழிபாடு.

உருவிலிருந்து, உருவிலா நிலை நோக்கிச் செல்லும் பயணமே வழிபாடு.

வழிபாட்டிற்குப் பல படிகள் உண்டு. ஒருவர் முதலில் புரிந்து கொள்ள வேண்டிய அடிப்படை, ஒவ்வொரு தனிமனிதனும் சுயநோக்கு உள்ளவன் என்பதுதான்.

இந்த உலகில் 'நான் இருக்கிறேன்' என்பதே மையமாக இருக்கிறது. அதுவே வாழ்க்கை முறையாக இருக்கிறது. 'நிலவும் விண்மீன்களும் எனக்காகவே தோன்றுகின்றன. என் மகிழ்ச்சிக்காகவே பறவைகள் பறக்கின்றன. கதிரவனும் எனக்காகவே ஒளி கொடுக்கிறான். உலகம் என்னைச் சுற்றியே சுழல்கிறது. நானே உலகின் மையம்.' இப்படி நினைக்கும் மனிதனுக்கும் வழிபாடு தெரியாது. தானே உலகின் மையப் புள்ளி, உலகில் உள்ள மற்றவை எல்லாம் பரிதி வட்டம் என்று நினைப்பவன் இவன்.

வழிபாட்டில் நீங்கள் இதற்கு நேர் மாறானதைத்தான் காணமுடியும்: ''நானே பரிதி வட்டம். மையப் புள்ளி வேறு யாரோ.''

சமய உணர்வு இல்லாத மனிதனின் தத்துவ அடிப்படையே, 'நானே மையம், உலகம் வெளி எல்லை' என்பதுதான். கடவுள் இருந்தால்கூட அவர் எல்லையில்தான் இருக்க முடியும். ''அவர் எனக்காகவே இருக்கிறார். நான் நோயடைந்தால், அவர் குணப்படுத்த வேண்டும். என் மகன் வேலையில்லாமல் இருந்தால், அவர் வேலை வாங்கிக் கொடுக்க வேண்டும். நான் விவகாரத்தில் மாட்டிக் கொண்டால், கடவுள் உடனே உதவிக்கு வரவேண்டும்.'' - இதுதான் அவனது மனோபாவம்.

இந்த வகையான கடவுள் நம்பிக்கை, நாத்திகத்தைவிட மோசமானது. இப்படிப்பட்டவர், தாம் பேசுவதன் அர்த்தம் விளங்காமலேயே பேசிக் கொண்டிருப்பார்.

வழிபாட்டின் உண்மையான அர்த்தம், பிரார்த்தனையின் உண்மையான அர்த்தம், சமய உணர்வு கொண்டவராக இருப்பது, நீங்கள் வெளிவட்டக் கோடாக இருப்பதையும், பிரபஞ்ச இருப்பே மையப் புள்ளியாக இருப்பதையும் உணர்வதுதான்.

சிலையின் இதயம் உயிருடன் துடிக்க, சிலை உயிர் பெற்று விட்டதாக ஒருவர் உணர்வார். உடனே, வடிவிலாமை அதற்குள் பிரவேசித்து விடும். 'நான் வெளி எல்லை. நான் உனக்காகப் பாடுவேன்; ஆடுவேன்; உனக்காக உயிர் வாழ்வேன்; மூச்சு விடுவேன் - என்னவெல்லாம் நிகழுமோ எல்லாம் உனக்காக, மையத்திற்காக,' என்ற உணர்வு பெறுவதுதான், வழிபாட்டின் அடிப்படை.

தோட்டாபுரி என்ற மகான் இராமகிருஷ்ணருடன் வாழ்ந்து வந்தார். ''இன்னும் எத்தனைக் காலம் விக்கிரக ஆராதனை செய்யப் போகிறீர்கள்? உருவை விட்டு, அருவம் நோக்கிப் பயணம் செல்ல வேண்டாமா?'' என்று தோட்டாபுரி கேட்டார்.

அதற்கு இராமகிருஷ்ணர், தான் தயாராகத்தான் இருப்பதாகவும், ஆனால், தன் தாயிடம் அனுமதி கேட்க வேண்டும் என்று கூறினார். எவரிடமிருந்தும் எதையும் கற்றுக் கொள்ள எப்போதும் தயாராக இருப்பவர் இராமகிருஷ்ணர்.

''எந்தத் தாயிடம்?'' என்று கேட்டார் தோட்டாபுரி.

''என் தாயிடம். காளி மாதாவிடம்,'' என்றார் இராமகிருஷ்ணர்.

''அதைத்தானே சொல்ல வந்தேன். எத்தனைக் காலம்தான் காளியின் சிலையை வணங்கிக் கொண்டே இருப்பீர்கள்? அதற்கும் கல்லைத்தான் கேட்க வேண்டுமா?'' என்றார் தோட்டாபுரி.

''என்ன செய்வது! அவளிடம் கேட்பது தவிர, எனக்கு வேறு வழியே இல்லை! நான் அவளை வழிபட ஆரம்பித்த உடனே, அவள் மையப்புள்ளி ஆகிவிட்டாள், நாள் வெளிவட்டம் ஆகிவிட்டேன். நான் செய்வதெல்லாம் அவளுக்காகவே. அவள் உத்தரவின்றி, ஞானத்திற்குக்கூட அர்த்தமில்லை. அவள், நரகத்திற்குப் போகச் சொன்னாலும், போய் விடுவேன். ஆனால், அவளைக் கேட்காமல் எப்படி?'' என்றார் இராமகிருஷ்ணர்.

தோட்டாபுரிக்கு அது விளங்கவில்லை. காளியை வணங்குவதை நிறுத்தக் காளியிடமே அனுமதி கேட்டால், அவள் எப்படி அனுமதி கொடுப்பாள்? ஒருவரைக் கைகழுவி விட அவரிடமே அனுமதி கேட்போமா என்ன? ஒன்றை விட்டுவிடக் கூட அனுமதி தேவைதானா?

அப்போது இராமகிருஷ்ணர் கோயிலுக்குள் போயிருந்தார். தோட்டாபுரியும் உள்ளே போனார். உள்ளே, இராமகிருஷ்ணர்,

கண்களில் கண்ணீர் பெருக நின்று கொண்டிருந்தார். அவளை வழிபடுவதை நிறுத்த அவளிடம் அனுமதி கேட்டுக் கெஞ்சிக் கொண்டிருந்தார்! 'தோட்டாபுரி எனக்காகக் காத்திருக்கிறார் அம்மா!' என்றும் கூறினார்.

பிறகு, சட்டென அவர் மகிழ்ச்சியடைந்தார். நடனமாட ஆரம்பித்துவிட்டார்! அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த தோட்டாபுரி 'என்ன ஆயிற்று' என்று கேட்டார்.

''எனக்கு அனுமதி கொடுத்து விட்டாள். இனி நான் உங்களிடம் பாடம் கற்றுக் கொள்கிறேன்,'' என்றார் இராமகிருஷ்ணர்!

வேறு ஒருவரை நீங்கள் மையமாகக் கொண்டிருந்தால், உங்கள் வாழ்வு சரணாகதி அடைந்த வாழ்வாகும். சரணாகதி வாழ்வையே வழிபாடு வலியுறுத்துகின்றது. பரம்பொருளை வழிபடுவது என்பது, பரம்பொருளின் விருப்பப்படி வாழ்வது; இருப்பதும், நிற்பதும், உண்பதும், குடிப்பதும், பேசுவதும், மௌனமாக இருப்பதும் பரம்பொருளுக்காகவே அமைய வேண்டும்.

உருவற்றது ஒருவரின் மையமாக அமைந்தவுடன், மர்மமான வெள்ளமொன்று பாய ஆரம்பித்துவிடும். ஒரு வகையான விரிவாக்கம் ஆரம்பமாகிவிடும். நம்மை நாமே சுருக்கிக் கொண்டு விட்டதால் - விதை வெடித்து முளை விடும்போது - அது மரமாக வளர ஆரம்பித்துவிடும். நாம், 'நான்' என்று இறுகிச் சுருங்கிவிடும். 'நான்' உடைந்து பிளவுபடும்போது, அந்தப் பிளவு வழியாக, விதை முளைவிட்டு வளர ஆரம்பிக்கும்; விரிவாக்கம் ஆரம்பமாகிவிடும். முளைத்தெழுவது, உலகையே சுற்றி வளைத்து விடும்.

சமயத்தில் நிறைய ஆச்சரியங்கள் உண்டு. ஆனால், அவை எவ்வாறு நிகழ்கின்றன என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிவதில்லை. காரணம், பிறப்பு முதல் நாம்தான் உலகத்தின் மையம் என்று நினைப்பதுதான்.

மயானத்தில் தம் சீடர்கள் சில காலம் செலவழிக்க வேண்டும் என்று புத்தர் சொல்வது வழக்கம். துறவறம் பூண்பதற்கு முன், மூன்று மாத காலமாவது அங்கிருக்க வேண்டும். உங்களிடம் கற்றுக் கொள்ளத்தான் வந்தோமே தவிர, மயானத்திடம் அல்ல என்று அவர்கள் சொல்லலாம்.

ஆனால், புத்தர் விடமாட்டார். ''பிணங்கள் எரியும் சுடுகாட்டில், 'நான்' என்பது சரணாகதி அடைந்துவிடும். அப்போது உன்னை

அணுகுவது எளிது. மூன்று மாதம், ஒவ்வொரு நாளும் எரியும் பிணங்களைப் பார்த்து வரும்போது, இந்த உலகம் உனக்காக மட்டும் இல்லை என்பது, ஒருநாள் புரியும். நீ இல்லாத போதும் உலகம் இருக்கும்.

எரியும் அந்தப் பிணம், உயிரோடிருந்த அந்தக் கடைசிக் கணத்திலும், உலகம் தனக்காகவே என்று நினைத்திருக்கும். அந்த மனிதன் இப்போது இல்லாதிருப்பதும் கூட உலகிற்குத் தெரியாது. ஓர் அலை தோன்றி மறைந்ததைக் கடல் கவனிப்பதில்லை.

''கவனித்துக் கொண்டே இரு. உலகம் உனக்காக இல்லை என்பதை உணரும்போது என்னிடம் வா. அப்புறம் உண்மையான தியானம் ஆரம்பமாகிவிடும். நீ மையமாக இருக்கும்வரை, உண்மையான வழிபாடு நடத்துவது சாத்தியமில்லை; பிரார்த்தனையோ, தியானமோ சாத்தியமில்லை. அதுவரை மாயை மட்டுமே நிலைத்திருக்கும். மாயை மறைந்தால்தான் வழிபாடு ஆரம்பமாகும். 'நான்' மறைந்து, 'தாங்கள்' முக்கியத்துவம் பெறும்போது, வழிபாடு தொடங்கிவிடும்,'' என்பார் அவர்.

இதை நினைவில் வையுங்கள்: பக்தர், விக்கிரகத்தை மறையச் செய்யும்போது, வடிவிலாமைக்கான வாயில்கள் திறந்து கொள்கின்றன. அப்புறம் அவர் தன்னையே மறையச் செய்து விடுகிறார். அப்போது ஆரம்பமாவது வழிபாடு. அந்த வாயில்கள், விக்கிரகத்தின் மூலம் திறந்து கொள்ளும் போதுதான், ஆணவம் அழித்தல் எளிதாகும். அந்த வாயில்களை அவர் உணரும்போதுதான், அவரே, வடிவிலாமைக்கான வாயிலாக முடியும் என்பதை உணர்வார். அவர் தமது சுயத்தை மறக்கும்போதுதான், ஆழத்திற்குள் பாய்வது சாத்தியமாகும்.

இரண்டு வடிவங்களுக்கிடையில் வேறுபாடு உண்டு. ஆனால், இது வடிவற்றதற்குப் பொருந்தாது. ஏனென்றால், வடிவற்றது ஒன்றே ஒன்றுதான். சிலை வடிவம் இழந்து விடும்போது, பக்தரும் வடிவம் இழந்து விடுகிறார். அப்புறம் 'இரண்டு' என்பது இல்லை. வடிவற்றதற்கும் எண்ணிக்கைக்கும் எவ்வித உறவும் இல்லை.

இதுதான் அடிப்படை. ஆனால், இந்த அடிப்படையைப் பயன்படுத்த, பலவிதமான வழிமுறைகளும், உத்திகளும் இருக்கின்றன. இது தொடர்பாக, சில விஷயங்களை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது...

சூஃபிகள், ஒரு வழிபாடாகவே நடனத்தைக் கருதி, அதற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தார்கள். மீரா, சைதன்யர் போன்ற பக்தர்கள், நடனத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் தந்தவர்கள். இதை ஒரு வழிமுறையாக ஏற்றுக் கொண்டால், பல பக்தி ஒழுக்கங்கள் உருவாக உதவும்.

நடனம் ஆடும்போது, நாம் உடலல்ல என்ற அனுபவம் ஏற்படுவதுதான் முதல் அம்சம். வேகமான அசைவுகளின் காரணமாக, நீங்களும், உடலும் வேறுபட்டு விடுவீர்கள். எதார்த்தத்தில் உங்கள் உடலுக்கும், உங்கள் பிரக்ஞைக்கும் ஓர் உறவு இருந்து கொண்டே இருக்கிறது. அது ஒரு நல்ல ஒழுங்கமைப்புதான். அன்றாட வாழ்வில் இந்த உறவு உடைந்துபோவதே இல்லை.

குர்ட்ஜியெஃப் ஒன்றைக் குறிப்பிடுகிறார். ஒரு சிறு டின்னில் பல கூழாங்கற்களைப் போட்டுக் குலுக்கினால், கற்களின் இருப்பு நிலை மாறிப் போகிறது. அடியிலிருப்பது, மேலேயும், மேலிருப்பது கீழேயும் போய் விடுகின்றன. நடுவிலிருப்பது, வேறுபக்கம் போய் விடுகிறது. எங்கோ இருந்தது வேறு எங்கோ நகர்ந்து விடுகிறது.

இவ்வாறு அதனதன் நிலைகள் தாறுமாறாக மாறிப் போவதால் அவற்றின் ஆணவங்கள் அழிந்துவிடும். ஒவ்வொரு கல்லும், 'நான் ஒன்றுமில்லை,' என்றுதான் உணரும். நிலைகள் தடுமாறி, மாற, நிகழ்வது இது.

எனவே, மீராவும், சைதன்யரும் நடனத்தைப் பயன்படுத்துவதற்கு அதிக முக்கியத்துவம் தந்தார்கள். 'டெர்லிஷ்' நடனம் மிக ஆழ்ந்தது. அதில், மிக வேகமாகச் சுழன்று சுழன்று ஆடுவார்கள். உடலின் ஒவ்வொரு கண்ணறையும் (செல்), தசை நார்களும் மிகுந்த அதிர்வுகளைப் பெறும். இதுதான், உடலுக்கும் பிரக்ஞைக்கும் உள்ள உறவைத் தகர்ப்பது. அப்போதுதான், நடனமாடுகிறவர், தாமும் உடலும் வேறு வேறு என்பதாக உணர்கிறார். அதனால், நடனத்தைப் பயன்படுத்துவது, மிகவும் மதிப்பு வாய்ந்தது.

'குவேக்கர்கள்,' 'ஷேக்கர்கள்,' என்று, இரண்டு கிறிஸ்துவப் பிரிவுகள் இருக்கின்றன. இதில், குவேக்கர்கள் இன்றும்கூட, செல்வாக்கு மிக்கவர்கள். இந்தப் பெயர்களுக்கு அர்த்தமுண்டு. வழிபாட்டின்போது, ஷேக்கர்கள், பலமணி நேரத்திற்குத் தம் உடலைக் கடுமையாக ஆட்டுவார்கள். உடல் முழுவதும், அதன் ஒவ்வொரு கண்ணறையும் நடுங்க ஆரம்பித்துவிடும். ஷேக்கர்களுக்கு வேர்த்து வடியும். அந்த உடல் ஆட்டத்தின்போது, உடலும், பிரக்ஞையும்

வேறுவேறாக, அவர்கள் உணர்வார்கள்... அதன்பிறகு, அந்தப் பிரக்ஞை வழிபாட்டை நோக்கி நகரும்.

'குவேக்கர்கள்' என்ற பெயருக்கும் அர்த்தமுண்டு. பிரார்த்தனை வேளையில் அவர்கள் பலமாக நடுங்குவார்கள்! பூகம்பத்தின் போது, எல்லாமே நடுங்கிச் சிதறி விழுவதுபோல, உடலின் நடுக்கத்தில், உடலுக்கும் பிரக்ஞைக்குமான தொடர்பு அறுந்து போகும். இம்மாதிரியான அசைவுகளும், ஆட்டபாட்டங்களும், பக்திப் பாடல்களும், உடலுக்கும் பிரக்ஞைக்கும் இடையில் பிளவை உண்டாக்கத்தான்.

இது தொடர்பாக, ஒலி விஞ்ஞானத்தைப் பற்றிச் சிறிது அறிந்து கொள்வது நல்லது. எல்லாப் பொருள்களின் இறுதி அலகு மின்சாரம்தான் என்று அறிவியல் கூறுகிறது. கீழைநாட்டு முனிவர்கள், அது மின்சாரம் அன்று, ஒலி என்றார்கள்.

எல்லாப் பொருள்களும் மின்சாரத்தால் ஆனவை என்று நவீன விஞ்ஞானம் கூறுகிறது. ஆனால், கீழைநாட்டு ஞானிகள் 'நாதம்' என்கிறார்கள். உண்மை எதுவாக இருந்தாலும், ஓசைக்கும் மின்சாரத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. இருவரின் கூற்றும் ஒரேசமயம் உண்மை என்பதற்கான வாய்ப்பு இருக்கிறது.

இன்றில்லா விட்டாலும் நாளை, ஆதிப் பொருளின் எதார்த்த உண்மை தெரியத்தான் போகிறது. ஆதிமூலப் பொருளின் ஒரு வடிவம் ஒலி, மறுவடிவம் மின்சாரம் என்பதாகவே அது இருக்கும். ஆதி மூலப்பொருள் என்ன என்பது மட்டும் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

சமய வழியில் ஆய்ந்த ஞானிகள், நாதமே இறுதிநிலை என்ற உண்மையைப் பெற்றார்கள். பருப்பொருள் கொண்டு ஆய்ந்த விஞ்ஞானிகள், மின்சாரத்தில் போய் முடிந்தார்கள். ஒன்றை மறக்க வேண்டாம். ஞானி தமக்குள் ஆய்ந்தார்; பொருள் கொண்டு ஆயவில்லை. உங்களுடைய சுயத்திற்குள் பெறும் இறுதி அனுபவம், நாதம்தான். உங்களைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இருக்கும்வரை, ஒலியின் விழிப்புணர்வு இருந்து கொண்டே இருக்கும். உள்ளே ஆழமாய்ச் செல்லச் செல்ல, ஓசை குறைந்து கொண்டே போகும், அது சூன்யமாகும் வரை. அந்த மௌனத்திற்கும் சொந்த ஓசையுண்டு! அதுதான் 'ஓசையற்ற ஓசை.' இதை நமது முனிவர்கள் 'அனாகத நாதம்,' ஒலிக்காத ஒலி, என்று குறிப்பிட்டார்கள்.

அந்த ஒலிக்காத ஒலியே, இறுதி ஓசை. வடிவற்றதற்குள் பிரவேசிப்பதற்கு முன் ஏற்படும் மனித அனுபவம் இந்த ஓசைதான். இந்த அனுபவம் வாய்க்கப் பெற்றதால்தான் இந்திய ஞானிகள், நாதமே இறுதி மூலம் என்றார்கள்.

விஞ்ஞானிகள், பொருளைப் பிளந்து பிளந்து சென்று, பிறகு அது வடிவிலா நிலையை அடையும் முன்பு, 'எலக்ட்ரான்'களாகப் பார்க்கிறார்கள். அதன் பிறகு, அந்தப் பொருள் முற்றிலுமாக அழிந்துபோய், வடிவின்மை நிகழும்போது, மின்சாரமாக எஞ்சி நிற்கின்றது.

பொருளின் மிகச் சிறிய பகுதி இருப்பதற்கு முன்பு, பிரக்ஞையின் இறுதிப் பகுதி சிறிய அளவிலாவது இருக்குமா என்பதைக் கவனிக்க வேண்டும். பிரக்ஞை, பொருளைவிட, மிக நுட்பமானது. அதனால், பொருளுக்கு முன், பிரக்ஞையின் இறுதி அம்சம் இருக்க வேண்டும். அதனால்தான், ஒலி, மின்சாரத்தைவிட மிக நுட்பமானது என்று இந்திய ஞானிகள் கூறினார்கள். மின்சாரத்திற்கு முன்பே ஒலி. ஒலியே அனைத்திற்கும் ஆதாரம்.

இசை, பிரார்த்தனை, மந்திரம் எல்லாம் ஒலியையே பயன்படுத்துகின்றன. ஒவ்வொரு ஒலியும் உங்களுக்குள் குறிப்பிட்டதொரு நிலையை ஏற்படுத்துகின்றது. அவ்வாறு ஏற்படுத்தாத ஒலியே இல்லை.

'ஒலி மின்னியல்' துறையில் ஆய்வுகள் நடத்தும் விஞ்ஞானிகளுக்கு, இசையால் பயிர் வளர்க்கலாம், பருவ காலத்திற்கு முன்பே பூப்பூக்க வைக்கலாம் என்பது, இப்போது தெரியும். குறிப்பிட்ட இசைக் கருவியால், பசுவிடம் அதிகம் பால் கறக்கலாம். ஆனால், தவறான கருவியால், அல்லது தவறான இசையால், பசு பால் சுரக்காமலே போய்விடவும் கூடும்!

ஒலி, உண்மையில் உங்களுக்குள் பாய்ந்து, உங்கள் பிரக்ஞையைத் தாக்குகின்றது! ஒரு வாள் உங்கள் கழுத்தை வெட்டலாம். ஆனால், 'ஒலி வாள்' உங்கள் மனதை வெட்டித் தள்ளி விடுகிறது. ஒலிவாள் மிகக் கூர்மையானது. அது உங்கள் மனதை, அதன் பூர்வ வாசனைகளிலிருந்து முற்றிலுமாகத் துண்டித்து விடுகின்றது. பக்தனின் மனதை ஒளிவாள் வெட்டித் தள்ளிவிட, அவனுடைய எல்லையின்மைக்கான பயணம் ஆரம்பமாகி விடுகிறது. அதில் ஆய்வுகள் நடைபெற்றிருக்கின்றன. இந்த ஆய்வில், எல்லாச் சமயங்களும், சில சிறப்பு ஒலிகளை எடுத்து அவற்றை

ஒழுங்குபடுத்திப் பயன்படுத்தி இருக்கின்றன. இந்த ஆய்வு பல்லாயிரம் ஆண்டுகள் நடைபெற்றிருக்கின்றன.

அண்மையில், ஜப்பானிலிருந்து ஒருவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். ஜென் சோட்டோ பள்ளியில் இரண்டு ஆண்டுகளாக அவர் ஒரு பயிற்சி செய்து வருவதாகத் தெரிவித்தார். அவர் விழித்திருக்கும் நேரம் முழுவதிலும் ''மு... மு...'' என்ற ஒலியை எழுப்பிக் கொண்டே இருந்தாராம். அதிகாலை மூன்று மணிக்கே எழுந்து, நீராடி, 'மு... மு...' சொல்ல ஆரம்பித்து விடுவார். உண்ணும் நேரம், உறங்கும் நேரம் தவிர, மற்ற எல்லா நேரங்களிலும் அவ்வாறு சொல்லிக் கொண்டே இருந்தால், எண்ணங்கள் படிப்படியாகக் குறைந்து விடுமாம். 'மு... மு...' ஒலி தொடர்ந்து ஒலிக்க, அது எதிரொலித்து, ஒருவகைப் புயல் உள்ளே உருவாகி விடுகிறது. அது வாளாக மாறி எல்லாச் சிந்தனைகளையும் வெட்டித் தள்ளி விடுகிறது, என்றார்.

ஏழு நாட்களுக்குப் பிறகு, அந்த ஒலியை ஏற்படுத்தக் கூடத் தேவையில்லை. அதுவே தானாகத் தொடர்ந்து ஒலிக்கத் தொடங்கி விடுகிறது. அது உடல் முழுதும் பரவியும் விடுகிறது. அவர் என்ன செய்து கொண்டிருந்தாலும் சரி - அவருக்குள் 'மு... மு...' என்ற மௌன ஒலி தொடர்ந்து கொண்டே இருக்கும். உடலின் ஒவ்வொரு கண்ணறையும், தசை நாரும் அதே ஒத்திசைவிற்கு வந்து விடுகின்றன.

அப்புறம் உண்பதுகூடச் சிரமமாகி விடுகிறது. காரணம், 'மு... மு...' தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அந்த ஏழு நாட்களுக்குப் பிறகு உறக்கமும் சிரமமாகி விடுகிறது, அவர் வாய் அதை உச்சரித்துக் கொண்டே இருப்பதால். அரை குறைத் தூக்க மயக்கத்திலும் 'மு... மு...' ஒலி, ஆழ்ந்து ஆழ்ந்து செல்ல ஆரம்பித்து விடுகிறது.

இருபத்தியோரு நாட்களுக்குப் பிறகு, அவர் 'மு... மு...' என்பதைச் சிங்கம் போல் கர்ச்சிக்க ஆரம்பித்து விடுவார். அவரது கண்கள், முகம், இயல்பு எல்லாமே மாறிவிடும். அவருடைய குருவோ, அதைத் தொடருமாறு அவரை விரட்டிக் கொண்டிருப்பார்.

கர்ச்சிக்க ஆரம்பித்த உடனே, உண்ணல், பருகல், உறக்கம் எல்லாம் போய்விடும். நான்காவது வாரத்தில் அவர் பைத்தியம் போல் ஆகிவிடுவார். அந்த ஒலியைத் தவிர வேறு எந்த நினைவுமே இல்லாத நிலை அது. அவரது பெயரைக் கேட்டால்கூட 'மு... மு...' என்றே சொல்வார்!

தமது உடல் சார்ந்த எல்லா உணர்வுகளையும் அவர் இழந்து விடுவார். 'மு... மு...' மட்டுமே தங்கி இருக்கும். தாம் யார் என்பதே அவருக்குத் தெரியாமல் போய்விடும். அந்தச் சமயங்களில் அவரைக் கவனமாகக் கண்காணித்துக் காப்பாற்றி வரவேண்டும். அவர் எதையாவது செய்து விடுவார்; எங்காவது போய் விடுவார்.

கடைசிக் கட்டத்தில், தம் சக்தி முழுவதையும் திரட்டிக் கர்ச்சிப்பார், ஒரு பெரிய காயம் பட்டுவிட்டது போல! அல்லது, பேய் பிடித்து விட்டது போல! அப்புறம், எல்லாம் அடங்கிவிடும். மாபெரும் கடலலை பாய்ந்து மறைந்து விட்டது போல. 'கிளைமாக்ஸ்' நடந்து முடிந்து விட்டது. அவருக்குள் எல்லாம் துண்டு துண்டாய்ச் சிதறிப் போய் விட்டன.

அவர் அப்படியே தரையில் வீழ்ந்து, அசையாமல், அமைதியாக மூன்று வாரங்கள் கிடப்பார். அவர் எழுந்து வரும்போது, பழைய மனிதராக இருக்க மாட்டார் - புதுப்பிறவி எடுத்திருப்பார். பழைய ஆள் செத்துப் போனார். பழைய அம்சங்கள் எதுவும் இப்போது அவரிடம் இல்லை. அவரது சினம், விருப்பு வெறுப்புகள், ஆசை - எல்லாம் தேடினாலும் கிடைக்காது. இறந்த காலத் தொடர்பு முற்றிலும் அறுபட்டுப் போய் விடுகிறது. அவரது 'மு' சோதனை காரணமாக, அவரது மாபெரும் ஒலிச் சோதனை காரணமாக, அவரது பிரக்ஞை முழுவதும் மாற்றம் பெற்று விடுகிறது.

அதேபோன்ற ஓசைதான் 'ஓம்!' எல்லா மதங்களுக்கும் தனித்தனி ஓசை உண்டு. அவை வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. அந்த ஓசை ஆழப்படும்போது, பக்தர் மாற்றம் அடைகிறார். பக்திப் பாடல்களுக்கும், இசைக் கருவிகளுக்கும் அதே விளைவுதான். அதனால்தான், திரும்பத் திரும்பச் செய்தல் முக்கியத்துவம் பெறுகிறது.

இன்று ஒரு பாடல், நாளை ஒரு பாடல், நாளை மறுதினம் இன்னொரு பாடல் என்று பாடிக் கொண்டிருந்தால் பயனில்லை. ஒரே மையத்தின் மேல், ஒரே மாதிரி, திரும்பத் திரும்ப அடித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

கூடாரம் அடிக்கும் முனையை, வேறு வேறு இடங்களில் மாற்றி மாற்றி அடித்தால் பயனில்லை. அதேபோல, இடமாற்றம் போல மையங்களை மாற்றிக் கொண்டிருந்தால், பயன் கிடைக்காது. கிணறு வெட்டுவதானால் ஒரே இடத்தில் தானே வெட்டிக் கொண்டிருக்க வேண்டும்?

அதனால்தான், 'மீண்டும் மீண்டும்' என்பது வலியுறுத்தப் படுகின்றது. 'மு' அல்லது 'ஓம்,' அல்லது ஏதாவதொரு பாடல் வரியை ஒரு மாத காலம் திரும்பத் திரும்ப, அதே கதியில் ஒலித்துக் கொண்டே இருந்தால், விளைவு தெரியும். இதில் ஓர் ஆபத்தும் இருக்கிறது. அதை இயந்திர கதியில் ஈடுபாடற்றுச் சொல்லிக் கொண்டிருந்தால் அதில் எந்தப் பயனும் இல்லை.

மீண்டும் மீண்டும் ஒன்றைச் சொல்வது என்பது, வாழ்வா சாவா என்கிற தீவிரத்தில் அமைந்திருக்க வேண்டும், எல்லா சக்திகளையும் அதன் மேல் செலுத்துவது போல. உடலின் ஒவ்வொரு கண்ணறையும், ஒவ்வொரு மயிர்க்காலும், ஒவ்வொரு தசை நாரும், அதில் பங்கு பெற்றிருக்க வேண்டும். ஒவ்வொரு நரம்பும், ஒவ்வொரு எலும்பும், ஒவ்வொரு தசையின் சிறு பகுதியும், அதில் ஈடுபட்டிருக்க வேண்டும்... இரத்தத்தின் ஒவ்வொரு துளியும்கூட, உரக்க ஒலிக்க வேண்டும். உங்களுடைய இருப்பே நாதமாக மாறிவிட வேண்டும். பயன் அப்போதுதான்.

மாதக் கணக்கில், ஆண்டுக் கணக்கில் ஒன்றையே திரும்பத் திரும்பச் சொல்வது, ஒரே இடத்தின் மேல் மீண்டும் மீண்டும் அடிப்பதுபோல. அப்புறம் கதவு திறக்காமல் என்ன செய்யும்!

அதனால்தான், ஓசை, பாடல், இசை எல்லாம் வழிபாட்டில் பயன்படுத்தப்படுகிறது. இவையெல்லாம் விக்கிரகத்தின் முன்னால் தான் செய்யப்பட வேண்டும். இதை மறந்துவிடக் கூடாது. ஆனால், நடனத்தின் விஷயம் வேறு.

பலர் நாட்டியம் ஆடவே செய்கிறார்கள். என்றாலும், ஞானம் பெறுவதில்லை. நடனத்திற்காகவே நடனம் ஆடினால் ஞானம் பெற முடியாது. எல்லாமே, எல்லையில்லா உருவிலாப் பொருளின் பொருட்டே அமைந்திருக்க வேண்டும். என்றாலும், விக்கிரகத்தின் முன்னால்தான் செய்யப்பட வேண்டும். அப்போதுதான், உங்கள் பக்தியால் அது உயிர்பெறும்.

அப்போதுதான் அந்த விக்கிரகம், நீங்கள் ஆடுவதெல்லாம் ஆட்டத்திற்காக அல்ல என்பதை, உங்களுக்கு நினைவுபடுத்திக் கொண்டே இருக்க முடியும்.

நடனம் வெளிவட்டக் கோடு. விக்கிரகம் மையப்புள்ளி. மையமே பரம்பொருள். மற்றவையெல்லாம், அதற்குள் எட்டிக் குதிக்க உதவும்

ஏற்பாடுகள். நாட்டிய மணிகள், இசை மேதைகள், பாடற் கலைஞர்கள் எத்தனைபேர் இருக்கிறார்கள்! இவர்களெல்லாம் கலையில் வல்லவர்கள் - எந்த பக்தரை விடவும்!

ஆனால், விவகாரம் அதுவல்ல. பக்தருக்குக் குறி, இசை, அல்லது பாடல் அல்ல. அவரது நோக்கமே வேறு. அவரது முயற்சியெல்லாம், தானின்றிக் கலந்து கரைந்து போவதுதான். அதற்காக, பரம்பொருளின் மையத்திற்கு வெளியே அவர் வெளிவட்டக்கோடு ஆகிவிடுகிறார். பரம்பொருளின் பிரவாகத்தில் கலந்து தானும் மிதப்பதற்காகவே, அவர் நெகிழ்வுத் தன்மை பெற்று விடுகிறார்.

பக்தர் தம் கன்னங்களில் கண்ணீர் வழிய நிற்பதை நாம் அடிக்கடி பார்க்கிறோம். அவர் வடிப்பது ஆனந்தக் கண்ணீர். ஒருவருக்குள், துக்கமோ, பேரின்பமோ காரணமாக, ஏதோ ஒன்று உருகி, இளகி, நீராகும்போது கண்ணீர் பெருகுகின்றது.

கண்ணீரின் நோக்கத்தை, இதுவரை விஞ்ஞானிகளால் விளக்க முடியவில்லை. கண்ணின் தூசு தும்புகளைக் கழுவித் தூய்மைப்படுத்தவே கண்ணீர் சுரப்பதாக அவர்கள் சொல்கிறார்கள். கண்ணீர்ச் சுரப்பிகள், கண்களைச் சுத்தம் செய்யவே அமைந்திருக்கின்றன. ஆனால், வேதனையால், துக்கத்தால், மிகுந்த மகிழ்ச்சியால், ஏன் கண்ணீர் பெருகுகின்றது? அந்த வேளைகளில் எல்லாம் கண்களில் தூசி விழுந்து விடுகிறதா என்ன?

உணர்வுகள் எல்லை மீறும்போது கண்ணீர் பிறக்கின்றது. அப்போது, கண்ணீர்ச் சுரப்பிகள் திறந்து கொள்கின்றன. பக்தர் அழுதாலும், அதன் தன்மை வேறுதான். பக்தர் அல்லாதவருக்கு அது விளங்காது.

பக்தர் அழுவதற்குக் காரணம் என்ன? அவருக்கும் வேதனைகள் இருக்கலாம். அதனால்தான் அவர் கை கூப்பியபடி அழுகிறார் என்று நினைக்கலாம். ஒருவர் மையத்தில் இருக்கும் போதுகூட, தன் கவலைகளால் அழுகிறார் என்றால், அவர் பக்தரே அல்ல. அவருக்கு வழிபாடு பற்றி ஒன்றுமே தெரியாது.

நமக்குள் ஏற்பட்டுள்ள உறைநிலை, இறுக்கம், கெட்டியாகி விடும்போது, அது இளகி உருகிக் கரையும் காலகட்டம் ஒன்று வரும். அந்த விழிப்புணர்வே கண்ணீரைக் கொண்டு வந்துவிடும். பிரபஞ்ச இருப்பின் மீது ஏற்படும் நன்றியுணர்வாலும் கண்ணீர் பெருகும்.

நம்மை நோக்கி, நம்மில் பாயும் பெருங் கருணைக்கு நன்றிக் காணிக்கை செலுத்த நம்மிடம் கண்ணீரைத் தவிர வேறு என்ன இருக்கிறது? அதைப் பெற நமக்கு என்ன தகுதி இருக்கிறது? அந்தப் பேரானந்தம் பெற நமக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? அப்படிப்பட்ட பேரருள் நமக்குக் கிடைப்பது பற்றி நாம் கனவிலும் எண்ணிப் பார்த்ததில்லை. அப்படியிருக்க, நாம் பெற்ற பெரும் பேறுக்காக நன்றி செலுத்த நமக்கு ஒரு வழியும் இல்லை. அதை வெளிப்படுத்த சொற்களாலோ, மற்றவற்றாலோ முடியாது.

அப்படிப்பட்ட தருணங்களில், கண்கள், வித்தியாசமான முறையில் அழுகின்றன. காதலரின் அழுகையைவிட வேறுபட்டது பக்தரின் அழுகை. காதலரின் அழுகை, சின்னச் சின்ன ஆசைகளால், தேவைகளால் உண்டாவது. பக்தருக்குத் தேவை எதுவுமே இல்லை. காரணமில்லாமல் அவர் அழுகிறார்... திக்கற்றவர்போல் ஆகிவிடுகிறார் அவர்.

நன்றி தெரிவிக்க விரும்பினாலும், வார்த்தைகள் வாயிலிருந்து வருவதில்லை. அவரால் பேசவே முடிவதில்லை. அப்போதுதான், கண்கள் தம் வழியில் பேசுகின்றன! வழிபாட்டின் பூரணத்துவம் கண்ணீரில்தான் இருக்கின்றது... அதன் உருகிய தன்மையில், அதன் பெருக்கத்தில்.

பரவச நிலை உணர, சமய விக்கிரகங்கள் பல்வேறு விதங்களில் பயன்படுத்தப்பட்டன. அதற்கு எதிராகப் பேசுகிறவர்களுக்கு வழிபாடு பற்றி எதுவுமே தெரியாது. தெரியாதவர்கள் எதையும் சொல்லலாம். அறியாதவர் பேச்சுக்கு ஏது மதிப்பு? இந்த நூற்றாண்டில், மற்றவர்களுக்கும் உண்மை தெரியாமற் போனதால், அம்மாதிரிப் போதனைகள் வேர் பதித்துவிட்டன. யாருக்குமே, எது எப்படி என்று தெரியாதபோது, சொல்லப்படுவதை யெல்லாம் நாம் நம்ப வேண்டி நேர்ந்து விடுகிறது.

'கடவுள் இல்லை', என்று ஒருவர் சொன்னால், அதை அவரால் நிரூபிக்க முடியாது. 'இருக்கிறார்' என்று சொல்பவராலும் நிரூபிக்க முடியாது. ஆனால், மனம் என்னவோ எதிர்மறைப் பக்கமாக எளிதில் போய்விடுகிறது. உடன்பாடான அம்சங்களை ஏற்க மனம் தயங்குகிறது. காரணம், அதை நிரூபிக்க வேண்டிய சிரமம் இருக்கிறதே! வழிபாடு உடன்பாடான அம்சம். சமய விக்கிரகங்கள் உடன்பாடானவை. எதையாவது மறுப்பதால் நட்டம் ஒன்றும் ஏற்படுவதில்லையே!

துர்கனேவ், ஒரு சிறிய கதை எழுதியிருக்கிறார். ஓர் ஊரில் புத்திசாலியான அறிஞர் ஒருவர் இருந்தார் அதே ஊரில் பரம முட்டாள் ஒருவனும் இருந்தான். ஒருநாள், அந்த முட்டாள் அறிஞரிடம் வந்து, தான் புத்திசாலி ஆவதற்கு வழி என்ன என்று கேட்டான். அதற்கு அந்த அறிஞர், ''புத்திசாலி ஆக வேண்டுமா, அல்லது புத்திசாலிபோல் தோன்றினால் போதுமா?'' என்று கேட்டார்.

''புத்திசாலியாகவே மாற வேண்டுமானால், நிறைய சிரமப்பட வேண்டி இருக்கும். நீண்ட காலமும் ஆகும். அப்படித் தோன்றினால் போதும் என்றால், அது சுலபம்தான்,'' என்றார் அவர்.

''புத்திசாலித்தனம் எல்லாம் வேண்டாம்; அப்படித் தோன்றினால் போதும்! எளிய வழியொன்று சொல்லுங்கள்!'' என்றான், அவன்.

''உண்மையான புத்திசாலி ஆனால், தவறு ஏற்படுவதற்கு வாய்ப்பிருக்கிறது. அப்படித் தோன்றினால் போதும் என்றால், எந்தத் தவறு நேராது,'' என்றார் அறிஞர்.

முட்டாள் பொறுமை இழந்தான். ''சீக்கிரம் ஒரு தந்திரம் சொல்லுங்கள்,'' என்று அவசரப்பட்டான். அறிஞர், அவனை அருகில் அழைத்து, அவன் காதில் ஏதோ சொன்னார்...

அவ்வளவுதான், அன்று முதல் அவன் புத்திசாலி ஆகத் தொடங்கினான். விரைவில் அந்த ஊரின் சிறந்த புத்திசாலி ஆகிவிட்டான்!

ஊர்க்காரர்கள் தங்களுக்குள் மெல்லப் பேசிக் கொண்டார்கள், இப்படி: ''இந்த மடையன் எப்படி புத்திசாலி ஆனான்? அறிஞர் இவனுக்கு என்னதான் உபதேசம் செய்திருப்பார்?''

அறிஞர் சொன்னது என்னவென்றால், ''யார் என்ன சொன்னாலும் அதை மறுத்துவிடு!'' என்பதுதான்.

''மற்றவர்கள் குறிப்பிடும் விஷயம் பற்றி எனக்கு எதுவுமே தெரியாவிட்டால்?'' என்று கேட்டான் முட்டாள்.

''அதைப் பற்றிக் கவலையே படாதே! ஷேக்ஸ்பியர் எவ்வளவு அழகாகக் கவிதை எழுதியிருக்கிறார் என்றால், 'என்ன பெரிய கவிதை! பள்ளிக்கூடப் பையனால் கூட அப்படி எழுத முடியும். எங்கே அவரது கவிதை எப்படிச் சிறந்தது என்று நிரூபியுங்கள்,' என்று சொல்லிவிடு. பீத்தோவின் சங்கீதம் தெய்விகமானது என்று யாராவது சொன்னால், 'நரகத்தில்கூட அம்மாதிரி சங்கீதம் உண்டு' என்பது மாதிரி மறுத்துவிடு! நிரூபிக்கும்படிக் கேள்!'' என்றார் அறிஞர்.

இரண்டு வாரங்களில் அவன் பெரிய புத்திசாலி ஆகிவிட்டான், எதைச் சொன்னாலும் மறுத்து!

இந்த நூற்றாண்டு, நூற்றுக் கணக்கான முட்டாள்தனங்களைக் கொண்டிருக்கிறது. நமது முட்டாள் தனங்களின் அடிப்படை, மறுப்புதான். ஒன்றன்பின் ஒன்றாக, எல்லாவற்றையும் நாம் இந்த நூற்றாண்டு முழுவதும் மறுத்து வந்துவிட்டோம். சிலவற்றை நிரூபிக்க முடியாதவர்களும், மறுப்பாளர்களுடன் சேர்ந்து விட்டார்கள்.

ஒன்றை மறக்க வேண்டாம். வாழ்க்கை எவ்வளவு எதிர்நிலை இருக்கிறதோ, அந்த அளவு அது முக்கியத்துவம் இழந்து விடும்.

உடன்பாட்டு நிலை இல்லாமல் எந்த உண்மையையும் அறிய முடியாது.

அதிகம் எதிர்நிலை கொண்டவர் வெளிக்கு அறிவாளி போல் தோன்றினாலும், அடிப்படையில் அவர் அடிமுட்டாள்தான். எதிர்மறைகள் அதிகரித்தால், உண்மை உணர முடியாமல் போவதோடு, அழகு, பரவசம் இராது. உயர்ந்த அனுபவங்கள் எல்லாமே உடன்பாட்டு மனதால்தான் உண்டாகும். மதிப்பீடுகளின் அனுபவமும் உடன்பாட்டு மனதில்தான் உண்டாகும்.

'இல்லை' என்று ஒருவர் சொல்லும்போது, அவரது மனம் மூடிக் கொள்கிறது. சொற்களின் பாதிப்பு பற்றி நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா? அறையைத் தாழிட்டுக் கொண்டு உள்ளிருந்து, உரக்க, 'இல்லை' என்று கத்திப் பாருங்கள். உங்கள் இதயம் சுருங்கி, மூடிக் கொள்ளும்.

'ஆமாம்' என்று உரக்க சொல்லிப் பாருங்கள். இதயம் திறந்து கொள்ளும். அதற்குச் சிறகுகள் முளைக்கும். வானத்தில் பறக்க ஆரம்பித்து விடும்!

சொற்கள் சும்மா பிறப்பதல்ல. உச்சரிப்பு, ஓர் இணையான நிகழ்வை உருவாக்கி விடுகின்றது. 'இல்லை' என்றால் உள்ளே ஏதோ ஒன்று சுருங்கும். 'ஆம்' என்று சொல்ல ஏதோ ஒன்று உள்ளே திறந்து கொள்ளும்.

புனித அகஸ்டீனிடம் யாரோ கேட்டார்களாம், ''உங்கள் வழிபாடு என்ன?'' என்று.

அதற்கு அவர், '''ஆமாம், ஆமாம், ஆமாம் இறைவனே!' - இதுதான் என் வழிபாடு, பிரார்த்தனை எல்லாம்,'' என்று சொன்னாராம்!

அவர் சொன்னது அந்த மனிதருக்கு விளங்கியதோ என்னவோ, யார் அவ்வாறு ஆமென்று சொன்னாலும் அவர் ஆத்திகர்தாம். ஆனால், கடவுள் இருக்கிறார் என்று சொல்வது மட்டும் ஆத்திகம் ஆகிவிடாது. அப்படிச் சொல்லும் தகுதி பெற்றிருக்க வேண்டும். கடவுள் இல்லையென்று சொன்னால், சொல்வதற்கு அவரிடம் இல்லை என்பது தவிர வேறெதுவும் இல்லை என்பது பொருள். அப்படிப்பட்டவர் சுருங்கிச் சுருங்கிக் கடைசியில் ஒன்றுமில்லாமல் அழிந்து போவார். ஆமென்று சொல்வதால், அந்த மனிதரை அது திறந்த மனிதராக, விரிந்த மனிதராக ஆக்கி விடுகிறது. அவர் எல்லையற்ற பரம்பொருளில் கலந்து விடவும் முடியும்.

விக்கிரக ஆராதனை உடன்பாட்டு முறை. ஆனால், நீங்கள் தியானித்து விக்கிரகத்திற்குள் செல்ல வேண்டும்; வழிபாட்டிற்குள் சென்றுவிட வேண்டும். அப்போது, விக்கிரகம் இல்லை; வழிபாடு மட்டுமே இருக்கிறது என்பது தெரியும். விக்கிரக ஆராதனை ஓர் ஆரம்பம் மட்டுமே.

வழிபாடு பரம்பொருளைவிடக் குறைவானது அன்று. இருப்பினும், ஆழ்ந்த அர்த்தத்தில், உங்களது மாற்றமே அது என்பதைக் கண்டு கொண்டு விடுவீர்கள். பரம்பொருள் ஒரு சாக்கு. அது உங்களது மாற்றத்தை எளிமைப் படுத்துகிறது. அவ்வளவுதான்.

முன்பு நான் குறிப்பிட்ட டாக்டர் ருடால்ப், ஒரு முக்கியமான கொள்கையை வகுத்திருக்கிறார். அது உங்களுக்குப் பயன்படும். உங்கள் மனதில் ஓர் எண்ணம் எழுந்தவுடன், அது, நரம்புகள், தசைநார்கள் வழியாக உடம்பு முழுதும் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது.

சான்றாக, என் மனதில், உங்களை நேசிப்பதாகவும், உங்கள் கைகளைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்றும், ஓர் எண்ணம் எழுந்தால், அது உடனே பயணம் செய்தாக வேண்டும், மூளையிலிருந்து, உடலின் அமைப்புகள் வழியாக, விரல் நுனிகள் வரை.

ஓர் எண்ணம் எழும்போது, அதற்கு நூறு அலகு சக்தி இருக்கும் என்கிறார் ருடால்ப். அது, விரல் நுனியை அடையும் போது, ஓர் அலகு சக்தி மட்டுமே மிஞ்சியிருக்குமாம். தொண்ணூற்று ஒன்பது பங்கு சக்தி பயணத்தில் செலவழிந்து போகிறது. எண்ணம் செயலாக மாற, ஏற்படும் செலவு அது.

எண்ணங்கள் எல்லாமே, உடலின் மேற்பகுதியை அடையும்போது, உயிரிழந்து விடுகின்றன. காதலியின் கையைப் பற்றும் எண்ணம்தான், உண்மையில் கையைப் பற்றும் செயலைவிட

அதிக மகிழ்ச்சி தருவதற்குக் காரணம் இதுதான். அந்தச் செயல் நிகழும்போது, நினைத்த அளவிற்கு அது நிறைவு தருவதாக இல்லை என்பதை உணர்வீர்கள். என்னதான் ஆயிற்று? செயலின் நிறைவு, எண்ணத்தின் நிறைவைவிடக் குறைவாக இருப்பதற்கு என்ன காரணம்?

உடலுறவு பற்றி நினைப்பவர் மகிழ்ச்சியில் மிதக்கிறார். ஆனால், அந்தக் காரியம் முடிந்த பிறகு மனச்சோர்வுதான் ஏற்படும்! எவ்வளவு பிரமாதமாக அதை நினைத்தார்! அப்புறம் ஏன் அப்படிச் சலிப்பு?

அந்த எண்ணம் உதித்தபோது அதற்கு நூறு பங்கு சக்தி இருந்தது. அது வெளிவட்டத்தை அடைந்தபோது, ஒரு பங்காகக் குறைந்து விட்டது. சில சமயம் ஒரு பங்கும் மிஞ்சாமல், பூச்சியமாகி விடுவதும் உண்டு; எதிர்மறையாக மாறிவிடுவதும் உண்டு!

உடல்நலம் கெட்டிருந்தாலும், உடல் வலிமை குன்றி இருந்தாலும், சக்தி விரயமாகி இருக்கும். அப்போது பயணமாகும் எண்ணம், முடிவிடத்தை அடையும்போது எதிர்மறையாகி விடவும் கூடும்!

உடல்நலம் கெட்டிருக்கும்போது காதலரின் கைப்பிடிக்க ஆசை எழலாம். ஆனால், அது செயல்படும்போது மகிழ்ச்சி இராது. அனுபவம் எதிராக மாறிவிடும். இது உண்மையாக இருக்குமானால், மனிதனுக்கு என்றுமே மகிழ்ச்சி இல்லை என்கிறார் ருடால்ப்.

ஒருவர் எண்ணம் இன்னொருவர் மனதிற்குள் நேரடியாக எட்டிக் குதிக்க முடியுமா? முடியும் என்கிறது சமயத்துறை. ருடால்ப், நூற்றுக்கணக்கான சோதனைகள் செய்து பார்த்தபின் அது முடியும் என்று கூறினார். இன்னொருவர் நடுவில் 'மீடியமாக' இருக்கத் தேவையில்லை என்கிறார்.

அதைச் செய்ய, நான் கண்களை மூடிக் கொண்டு, ஓர் எண்ணத்தை, மூன்றாம் விழியின் மையத்திற்குக் கொண்டு போய் விடுவேன். அங்கிருந்து, உங்கள் மூன்றாம் விழியின் மேல் அந்த எண்ணத்தைக் குதிக்கச் செய்து விடுவேன். 'டெலிபதி' என்னும் 'தொலைவிலுணர்தல்,' இந்தக் கலையின் அடிப்படையில்தான் அமைந்துள்ளது.

ருடால்ப், ஓர் எண்ணத்தை, ஆயிரம் மைல் தூரம் அனுப்பிக் காட்டினார்! ரஷ்யாவிலும், ஹார்வர்ட் பல்கலைக் கழகத்திலும், மற்றும் பல நாடுகளிலும் நடைபெற்ற சோதனைகள் 'தொலைவிலுணர்தல்' உண்மைதான் என்று நிரூபித்துள்ளன. இந்தச் சோதனையில், உங்கள் எண்ணத்தை மூன்றாம் விழியில் நிலைபெறச் செய்ய வேண்டும். உங்கள் எண்ணம் ஒரு சிறிய கதிரவன் போல் உங்கள் மனதில் வேகமாகச் சுழல வேண்டும்.

அந்தக் கதிரவன், உயர்சக்தியும் கூர்மையும் பெற்று விடும். அந்த எண்ணம் உடல் முழுதும் பரவிவிட அனுமதிக்கக் கூடாது. அதனால், சக்தி விரயம் ஏற்படும். அந்த எண்ணம், ஒன்றுபட்டு, ஒரு முகப்பட்டு, ஆற்றல் மிகுந்த ஒளிக்கற்றை போலக் குவிய வேண்டும்.

இனியும் இதற்குமேல் இறுகாது, கூர்மை பெறாது என்று உணரும் கணம்தான், அந்த எண்ணம் பாய்வதற்குச் சரியான நேரம். அந்தக் கணத்தில், அந்த எண்ணத்தை, மற்றவரின் மனதில் செலுத்த வேண்டும்; பாய்ச்ச வேண்டும். அந்த, மற்றவர், எவ்வளவு தொலைவில் இருந்தாலும், அவர் உங்களுடைய கற்பனைப் புலத்திற்குள் இருக்க வேண்டும். அத்துடன், உங்கள் எண்ணம், அவருடைய மூன்றாம் விழி வழியே அவர் மனதிற்குள் புகுந்து விட்டதாகக் கற்பனை செய்து கொள்ளவும் வேண்டும். இது நிகழ்ந்ததும், எண்ணப் பரிமாற்றம் ஏற்பட்டு விடும்.

இடையில் ஒருவர் ஊடகமாக இருக்கத் தேவையில்லாமல், ஒருவர் எண்ணத்தை இன்னொருவருக்கு மாற்றுவதுதான் 'டெலிபதி.' சமயத்துறை நோக்கங்களுக்காக மூன்றாம் விழி பலவிதங்களிலும் பயன்படுகிறது. மனித மனங்களுக்கு இடையில் தொடர்பு கொள்வது போலப் பிரபஞ்ச மனதுடனும் தொடர்பு கொள்ள முடியும்.

சான்றாக, மகாவீரர் சிலை முன் அமர்ந்திருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள்... மகாவீரரின் பிரக்ஞை எல்லையின்மையோடு ஒன்று கலந்தது. உங்கள் முழு ஆற்றலையும் ஒன்று திரட்டி மூன்றாம் விழி மையத்தில் நிறுத்தி, அதை மகாவீரரின் தலை மீது செலுத்தினால், உங்கள் எண்ணம், மகாவீரரின் பிரக்ஞைக்குப் பரிமாற்றம் ஆகிவிடும்.

மகாவீரருக்குப் பின் வந்தவர்களில் மிகப் பலர், இவ்வாறு பயன் பெற்றிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு, புத்தர், மகாவீரர், இயேசு போன்றவர்கள் எல்லாம் இறந்து போனவர்கள் அல்லர். இவர்களுக்கும் அவர்களுக்கும் நேரடித் தொடர்பு உண்டு.

எல்லையற்ற நிரந்தரத்திற்குள் பாய்ந்து விடவும் இந்தச் சோதனை பயன்படும். ஆனால், நிரந்தரத்தின் மூன்றாம் விழியை எங்கே போய் எப்படித் தேடுவது? எதை நோக்கி உங்கள் எண்ண ஆற்றலைப் பாய்ச்சுவது? எங்கே பரிமாற்றம் செய்வது?

ஒரு விக்கிரகத்தை ஊடகமாகக் கொண்டு தொடர்பு கொள்வதுதான் எளிய வழி. நேரடித் தொடர்பு சாத்தியமில்லை. அதுவும் செய்யலாம்தான்; ஆனால், அதற்கு வேறு ஒரு உத்தி இருக்கிறது.

விக்கிரக வழிபாடு நடத்தாத சமயங்கள் அதைப் பயன்படுத்தியிருக்கின்றன. ஆனால், அது மிகக் கடினமானது.

இஸ்லாம் சமயம் விக்கிரகங்களைப் பயன்படுத்தவில்லை. ஆனால், மசூதியே விக்கிரமாகி விட்டது. முகமதிய மகான்களின் சமாதிகள் வழிபடப்படுகின்றன. இன்றும்கூட, உலகின் எந்தப் பகுதி முகமதியரும் தம் தொழுகையை நடத்தும்போது, அவர் 'காபா'வின் திசை நோக்கியே அமர்கிறார்.

அதைப் பற்றி அறிந்தவர், 'காபா'வை ஊடகமாகப் பயன்படுத்தி, அதன் மூலம் மூன்றாம் விழியாற்றலை அனுப்ப முடியும். அதன் இரகசியப் பொருள் அறியாதவர், சும்மா 'காபா'வை நோக்கி நிற்கத்தான் முடியும்.

உங்கள் ஆற்றலைக் 'காபா'வின் மீது செலுத்துகிறீர்களா, அல்லது விக்கிரகத்தின் மீது செலுத்துகிறீர்களா என்பது முக்கியமல்ல. அதில் வேறுபாடு எதுவும் இல்லை. ஒரு சிலையை நீங்கள் முத்தமிட்டாலும், 'காபா' கல்லின் காலடியில் விழுந்தாலும், எல்லாம் ஒன்றுதான்.

முகம்மது நபியின் புகைப்படமும் இல்லை, சிலையும் இல்லை. அதனால் என்ன, ஏதாவதொன்று அடையாளம் ஆகிவிடுகிறது. முகமதிய மகான்களின் சமாதிகள் மீது பூச்சொரிவதில்லையா? என்றாலும் முகம்மது நபிக்குச் சமமான ஆற்றலுள்ள ஒரு மாற்றைக் கண்டு பிடிப்பது முடியாத காரியம்.

கண்ணன், தன் உருவச் சிலையின் பாதங்களில் வணங்குமாறு, தன் பக்தர்களுக்கு வழிகாட்டுகிறான். அவர்களுடைய சிக்கல்கள் அவனுக்குத் தெரியும். அவன் தீர்க்கதரிசி. விக்கிரகத்தை விட்டொழிப்பது எவ்வளவு சிரமம் என்பது அவனுக்குத் தெரியும்.

நிரந்தரத்திற்குள் ஒரேயடியாகத் தாவிக் குதிப்பது மிகக் கடினம். பத்தில் ஒருவருக்குத்தான் அது சாத்தியம். மற்றவர்கள் என்னாவது? கண்ணன் சிலை கிடைக்காவிட்டால் ஏதாவதொரு சாதாரணச் சிலையைப் பயன்படுத்தலாம்.

முகம்மது நபியின் சிலையை உபயோகிக்கக் கூடாது என்று தடை விதித்ததால் ஏற்பட்ட விளைவுகள் என்ன? ஒரு முகமதிய பக்கிரி இறந்திருந்தால், அவருடைய சமாதியைச் சூழ்ந்து நின்று வணங்குகிறார்கள். இதில் தவறு எதுவும் இல்லை. மனித இயல்புதான் அது. மனிதனுடைய உள் இயல்பே அப்படிச் செய்யத் தூண்டுகிறது.

முகம்மது நபியின் உருவச் சிலை செய்யக் கூடியதை, ஒரு சித்தரின் சமாதி செய்து விடாது. உருவ வழிபாடு கூடாது என்று முகம்மது நபி கூறியது சரிதான். ஆனால், அது, இலட்சத்தில் ஒருவருக்கு. ஆனால், அப்படிப்பட்ட மனிதருக்கு அடைய வேண்டியது என எதுவுமே இருக்காது. அவருக்கு, விக்கிரகமோ, 'காபா'வோ, குரானோ, கீதையோ தேவையே இல்லை.

அப்படிப்பட்டவருக்கு முகம்மது, கண்ணன், புத்தர், யாருமே வேண்டாம். எதுவுமே அவருக்குத் தேவையற்றது - எதையும் நேரடியாகப் பெற வல்லவர் அவர். ஆனால், மற்றவர்கள் நிலை என்னாவது?

மற்றவர்களுக்கு எல்லாமே வேண்டும். ஏதாவது தேவை என்றால், அதில் சிறந்ததே வேண்டும். ஒரு சித்தரின் சமாதியையோ, ஒழுக்க சீலரான கிராமவாசியின் சிலையையோ வழிபடுவதைவிட, புத்தர், கண்ணன், முகம்மதுவின் சிலைகளை வழிபடுவது மேலானது.

கடற்பயணம் செல்லும்போது, உள்ளூரில் செய்யப்பட்ட சின்னப் படகில் போவது ஆபத்தானது. பெரிய பயணிகள் கப்பல்தான் பாதுகாப்பானது. புத்தர் கப்பல் கிடைக்கும்போது, சித்தர் தந்த தாயத்தையும், சிலரின் நோய்களைக் குணப்படுத்திய மனிதரின் சமாதியையும் நம்பிச் செல்வது மடத்தனம் அல்லவா? புத்தர் சிலை இல்லையென்றால், ஒரு மாற்றைத் தேடுவதில் தவறில்லை; அது மனித இயல்பும்கூட.

விக்கிரக ஆராதனையை மறுத்தவர்கள் பெரிய விஷயம் சொன்னது போல, மேலோட்டமாகத் தோன்றும். விக்கிரக வழிபாடு செய்து வந்தவர்களுக்கே, ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் அனுபவம் உண்டு. மனிதனுக்கு ஒரு விக்கிரகம் தேவை என்பது அவர்களுக்குத் தெரியும். உருவிலாப் பொருளை நேரடியாக அடைய பெரும்பாலானவர்களால் முடியாது. வழியில் கொஞ்சம் ஓய்வு தேவை அவர்களுக்கு! அந்த இடம் மிக அழகாகவும், நிம்மதியாகவும் இருக்க வேண்டும்!

ஏதாவது ஒரு வகையில் விக்கிரக வழிபாடு நடத்தாத சமுதாயமே உலகில் இல்லை. மனிதனின் உள்ளார்ந்த தேவை அது. தனி மனிதனுக்கு மட்டுமல்ல, மனித சமுதாயம் முழுவதற்குமேதான். இந்த நூற்றாண்டில், அல்லது இருநூறு ஆண்டுகளில்தான், உருவ வழிபாட்டு முறை சிதறடிக்கப்பட்டது.

விக்கிரகங்கள் வீண்சுமை, வெறும் கற்கள், அவை தேவையில்லை என்று சிலர் வாதிடுகிறார்கள். ஆனால், அவ்வகை வழிபாட்டிற்குப் பின்னால் உள்ள பொருளைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். புத்திசாலி, 'விக்கிரகம் வேண்டாம்,' என்று சொல்வான் என்று, நான் நினைக்கவில்லை.

விக்கிரக ஆராதனைக்குப் பின்னால் உள்ள அறிவியல் அம்சம் விளங்காவிட்டால், விக்கிரகங்கள் இல்லாமற் போவதே நல்லது. அவை பாதுகாக்கப்பட வேண்டியதே இல்லை. அவை தாமாகவே காணாமல் போய்விடவும் கூடும்.

இன்று மக்கள், புரிதல் எதுவும் இல்லாமல், விக்கிரகங்கள், சிலைகள் முன்னால் தலை தாழ்த்தி வணங்குகிறார்கள். அதில் இதயக் கலப்பே இல்லை. அது, இன்னும் இருந்துவரும் ஒரு பழக்கம் மட்டுமே. இப்படிப்பட்டவர்களே விக்கிரகங்களின் அழிவிற்குக் காரணம். தினசரி அப்படி வணங்கியும் அவர்கள் வாழ்வில் எந்த மாற்றமும் நிகழ்வதில்லை. அதனால், விக்கிரக வழிபாடு பயனற்றதாகி விடுகிறது.

நாற்பது ஆண்டுகள் தொடர்ந்து விக்கிரக ஆராதனை செய்து வந்தும், ஒருவருக்கு எதுவுமே நிகழாமற் போய்விட்டால் கூட... அவர் தம் மகனையும் கோயிலுக்கு இழுக்கிறார். 'இந்த நூற்றாண்டுகளில் உங்களுக்கு என்ன கிடைத்தது அப்பா? என்னை எதற்காக வற்புறுத்துகிறீர்கள்?' என்று அவன் கேட்டால், அவரிடம் அதற்குப் பதில் இல்லை. அந்தத் தந்தைக்கு ஏதாவது பலன் கிடைத்திருந்தால், அந்தக் கேள்விக்கே இடமில்லாமல் போயிருக்கும்.

ஒரு சிறிய 'ஈசாப்' கதை...

ஒரு காட்டில், சிங்கம் ஒன்று இருந்தது. அது ஒவ்வொரு விலங்கிடமும், தான் காட்டுக்கு அரசனா இல்லையா என்று கேட்க ஆரம்பித்தது.

முதலில், எதிர்ப்பட்ட கரடியிடம் கேட்டது. ''நிச்சயமாக நீங்கள்தான் காட்டரசர்,'' என்றது கரடி. பிறகு சிறுத்தையிடம் கேட்டது. அது, சற்றுத் தயங்கிய பின், ''நீங்கள் அரசர்தான்,'' என்று கூறிச் சென்றது.

அப்புறம், சிங்கம், எதிரில் வந்த ஒரு யானையிடம் கேட்டது. அந்த யானை, தன் துதிக்கையால் சிங்கத்தை வாரிச் சுருட்டி எடுத்து தூரத்தில் வீசியது!

கீழே விழ, விழ, சிங்கம், ''பெரியவரே, உங்களுக்குப் பதில் தெரியாவிட்டால், சொல்லியிருக்கலாமே. நானும் பேசாமல் என் பாட்டுக்குப் போயிருப்பேனே! இவ்வளவு தூரம் தூக்கி எறியவேண்டுமா என்ன?'' என்றது!

ஒரு சிறுத்தையைத் தூக்கி எறியும் சக்தி படைத்த யானைக்கு, பதில் சொல்லத் தேவையில்லை.

விக்கிரக ஆராதனை செய்து வருபவர், வழிபாடு என்றால் என்ன என்பது தமக்குத் தெரியுமா இல்லையா என்று பதில் சொல்ல

வேண்டியதில்லை. அவரது வாழ்வே விடையாகி விடும். அவரது விழிகள், அவர் அமரும் விதம், நிற்கும் விதம் எல்லாமே பதில் ஆகிவிடும்.

வழிபாடு என்னவென்று அறியாதவர்கள், ஆனால், தொடர்ந்து விக்கிரக ஆராதனை செய்து கொண்டிருந்தால், விக்கிரகங்களின் மேல் உள்ள ஆர்வம் குறைவதற்குக் காரணமாகி விடுவார்கள். அவர்களுக்கு உண்மையான வழிபாடு தெரியாது. ஆனால் அவர்கள் கையில் விக்கிரகம் இருக்கும்.

விக்கிரக வழிபாடு பற்றி உங்களிடம் நான் பேச வந்ததற்கு இதுதான் காரணம். விக்கிரகம் என்பது, ஒட்டுமொத்தமான உள் மாற்றத்திற்கு உதவும் ஒருமுறை என்பதை, இதனால் நீங்கள் புரிந்து கொள்ளலாம். விக்கிரகம் ஒரு சாக்கு. அவ்வளவுதான்.

உங்கள் சட்டையைச் சுவரிலுள்ள ஓர் முளையில் மாட்டுவது போன்றது அது. முளையின் வேலை சட்டையைத் தாங்குவது. முளை இல்லை யென்றால், சட்டையைக் கதவின் மேலே தொங்க விடுவோம்; அல்லது நாற்காலியின் மீது போட்டு விடுவோம்; அல்லது வேறு எங்காவது தொங்க விடுவோம்.

சட்டையை மாட்டியவுடனே, முளை கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அதைப் பற்றிக் கேள்வியும் கேட்க மாட்டீர்கள்.

விக்கிரகம், சுவரிலுள்ள வெறும் முளை அல்லது ஆணி. உண்மையான நோக்கம் என்னவோ வழிபாடுதான்.

விக்கிரக வழிபாடு செய்யும்போது, நீங்கள் விக்கிரகத்தைப் பார்ப்பதில்லை - அதாவது நீங்கள் சட்டையைப் பார்ப்பதில்லை. முளையைத்தான் பார்க்கிறீர்கள். அந்த ஆணி சுவரைக் கெடுத்து விட்டதாக நினைக்கிறீர்கள். அப்புறம் அது எதற்கு?

உங்களுக்கு வழிபாடு பற்றி எதுவுமே தெரியாது. ஆனால், விக்கிரகம் மட்டும் மிஞ்சியிருக்கிறது பரிதாபமாய், தோற்றுப்போய்!

அது தனியே நின்று தாக்குப் பிடிக்காது - வழிபாட்டின் உயிர்ச் சக்திதான் அதைக் காப்பாற்ற முடியும். அதனால்தான், நான் உங்களிடம் வழிபாடு பற்றிப் பேசினேன்.



அனேகமாக, மிகப் பழைய விஷயம் சோதிடமாகத்தான் இருக்க வேண்டும். ஒரு வகையில் அதிகம் புறக் கணிக்கப்பட்டதும் சோதிடம்தான்.

மனிதகுல வரலாற்றை ஆராய்ந்தால், சோதிடம் மிக நீண்ட காலத்திற்கு முன்பே இருந்து வந்தது தெரியும். இயேசுவுக்கு இருபத்தி ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சுமேரிய நாகரிகத்தின் புதை பொருள்களிலிருந்து கிடைத்துள்ள பழைய எலும்புகளின் மேல், சோதிடக் குறியீடுகள் பொறிக்கப்பட்டுள்ளன. அதில், நிலாவின் இயக்கம் பற்றிய வரைகோடும் காணப்படுகிறது!

ஆனால், இந்தியாவில், இது இன்னும் பழையது. ரிக் வேதத்தில் ஒரு விண்மீன் கூட்டம் பற்றிய குறிப்பு உள்ளது. அப்படிப்பட்ட விண்மீன்களின் கூட்டமைப்பு தொண்ணூற்று ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்புதான் நிகழ்ந்தது.

இதனால்தான், பாலகங்காதர லோக மான்ய திலகர், வேதங்கள், மிகப் பழைமையானவை என்று குறிப்பிடுகிறார். அந்த விண்மீன்களின் சங்கமம் தொண்ணூற்று ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மட்டுமே நிகழ்ந்திருப்பதால், வேதங்கள் அவ்வளவு புராதனமானவை யாகின்றன.

எப்போதோ நிகழ்ந்ததைப் பின்னால் வந்தவர்கள் எழுதி வைத்திருக்கலாம் என்பதும் சரியல்ல. பின் சந்ததியார்கள் அப்படிப்பட்ட விஷயங்களைக் கணிக்க இயலாதவர்கள். ஆனால், இப்போது அந்த வசதி நமக்கு இருக்கிறது. குறிப்பிட்ட விண்மீன், குறிப்பிட்ட முற்காலத்தில் எங்கே இருந்தது என்பதை நம்மால் கணித்துச் சொல்லிவிட முடியும்.

சோதிடத்தின் ஆழ்ந்த விதிகள் இந்தியாவில்தான் கண்டு பிடிக்கப்பட்டன. சொல்லப் போனால், சோதிடத்தால்தான் கணிதமே பிறந்தது. சோதிடம் கணிக்கவே, கணக்கு முதலில் தேவைப்பட்டது.

எண்களைக் கண்டு பிடித்தது இந்தியா - ஒன்றிலிருந்து பத்து வரை, உலக மொழிகளில் இருப்பவை எல்லாம் இந்திய வேர்களிலிருந்து முளைத்தவை. நமது தசாம்சத்தை உலகம் முழுவதும் ஏற்றுக் கொண்டுள்ளது. தசாம்சம் இந்தியாவில்தான் பிறந்தது. பிறகு மெதுவாக உலகம் முழுவதும் பரவிவிட்டது.

ஆங்கிலத்தின் 'நைன்' என்ற சொல், சமஸ்கிருதத்தின் 'நவ' என்ற சொல்லிலிருந்து பிறந்தது. 'எய்ட்' என்ற ஆங்கிலச் சொல், 'ஆட்' என்ற வடசொல்லிலிருந்து பிறந்தது. இந்தியச் சோதிடத்தின் செல்வாக்கினால்தான், ஒன்று முதல் ஒன்பது வரை உள்ள எண்கள், உலக மொழிகளில் எல்லாம் பரவின.

சுமேரியரின் சோதிட அறிவு, இந்தியாவிலிருந்து சென்றதுதான். இயேசுவுக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன், சுமேரியர்கள், மேலை உலகிற்காக, தம் சோதிட வாயிலைத் திறந்து வைத்தார்கள்.

விண்மீன் தொகுதி பற்றிய விஞ்ஞானத்திற்கு அடித்தளம் இட்டவர்களும் சுமேரியர்களே. அவர்கள் எழுநூறு அடி உயரமுள்ள பிரம்மாண்டமான கோபுரம் ஒன்றைக் கட்டியிருந்தார்கள். சுமேரியக் குருமார்கள் அதன் உச்சியிலிருந்து இருபத்து நான்கு மணி நேரமும் வானத்தை ஆராய்ந்து கொண்டிருந்தார்கள். சுமேரிய மெய்ஞ்ஞானிகள், மனித குலத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளுக் கெல்லாம் காரணம் விண்மீன்கள்தாம் என்பதைக் கண்டுபிடித்தார்கள். விளைவுகளுக்கு மூல காரணம் விண்மீன்களே.

இயேசுவுக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, தொற்று நோய்கள் பரவி எங்கும் நலம் கெட்டால் அதற்குக் காரணம் கிரகங்களின் நிலைகளே என்று சுமேரியாவில் கருதப்பட்டது. இந்தக் கருத்து விஞ்ஞான ரீதியானது என்று இன்று கருதப்படுகிறது. சோதிடத்தின் விஞ்ஞானத்தை உணர்ந்தவர்கள், மனித குல வரலாற்றை சுமேரியர்களே ஆரம்பித்து வைத்தார்கள் என்று சொல்கிறார்.

ஒவ்வொரு பதினோரு ஆண்டுகளுக்கும் ஒருமுறை கதிரவனில் பெரிய வெடிப்புகள் உண்டாகின்றன என்று தீவிர ஆராய்ச்சிக்குப் பின் ரஷ்ய விஞ்ஞானி சிஜேவ்ஸ்கி, 1920-ல் கண்டு பிடித்தார். அந்த அணுவெடிப்புகள் கதிரவனில் ஏற்படும் போதெல்லாம் பூமியில் போர்களும் புரட்சிகளும் ஏற்படுகின்றன என்று அவர் கூறினார். அவரது கருத்துப்படி, கடந்த எழுநூறு ஆண்டுகளில், கதிரவனில் அந்த வெடிப்புகள் ஏற்பட்ட போதெல்லாம், பூமியில் பெரும் அழிவுகள் நிகழ்ந்திருக்கின்றன.

சிஜேவ்ஸ்கியின் கண்டு பிடிப்புகள் மறுக்க முடியாதவை. ஆனால், அது மார்க்சிய சித்தாந்தத்திற்கு மாறானது. அதனால், 1920ல் ஸ்டாலின் அவரைப் பிடித்துச் சிறையில் தள்ளினார். ஸ்டாலின் இறந்த பிறகுதான் அவருக்கு விடுதலை கிடைத்தது. பூமியில் ஏற்படும் புரட்சிகளுக்குக் காரணம் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளே என்பது மார்க்சியம். ஆனால், சிஜேவ்ஸ்கியின் கருத்து இதற்கு மாறாக இருந்தது.

மனித வாழ்விற்கும், அவர்களின் வறுமைக்கும் செல்வத்திற்கும் கதிரவனில் ஏற்படும் வெடிப்புகளுக்கும் எப்படித் தொடர்பு இருக்க முடியும்? சிஜேவ்ஸ்கியின் கணிப்பு உண்மையானது என்றால் மார்க்சியம் தவிடுபொடியாகி விடும். அப்புறம், புரட்சிகளைப் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளோடும், வர்க்க முரண்பாடுகளோடும் தொடர்புபடுத்த முடியாமல் போய்விடும்; புரட்சிகளுக்கு விளக்கம் சோதிடம்தான் கொடுக்க வேண்டி வந்துவிடும்.

சிஜேவ்ஸ்கியின் கருத்து, தவறானது என்று யாரும் மறுத்து நிரூபிக்கவில்லை. அவரது எழுநூறு ஆண்டுகள் பற்றிய கணிப்பு சரியாக இருந்தது. அவற்றிற்கும் கதிரவனுக்குமான தொடர்பும், பெரும் பகுதி சரியாக இருந்தது. அதனால், அவரை விஞ்ஞான ரீதியாக மறுக்க முடியவில்லை. அதனால், அவரை சைபீரியாவுக்கு அனுப்பி விட்டார்கள். அது சுலபமான காரியம்தானே!

ஸ்டாலின் இறந்த பிறகு குருசேவ் அவரை விடுதலை செய்தார். அந்த மனிதரின் ஐம்பது மதிப்புமிக்க ஆண்டுகள் சைபீரியாவில் வீணாயின. விடுதலையான பிறகு அவர் நான்கு மாதமோ ஆறுமாதமோதான் வாழ்ந்திருந்தார். அந்தக் குறுகிய கால கட்டத்தில், தம் கருத்தை நன்றாக நிறுவுவதற்கு அவர் மேலும் பல ஆதாரங்களைத் திரட்டினார். கொள்ளை நோய்கள் பரவுவதற்குக் காரணம் சூரிய கிரகணம் என்று அவர் கூறினார்.

கதிரவன் ஓர் எரியும் நெருப்புக் கோளம் என்றுதான் பொதுவாக நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், அது, எல்லையற்ற ஆற்றலும், துடிப்பும், வெறியும் மிக்க உயிருள்ள பிராணி! அது அடிக்கடி தன் மனநிலையை மாற்றிக் கொள்கிறது! சிறிதளவு அதன் மனநிலை மாறினாலும், பூமியின் உயிர்களை அது பாதிக்கிறது!

கதிரவனில் எதுவும் ஏற்படாமல், பூமியில் எந்த மாற்றமும் நிகழ்வதில்லை. சூரிய கிரகணம் ஏற்பட்டால், கானகப் பறவைகள், இருபத்து நான்கு மணிநேரத்திற்கு முன்பே வாயடங்கிப் போய் விடுகின்றன! பூமி முழுவதுமே அமைதியாகி விடுகிறது. பறவைகள் பாடுவதை நிறுத்தி விடுகின்றன; பயம், சந்தேகம் ஆகியவற்றால் நடுநடுங்கி மௌனம் சாதிக்கின்றன.

குரங்குகள் மரங்களை விட்டிறங்கித் தரைக்கு வந்து, கும்பலாய்ப் பாதுகாப்பாய் ஒன்றுகூடி அமர்ந்து விடுகின்றன. எப்போதும் சேட்டையும், கூச்சலுமாய்ப் பரபரப்பாய் இருக்கும் அவை, கிரகண காலத்தில் கடைப்பிடிக்கும் அமைதியைப்போல், தியானம் செய்பவர்களும் கடைப்பிடிக்க மாட்டார்கள்!

இதையெல்லாம் சிஜேவ்ஸ்கி விளக்கினாலும், இது சுமேரியாவில்தான் முதலில் தோன்றியது. பிறகு, பராசெல்சஸ் என்ற சுவிஸ் மருத்துவர் மேலும் பல உண்மைகளைக் கண்டறிந்தார். ஈடு இணையற்ற ஓர் உண்மையையும் இவர் கண்டறிந்தார் - அந்த உண்மை, இன்றில்லா விட்டாலும் நாளை, மருத்துவ விஞ்ஞானத் துறையையே மாற்றிவிடும்.

சோதிடம் ஒரு புறக்கணிக்கப்பட்ட விஷயமாக இருந்து வருவதால், அந்தக் கருத்து மதிப்பு மிக்கதாக இதுவரை கருதப்படவில்லை. சோதிடம் மிகப் புராதனமானது. அதே சமயம் மிகவும் புறக்கணிக்கப்பட்டதும், மதிப்பு மிக்கதும் ஆகும்.

சென்ற ஆண்டு, பிரான்ஸ் நாட்டில், சோதிடத்தை நம்புகிறவர்கள் நாற்பத்தி ஏழு சதவிகிதம் பேராக இருந்தார்கள். அதை அவர்கள்

ஒரு விஞ்ஞானமாகவே கருதினார்கள். அமெரிக்காவில், ஐயாயிரம் முன்னணி சோதிடர்கள், இரவும் பகலுமாகப் பணியாற்றி வருகிறார்கள், இன்று. தம் வேலைகளை முடிக்க முடியாத அளவுக்கு, மிக அதிகமான பேர் சோதிடம் பார்க்க அவர்களை அணுகிக் கொண்டிருக்கிறார்கள். ஆண்டுதோறும் பல லட்சம் டாலர்கள் அவர்களுக்கு ஊதியமாகக் கிடைத்து வருகிறது.

உலக அளவில், எழுபத்தெட்டு சதவிகிதம் மக்கள் சோதிடத்தை நம்புகிறார்கள். இவர்கள் பொது மக்கள். சிந்தனையாளர்களும், அறிவுஜீவிகளும் மிக எச்சரிக்கையோடு சோதிடத்தைக் கவனித்து வருகிறார்கள்.

''பல்கலைக் கழகங்கள், கடந்த முன்னூறு ஆண்டுகளாக, சோதிடத்திற்கு வாயில் அடைத்துவிட்டன. வரும் முப்பது ஆண்டுகளில் கதவுகள் மீண்டும் திறக்கும். சோதிடம் உள்ளே புகும்,'' என்று சி.ஜி.யுங் கூறினார்.

காரணம், சோதிடம் சில பிரச்சனைகளை எழுப்பியது. அது நிரூபிக்கப்படவில்லை. இப்போது நிரூபணமாகும் வாய்ப்பு ஏற்பட்டு விட்டது.

பராசெல்சஸ் ஒன்றைக் கண்டுபிடித்தார். கிரகங்களின் மாறுபாட்டால் ஒரு மனிதனின் உடல்நிலை கெடுகிறது என்றார். அவன் பிறந்த நட்சத்திரத்திற்கும் மற்றவற்றிற்கும் ஏற்படும் மாறுபாட்டால் அது நிகழ்கிறது என்றார்.

இயேசுவுக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன், பராசெல்சுக்கும் முன், கிரகங்களின் ஒத்திசைவு பற்றி, மதிப்புமிக்க கோட்பாடு ஒன்றைக் கண்டுபிடித்தார் பிதகோரஸ். இந்தியா, எகிப்து நாடுகளில் சுற்றுப்பயணம் செய்துவிட்டு கிரீஸ் திரும்பிய பிறகுதான் அந்தக் கோட்பாட்டை அவர் வெளியிட்டார்.

அந்தக் கால கட்டத்தில், இந்தியா, புத்தர், மகாவீரர் போதனைகளில் மூழ்கியிருந்தது. அவர் நாடு திரும்பிய பின் எழுதியவற்றில், பௌத்தர், சமணத் துறவிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சமண முனிவர்களை அவர், 'ஜைனோ சோபிஸ்ட்ஸ்' என்று குறிப்பிட்டிருக்கிறார். அவர்கள் நிர்வாணமாக நடமாடியதையும் குறித்துள்ளார்.

நட்சத்திரம், கிரகம், துணைக்கோள் - ஒவ்வொன்றின் இயக்கமும், தனித்தனி அதிர்வுகளை ஏற்படுத்தி விடுவதாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஒவ்வொரு விண்மீனுக்கும் வேறு வேறு இயக்கம், வேறுவேறு அதிர்வு.

எல்லா விண்மீன்களின் ஒட்டுமொத்தமான சங்கீத ஒத்திசைவைத்தான், பிரபஞ்ச ஒத்திசைவு என்கிறோம்.

புத்தம் புதிதாகப் பிறக்கும் குழந்தையின் புத்தம் புதிய மனதில், அந்த வேளையில் இயங்கும் ஒரு விண்மீனின் அதிர்வு அழுத்தமாகப் பதிந்து விடுகிறது. வாழ்நாள் முழுதும், அதனுடைய உடல்நலமும், சீர்கேடும், அந்த விண்மீனின் அதிர்வுகளால்தான் உண்டாகிறது.

நீங்கள் பிறக்கும்போது, உள்ள விண்மீனின் அதிர்வுடன் உங்களுக்கு ஒத்திசைவு ஏற்பட்டால், நீங்கள் உடல் நலத்தோடு வாழ்வீர்கள். உங்கள் ஒத்திசைவு பிளவுபட்டால், உடல்நலம் கெடும்.

இந்தத் துறையில் பராசெல்சஸ் செய்த பணி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு நோயாளியின் ஜாதகக் குறிப்பைப் பார்க்காமல், அவர் மருந்து கொடுக்கவில்லை. அதில், நோய் குணமானது கண்டு மற்ற மருத்துவர்கள் குழப்பமடைந்தார்கள். ஏனென்றால், அந்த நோயாளிகள் மற்ற மருத்துவர்களால் முடியாது என்று கைவிடப்பட்டவர்கள்.

''ஒருவரது 'ஜன்ம நட்சத்திரம்' இன்னதென்று தெரியாமல், அவரது உடலின் உள் ஒத்திசைவை அறிய முடியாது. அது தெரியாமல், ஒருவரைக் குணப்படுத்துவது எப்படி?'' என்று அவர் கூறுவது வழக்கம்.

'உடல்நலம்' என்றால் என்ன? இதை நாம், தெளிவாகப் புரிந்து கொள்ள முயல வேண்டும். உடல்நலம் என்பதற்கு என்ன பொருள் என்று மருத்துவரைக் கேட்டால், அவர், 'நோயில்லாமைதான் உடல்நலம்' - என்றுதான் பொதுவாகச் சொல்வார்.

இது எதிர்மறை இலக்கணம். நோயின் அடிப்படையில் உடல்நலத்தை நாம் கணிப்பது துரதிஷ்டவசமானது. உடல்நலம் என்பது உடன்பாடான அம்சம்; உடன்பாடான நிலைமை. நோய், எதிர்மறையான அம்சம். உடல்நலம், நமது இயல்பு. இயற்கையின் மீது தொடுக்கப்படும் தாக்குதல்தான் நோய். அப்படியிருக்க, நோயின் அடிப்படையில், ஆரோக்கியத்தைக் கணிப்பது வினோதமானது! விருந்தினரை வைத்தா வீட்டுக்காரரைக் கணிப்பது? வினோதமல்லவா அது?

உடல் நலம் நம்முடன் இயல்பாய் இருப்பது. நோய், எப்போதாவது வந்து போவது. பிறந்த நாள் தொட்டு நம்முடன் வந்து கொண்டே இருப்பது உடல்நலம். நோய், மேலோட்டமான விவகாரம். ஆனால், மருத்துவரைக் கேட்டால், 'நோயில்லாதபோது இருப்பதுவே உடல்நலம்' என்றுதான் சொல்வார்.

இவ்வகை விளக்கம் தவறானது என்று பராசெல்சஸ் கூறுவது வழக்கம் - உடல்நல வரையறை உடன்பாட்டு முறையில் அமைந்திருக்க வேண்டும். உடன்பாட்டு முறையை நாம் எட்டுவது எவ்வாறு?

''உங்கள் உடலின் உள்ளார்ந்த ஒத்திசைவை உணர்ந்தால் மட்டுமே நோய் போக்க முடியும். ஏனென்றால், அந்த உள்ளார்ந்த ஒத்திசைவே உடல்நலத்தின் அடிப்படை. ஆனால், ஒரு நோயிலிருந்து விடுபட்டவுடன், இன்னொரு நோய் வந்து பற்றிக் கொள்கிறது. காரணம், உள்ளார்ந்த ஒத்திசைவை ஒழுங்கு படுத்த எதுவுமே செய்யப்படுவதில்லை. அதை முதலில் சரி செய்ய வேண்டும்'' என்கிறார் பராசெல்ஸ்.

ஐநூறு ஆண்டுகள் கடந்துவிட்டன. அவரது கண்டு பிடிப்புகள் மறதிக்குள் விழுந்து மறந்து போய்விட்டது. ஆனால், கடந்த இருபது ஆண்டுகளில் சோதிடம் மறுபடியும் புத்துயிர் பெறத் தொடங்கியுள்ளது. இந்தக் கால கட்டத்தில் ஒரு புதிய விஞ்ஞானம் பிறந்திருக்கிறது.

இந்தப் புதிய விஞ்ஞானத்தைக் கொஞ்சமாய் உங்களுக்கு விளக்குகிறேன். அப்போதுதான், சோதிடத்தின் பழைய அறிவியல் அம்சத்தை எளிதாகப் புரிந்து கொள்ள முடியும்.

1950ல் 'பிரபஞ்ச இரசாயனம்' என்று, ஒரு புதிய விஞ்ஞானம் பிறந்தது. இதைக் கண்டு பிடித்தவர், ஜியார்ஜி ஜியார்டி. இந்த நூற்றாண்டின் மிக முக்கியத்துவம் வாய்ந்த மனிதர் அவர். எண்ணற்ற ஆராய்ச்சிகள் செய்து பார்த்தபின், அவர், ''இந்தப் பிரபஞ்சம், உறுப்புகள் ஒத்திசைவு கொண்டு இயங்கும் ஓர் அமைப்பு,'' என்று சொன்னார். இந்தப் பிரபஞ்சமே ஓர் உடல்.

என் விரலில் அடிபட்டால் முழு உடல் பாதிக்கப்படுகிறது. உடல் என்றால், எதுவும் தனியாக அல்லாமல், எல்லா உறுப்புகளும் ஒன்றிணைந்த முழு உடல் என்று பொருள். கை மட்டும் தனியாக அல்ல.

கண்ணில் வலி இருந்தால், என் கால் விரலும் இதை உணரும். காலில் அடிபட்டால், தகவல் இதயத்திற்குப் போகிறது. மனநிலை கெட்டால், என் உடல் முழுதுமே பாதிக்கப்படுகிறது. என் உடல் முழுவதும் அழிந்து விட்டால், அப்புறம் எங்கே இருப்பது என்று தடுமாறுகிறது மனம். உடல் என்றும் உறுப்புகளின் ஒன்றிணைப்பு.

எந்த ஒரு சிறு பகுதியைத் தொட்டாலும், முழு உடலும் அந்த அதிர்வுகளை உணர்கிறது; எல்லாப் பகுதிகளும் பாதிக்கப்படுகின்றன.

'பிரபஞ்சமே ஓர் உடல்,' என்று பிரபஞ்ச இரசாயனம் கூறுகிறது. இதில், தனித்து நிற்பது எதுவும் இல்லை. எல்லாம் ஒன்றிணைந்து இயங்கிக் கொண்டிருப்பவை.

ஒரு விண்மீன் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் சரி, அது நிலை மாறும்போது, நமது இதயத்துடிப்பும் மாறுகிறது. கதிரவன் எவ்வளவோ தூரத்தில்தான் இருக்கிறது. அது அமைதி குலையும்போது, நமது இரத்த ஓட்டம் பாதிப்பிற்குள்ளாகி விடுகிறது.

பதினோரு ஆண்டுகளுக்கு ஒருமுறை, கதிரவனில் அணுப்புயல் தோன்றி வருகிறது. சென்றமுறை அணுப்புயல் அங்கே வீசியபோது, பெரிய கொந்தளிப்புகள் விளைந்தபோது, 'டமாட்டோ' என்ற ஜப்பானிய மருத்துவர் வியப்பான ஒன்றைக் கண்டுபிடித்தார்.

அவர், இருபது ஆண்டுக்காலமாக, பெண்களின் இரத்த ஓட்டம் பற்றி ஆராய்ந்து வந்தவர். ஆண் உடலின் குருதியில் இல்லாத ஒன்று பெண் உடலில் இருக்கின்றது! மாத விலக்கின்போது, பெண் இரத்தம் மென்மை அடைகிறது. ஆனால், ஆணுடல் இரத்தம் மாறாமல் அப்படியே இருக்கிறது.

கர்ப்ப காலத்திலும் பெண்ணுடல் இரத்தம் மென்மை அடைந்து விடுகிறது. ஆண், பெண் உடல்களின் குருதி வேறுபாட்டைக் கண்டு பிடித்ததுதான் 'டமாட்டோ'வின் தனிச்சிறப்பு.

ஆனால், கதிரவனில் அணுப்புயல் உக்கிரமாக வீசும்போது, பூமியின் ஆண் உடலின் இரத்தமும் மென்மை அடைந்து விடுகிறது. இது ஒரு அதிசயமான அம்சம். இதற்குமுன் இந்த விஷயம் யாருக்குமே தெரியாது. இரத்தமே பாதிக்கப்படுகிறது என்றால், மற்ற எல்லாமே பாதிப்படையத்தானே செய்யும்?

அமெரிக்கச் சிந்தனையாளர் ஃபிராங்க் பிரவுன், விண்வெளிப் பயணிகளின் பாதுகாப்பு, வசதிகள் பற்றிய துறையில் பணியாற்றி வந்தவர். விண்வெளிப் பயணிகள், தம் பயண காலத்தில் சிரமமில்லாமல் இருப்பதற்காகத் தம் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவழித்தவர் அவர்.

அதில் மிகச் சிரமமானது, பூமியை விட்டு விலகும் போது ஏற்படும் பாதிப்பு. எந்த ளவு அணுக்கதிர் வீச்சு அவர்களைப் பாதிக்கும் என்பது யாருக்குமே தெரிந்திருக்கவில்லை.

அரிஸ்டாட்டிலுக்குப் பின் இரண்டாயிரம் ஆண்டுகளாக, அண்டவெளியில் எதுவுமே இல்லை என்றுதான், மேலை உலகம் நினைத்திருந்தது. பூமிக்கு மேல் இருநூறு மைல்கள் தாண்டி சுற்றுச்சூழல் முடிந்து, சூன்யப் பிரதேசம் ஆரம்பமாகி விடுகிறது என்று கருதப்பட்டது.

ஆனால், இது தவறு என்று நிரூபிக்கப்பட்டது. பிரபஞ்சவெளி சூன்யப் பிரதேசம் அல்ல; ஒன்றுமில்லாத இடம் அல்ல. உயிர்த்துடிப்புடன் இருப்பது அது. எத்தனையோ பொருள்கள் நிறைந்திருக்கும் இடம் அது.

பூமிக்கு மேல், இருநூறு மைல் தூரத்திற்குக் கவசம் போல் அமைந்திருக்கும் பகுதி, நமக்குத் தீங்கு தரும் எத்தனையோ பொருள்களை, அம்சங்களை, பூமியின் மேல் விழாதபடி தடுத்துக் கொண்டிருக்கிறது.

பிரபஞ்ச வெளியில், எத்தனையோ சக்திகள் பாய்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றைத் தாங்கிக் கொள்ளும் சக்தி மனிதனுக்கு இல்லை.

ஒரு விஷயம் உங்களுக்கு வியப்பாகவும் இருக்கும், சிரிப்பாகவும் இருக்கும். விண்வெளியில் மனிதனை அனுப்புவதற்கு முன், உருளைக் கிழங்கை அனுப்பினார் ஃபிராங்க் பிரவுன்!

உருளைக் கிழங்கு கெட்டுப் போனால், மனிதனால் விண்வெளியில் தாக்குப் பிடிக்க முடியாது! உருளைக் கிழங்கிற்கும், மனிதனுக்கும் அடிப்படை வேறுபாடு மிகக் குறைவாம்! உருளைக் கிழங்கு கெட்டியான பண்டம். மனிதன் உணர்ச்சி மிக்கவன். உருளைக் கிழங்கே தாக்குப் பிடிக்காதபோது, மனிதன் எப்படித் தாக்குப் பிடிப்பான், என்பது அவர் கருத்து.

விண்வெளிக்குப் போய் வந்த உருளைக் கிழங்கை மண்ணில் நட்டால் முளைவிட வேண்டும். இது நிகழவில்லை என்றால், மனிதனை விண்வெளிக்கு அனுப்ப முடியாது என்றார் அவர். என்றாலும்கூட, மனிதன் விண்வெளியில் தாக்குப் பிடிப்பது பற்றிய வேறு சில பிரச்சனைகள் இருந்தன.

பூமியில் நட்ட உருளைக் கிழங்கு முளைப்பதற்குக் காரணம் கதிரவன்தான். கதிரவனின் வெப்பத்தாலும் ஒளியாலுமே அது முளைவிடுகிறது. எந்தத் தாவர விதை முளைப்பதற்கும் காரணம் இதுதான். இதையும் பிரவுன் சிந்தித்தார்.

இன்னொரு துறையிலும் அவர் ஆராய்ந்தார். இந்தத் துறைக்குச் சரியான பெயர் சூட்டப்படவில்லை. என்றாலும், தற்காலிகமாக அதை, 'கிரக மரபு' என்று குறிப்பிட்டார்கள். இதற்கு ஆங்கிலத்தில் வேறு பெயர் இருக்கிறது: 'சாதகம்' - 'Horoscope' என்பது அது. இந்தச் சொல், கிரேக்கச் சொல்லான 'Horoscopos' என்பதிலிருந்து பிறந்தது. இந்தக் கிரேக்கச் சொல்லின் பொருள், 'கிரகங்களை நான் கவனிக்கிறேன்' என்பது.

ஒரு குழந்தை பிறந்தநாளில், ஒரு நட்சத்திரம் பூமியின் தொடுவானத்தில் தோன்றுகிறது. கதிரவனின் உதயம், மறைவு போல, பல விண்மீன்கள் தொடுவானில் தோன்றி மறைகின்றன. இருபத்து நான்கு மணிநேர இடைவெளியில்.

குழந்தை காலையில் ஆறு மணிக்குப் பிறந்தது என்றால், அது உதய காலம். அதே சமயம், ஒரு விண்மீனும் அடிவானில் உதயமாகும்; மற்ற விண்மீன்கள் மறையும். சில விண்மீன் கூட்டம் எழும்; சில மறையும். வானில் தோன்றும் அந்த விண்மீன் அமைப்பிற்கு ஏற்றபடியே ஒரு குழந்தை பிறக்கிறது.

இதுவரை நமக்குச் சந்தேகமாகவே இருந்து வந்தது. இன்னும் பலருக்கு அப்படித்தான். மனிதனுக்கும் வானத்து விண்மீன்களுக்கும் என்ன தொடர்பு இருக்க முடியும் என்ற சந்தேகம். பிரபஞ்ச வெளியில் நெடுந்தொலைவில் இருக்கும் ஒரு விண்மீன், பூமியில், எங்கோ ஒரு சிற்றூரில் பிறக்கும் ஒரு குழந்தையோடு எப்படித் தொடர்பு கொண்டிருக்கும்?

அந்த நேரத்தில் ஒரு குழந்தை மட்டுமா பிறக்கும்? பல்லாயிரம் குழந்தைகள் பிறந்திருக்கும்... அவற்றில் ஒன்று நாட்டின் குடியரசுத் தலைவர் ஆகலாம். இன்னொன்று அவ்வாறு ஆகாது. ஒன்று நூறாண்டு வாழ்ந்திருக்கும். இன்னொன்று, இரண்டே நாளில் இறந்துவிடலாம். ஒன்று மேதை ஆக, இன்னொன்று முட்டாள் ஆகலாம்.

வானத்து விண்மீனின் அன்றைய நிலைக்கும், அன்று பிறக்கும் ஒரு குழந்தைக்கும் எப்படித் தொடர்பு இருக்க முடியும் என்று மேலோட்டமாகக் கேட்கலாம்.

இந்த வினா, தர்க்கரீதியாகவும், தெளிவாகவும் இருப்பதுபோல் தோன்றுகிறது. பூமியில் பிறக்கும் ஒரு குழந்தைக்கும், வானத்து விண்மீனுக்கும் தொடர்பு இல்லையென்றே தோன்றுகிறது. ஆனால், பிரவுன், பிக்கார்டி, டமாட்டோ போன்ற பலரின் ஆய்வுகளிலிருந்து

நமக்கு ஒன்று தெளிவாகிறது. விண்மீன்கள், மனிதனின் முழு வாழ்வையும் பாதிக்கின்றன என்று தோன்றுகிறது. ஆழமாக ஆராய்ந்து பார்த்தால், ஒவ்வொரு தனிமனிதனும், விண்மீனின் பாதிப்பிற்கு உள்ளாகிறான் என்பதை அறிவோம்.

இன்னொன்று: சோதிடம் ஒரு விஞ்ஞானம். இது மிகப் புராதனமானதாக இருப்பதால், வளர்ச்சி பெறவில்லை என்று நினைக்கிறோம். ஆனால், என் கருத்து இதற்கு நேர் மாறானது. சில வளர்ச்சி பெற்ற நாகரிக சமுதாயங்களில், இந்த விஞ்ஞானம் எல்லையற்ற வளர்ச்சியைப் பெற்றிருந்தது. ஆனால், அந்தச் சமுதாயங்கள் முற்றிலும் அழிந்துவிட்டன. சோதிடக் கலையின் துண்டு துணுக்குகளே நம்மிடம் மிஞ்சியிருக்கின்றன.

சோதிடம், வளர்ச்சி பெறவேண்டிய புதிய கலை அன்று. அறிவியலாக ஒரு காலத்தில் நல்ல வளர்ச்சி பெற்றிருந்தது. அதை வளர்த்த சமுதாயங்கள் அழிந்துவிட்டன. எத்தனையோ சமுதாயங்கள் வரும், போகும். அதனால் அவர்களால் உருவாக்கப்பட்டு, வளர்க்கப் பெறும் அடிப்படைகள் அழிந்து விடுகின்றன. இன்று, விஞ்ஞானம் அதை அணுகி ஆராய முன் வந்திருக்கிறது.

பிறக்கும்போது ஒரு குழந்தையின் நிலை, மிகுந்த துடிப்புள்ள, மிக நுட்பமாக புகைப்படச் சுருள்போல இருக்கின்றது. விண்மீன்கள் மனிதனை எவ்வாறு பாதிக்கின்றன என்பதை அறிய, இரண்டு மூன்று விஷயங்களை நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது. விண்மீன்கள் மனித வாழ்வைப் பாதித்தால்தான், சோதிடமே இருக்க முடியும்.

இரட்டைக் குழந்தைகள் நிலை பற்றி நாம் புரிந்து கொள்ள முயல்வது நல்லது. ஒரே கருமுட்டை இரண்டாகப் பிரிந்ததால் உருவாகிப் பிறந்த இரட்டையர் ஒரு பக்கம். இன்னொரு பக்கம், தாயின் கருப்பையில், இரண்டு தனித்தனிக் கருக்கள் ஒரே சமயத்தில் தோன்றி, வளர்ந்து, பிறந்த இரட்டையர்.

முதல்வகை அபூர்வமாகவே தோன்றுகிறது. அதாவது, ஒரே கருவிலிருந்து இரட்டையர் பிறப்பது. இவர்கள் ஒரே சமயத்தில் பிறப்பதால், இவர்களைப் பற்றிய ஆராய்ச்சியே முக்கியமானது. மற்றவகை இரட்டையரின் பிறப்பு நேரம் சற்றே மாறுபடுகிறது.

பிறப்பு என்பது நிச்சயமற்றதோர் அம்சம். கர்ப்பம் தரித்தலே இதன் முதல் காலகட்டம். சரியான பிறப்பு என்பதே இந்தத் தருணம்தான். தாய் வயிற்றில் கரு தோன்றுதலே உண்மையான பிறப்பு.

தாயின் வயிற்றிலிருந்து குழந்தை வெளியே வருவதையே நாம் பிறப்பு என்கிறோம். ஆனால், அது இரண்டாம் பிறப்பு.

இந்துக்கள் சோதிடத்தை மிக ஆழமாக ஆராய்ந்திருக்கிறார்கள். நாம் இப்போது அதில் ஆராயப் புகுந்தால், பிறப்பு என்பது, கரு தோன்றிய நேரமே என்பதை உணர்வோம். குழந்தை வெளியே வரும் நேரம் அல்ல.

அந்தக் கரு தோன்றுவதற்கான, கூடலும், கர்ப்பம் தரித்தலும் நிகழும் காலத்தில், விண்மீன்களின் அமைப்பு குறிப்பிட்ட நிலையில் இருந்திருக்கும். அந்த அமைப்புத்தான் குறிப்பிட்ட வகைக் குழந்தை பிறக்கக் காரணமாகிறது.

இதன் பின்னணியை நான் மேலும் விளக்க விரும்புகிறேன். அப்போதுதான், இந்தத் துறையில் நிகழ்ந்துள்ள பல ஆராய்ச்சி முடிவுகளையும், தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

ஒரு குழந்தை, ஒரு குறிப்பிட்ட நாளில், காலை ஆறு மணிக்குப் பிறந்தால், அந்த நேரத்தில், வானில் உள்ள விண்மீன்களின் அமைப்பு, அந்தக் குழந்தையின் வாழ்வைப் பாதிக்கும், என்று பொதுவாக நினைக்கிறோம்.

ஆனால், சோதிடத்தை ஆழமாக அறிந்தவர்கள் இந்தக் கருத்து சரியில்லை என்கிறார்கள். உண்மை இதற்கு மாறானது. ஒரு குழந்தை, தான் பிறக்கும் நேரத்தைத் தானே முடிவு செய்கிறது! கிரகங்கள் எங்கே இருக்கும் போது பிறக்க வேண்டும் என்பதை, அதுவே தீர்மானிக்கிறது! இன்னும் ஆழமாக ஆராய்ந்தால், கருக் கொள்ளும் காலத்தையும் அதுவே தீர்மானிக்கிறது!

ஒவ்வொரு உயிரும், தான் எந்த வயிற்றில், எந்த நேரத்தில் கருவாகி, எந்த நேரத்தில் பிறக்க வேண்டும் என்பதை முன்பே முடிவெடுத்து விடுகிறது. கரு உதிக்கும் நேரம் மிக முக்கியமானது. அந்தக் கண நேரத்தின்போது, இந்தப் பிரபஞ்சம் எப்படி இருந்தது என்பதும் முக்கியமானது. அந்தக் கணத்தில், பிரபஞ்ச வாயில் திறப்பதற்கான சாத்தியக் கூறு என்ன என்பது மிக முக்கியமான வினா.

ஒரே கரு முட்டையிலிருந்து இரண்டு கருக்கள் தோன்றினால், அவற்றின் கர்ப்ப நேரம் ஒன்றே. அவை பிறக்கும் நேரமும் ஒன்றே. அவர்களின் வாழ்வும் ஒன்று போலவே இருக்கும். அதனால், அவை பிறந்த காலம் முக்கியமில்லை என்று சொல்வது கடினம்.

அப்படிப் பிறக்கும் இரட்டையரின் அறிவுக் கூர்மை ஒன்று போலவே இருக்கும். சிறு வேறுபாடு தோன்றினால், அது நமது அளக்கும் குறைபாட்டினால் ஏற்படுவதுதான். இன்றும்கூட, அறிவைத் துல்லியமாக அளக்கும் முறையை நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லையே!

ஒரே கருவில் உதித்த இரட்டையர், வேறு வேறு இடத்தில் வளர்க்கப்பட்டாலும், அவை அறிவுக் கூர்மையில் வேறுபடுவதில்லை. ஒன்றை இந்தியாவிலும், மற்றொன்றைச் சீனாவிலும் வளர்த்தாலும் சரி, ஒரு சகோதரம் இருப்பது மற்றொன்றிற்குத் தெரியாமல் இருந்தாலும் சரி, அவை ஒரே புத்திக் கூர்மையுடன்தான் இருக்கும். பிறக்கும் காலத்தில் ஏற்பட்ட சக்தியுடன், அதன் அறிவுக்கூர்மை சம்பந்தப்பட்டிருப்பது ஆச்சரியமான அம்சம்தான்.

சீனாவில் வாழும் குழந்தைக்குச் சளி பிடித்தால், அதே சமயத்தில் இந்தியாவில் வளரும் அதன் இரட்டைக்கும் சளி பிடிக்கும்! அவர்கள் இறப்பும்கூட, பொதுவாக ஒரே நாளில் இருக்கும். அதிகப்படியாக மூன்று ஆண்டுகள் இடைவெளி இருக்கலாம். அதற்குமேல் இருக்காது.

இரட்டையரில் ஒன்று இறந்தால், மூன்று நாள்களிலிருந்து மூன்று ஆண்டு இடைவெளிக்குள் மற்றதும் இறந்துவிடும். இரண்டின், பழக்க வழக்கங்கள், உணர்வுகள் எல்லாம் ஒன்று போலவே இருக்கும். மற்றவற்றிலும் ஒற்றுமை காணப்படும். ஒருவர் மற்றவரின் பிரதி போலவே செயல்படுவார்.

ஒவ்வொரு மனிதரின் தோலும் தனித்தன்மை கொண்டது. என் கை சிதைந்தால், மேலே தோல் வைத்துப் பழுது பார்ப்பார்கள். அதற்கு உங்கள் தோல் உதவாது. என் உடலின் தோல்தான் எனக்குப் பொருந்தும். இந்த உலகில், வேறு யாருடைய தோலும் எனக்குப் பொருந்தாது. மற்றவர் தோலை என் உடல் ஏற்றுக் கொள்ளாது.

ஆனால், ஒரே கரு முட்டையிலிருந்து பிறந்த இரட்டையரில் ஒருவர் தோல், மற்றவருக்குப் பொருந்தும்; அதை அவர் உடல் ஏற்றுக் கொள்ளும். ஏன் அப்படி? காரணம் என்ன? ஒரே பெற்றோர்கள் என்பதால் அல்ல. ஒரே பெற்றோரின் இரண்டு சகோதரர்கள் என்றாலும், ஒருவர் தோல் மற்றவருக்குப் பொருந்தாது. ஒரே கருவில் உதித்தவர்க்கே அது பொருந்தும். கரு உருவாகிய காலமே அந்த ஒருமைப்பாட்டை நிர்ணயிக்கிறது. பண்புகள், அறிவுக் கூர்மை, வாழ்நாள், மரணம் எல்லாவற்றையும் அதுதான் நிர்ணயிக்கிறது.

ஒருவர் நோயுற்றால், மற்றவரும் நோயடைவார். அவ்வளவு முக்கியமானது கரு உருவாகும் காலம்.

அதைவிடப் பிறக்கும் காலமே முக்கியமானது என்று சோதிடம் சொல்கிறது. இதுநாள் வரை, அறிவியல் சோதிடத்தை ஒப்புக்கொள்ளவில்லை. இப்போது ஒப்புக் கொள்ள ஆரம்பித்திருக்கிறது. இந்தச் சூழல் வளர வளர, புதிய சோதனைகள் செய்யப்பட்டு, நமக்கு உதவும்.

நாம் செயற்கைக் கோள்களை விண்வெளியில் மிதக்க விட்டிருக்கிறோம். விண்மீன்கள், எரிகற்களால் பூமியைத் தாக்கிக் கொண்டே இருக்கின்றன. பலவிதமான கதிர்வீச்சுகள் பூமியின்மீது பாய்ந்து கொண்டே இருக்கின்றன. செயற்கைக் கோள்களால் இதையெல்லாம் நாம் கண்டு பிடித்திருக்கிறோம். இவற்றால் பாதிக்கப்படாத பொருள் பூமியில் எதுவுமே இல்லை.

நிலாவினால், கடல் பாதிக்கப்படுவது நமக்குத் தெரியும். கடல் நீரில், தண்ணீரும் உப்பும் எந்த விகிதத்தில் உள்ளனவோ அதே விகிதத்தில், நம் உடலிலும் இருப்பதை நாம் கவனிப்பதே இல்லை. நம் உடலின் எழுபது சதவிகிதம், தண்ணீர்தான். இந்த நீரில் உள்ள உப்பின் விகிதம்தான், அரபிக் கடல் நீரிலும் இருக்கின்றது. கடல்நீர், நிலாவினால் பாதிப்படைந்தால், நம் உடலிலுள்ள நீரும் பாதிப்பு அடையாதா?

இது தொடர்பாக, அண்மையில் கண்டறியப்பட்ட இரண்டு மூன்று உண்மைகளை மனதில் வைப்பது நல்லது. முழு நிலா நாளில், உலகில் பைத்தியத் தன்மை கூடுதலாகிறது. மற்ற வளர்பிறை, தேய்பிறை நாட்களில் அது குறைவு. அதிகம் பைத்தியமாவது பவுர்ணமி நாட்களில்தான். பைத்தியக்கார விடுதிகளில், பவுர்ணமி நாட்களிலேயே அதிகம்பேர் சேர்க்கப்படுகிறார்கள்; அமாவாசை நாட்களிலேயே அதிகம்பேர் அங்கிருந்து விடுதலை செய்யப்படுகிறார்கள் என்ற புள்ளிவிவரங்கள் இப்போது கிடைத்திருக்கின்றன...

ஆங்கிலத்தில் மனநலம் சிதைந்தவரைக் குறிக்கும் சொல்: 'லூனாடிக்.' இந்தியில், 'சாந்த்மர.' 'சாந்த்' நிலாவைக் குறிக்கும் இந்தி சொல். 'லூனா' நிலாவைக் குறிக்கும் ஆங்கிலச் சொல். 'சாந்த்மர,' 'லூனாடிக்' - இரண்டுமே மூவாயிரம் ஆண்டுப் பழைமை கொண்ட சொற்கள். வான்மதிக்கும், மதியிழந்தவர்க்கும் தொடர்புண்டு என்பது

அந்தக் காலத்து மக்களுக்குத் தெரிந்திருக்கிறது. முழுமதி, மதியிழந்தவரைப் பாதிக்கும் என்றால், அறிவுமதி படைத்தவரை ஏன் பாதிக்காது?

மூளையின் அமைப்பும், உடலில் கட்டமைப்பும், எல்லாருக்கும் ஒன்று போலவே இருக்கிறது. என்றாலும், வான்மதி, மதிநலம் சிதைந்தவரை அதிகமாகவும், நிலைத்த மதி படைத்தவரைக் குறைவாகவும் பாதிக்கிறது. அளவு வித்தியாசம். அவ்வளவுதான். புத்தி நிலையாக இருப்பவரை நிலா பாதிக்காமல் இருப்பது என்பது சாத்தியமே இல்லை. அது சாத்தியம் என்றால், யாருக்குமே பைத்தியம் பிடிக்காதே! மதிகெட்ட மனிதரும் ஒரு காலத்தில் மனநிலை சரியாக இருந்தவர்தானே? அவர்தானே பாதிக்கப்பட்டுப் பைத்தியமாயிருக்க வேண்டும்?

சோதிடத்தில் சுத்தமாக நம்பிக்கை இல்லாத பேராசிரியர் பிரவுன் செய்த ஆராய்ச்சி மிகவும் சுவையானது. அவர் நாத்திகர். சோதிடத்தை ஏளனம் செய்து வந்தவர். இருந்தாலும் ஓர் ஆய்வு நடத்திப் பார்ப்போம் என்று அதில் இறங்கினார். தளபதிகள், மருத்துவர்கள், மற்ற திறமைசாலிகள் பலரது சாதகக் குறிப்புகள் பலவற்றை அவர் சேகரித்தார்.

அவருக்கு மிகவும் சிக்கல் ஏற்பட ஆரம்பித்தது! குறிப்பிட்ட கிரகங்களின் அமைப்பில், குறிப்பிட்ட இராசியில் பிறந்தவர்கள் மட்டுமே குறிப்பிட்ட தொழிலில் இருந்தார்கள்; பிரகாசித்தார்கள்! செவ்வாயின் ஆதிக்கத்தில் இருந்தவர்களே தளபதிகளாக இருந்தார்கள்! கல்வியாளர்களுக்குச் செவ்வாயின் பாதிப்பே இல்லை!

ஐம்பதினாயிரம் பேரை ஆராய்ந்ததில், செவ்வாயின் பாதிப்பு உள்ளவர்களே, இராணுவத்தில் இருப்பது தெரிந்தது. படைத்தளபதிகள் பிறக்கும்போது, செவ்வாய் உச்சத்தில் இருந்திருக்கிறது. போரெதிர்ப்பாளர்கள் எவருமே செவ்வாய் உச்சத்தில் இருக்கும்போது பிறந்தவர்கள் அல்லர்! எங்கோ அங்கொன்றும் இங்கொன்றுமாக விதிவிலக்குகள் காணப்பட்டன.

கணித மேதைகள் வேறு இராசியில் பிறந்தார்கள். கவிஞர்கள் வேறு இராசியில். விதிவிலக்கு அரிதாகவே காணப்பட்டது. கணித நிபுணர்கள் பிறந்த இராசியில் கவிஞர்கள் பிறக்கவே இல்லை!

கவிஞர்கள், கணித மேதைகள், போர்வெறியர்கள், தளபதிகள், சமாதானவாதிகள் போன்ற பலருக்கும், குணாதிசயங்கள், பழக்க வழக்கங்கள் வேறுவேறுதான். அதேசமயம், கணிதமேதை பெர்ட்ரண்ட்

ரசல், உலகில் சமாதானம் நிலவ வேண்டும் என்று சொல்லலாம். ஞானி நீட்ஷே, 'போரே இல்லாமல் போய் விடும் நாள், உலகம் அர்த்தம் இழந்துவிடும் நாள்' என்று சொல்லலாம்! அது அறிவு பூர்வமான வாதம் மட்டுமே. அல்லது, நட்சத்திரங்களின் மோதலோ? அவர்களுக்குள் ஏற்படும் அறிவு வாதமா, அல்லது பிறந்த நேரங்களின் முரண்பாடா?

நிறைய ஆய்வுகள் நடைபெற்றன. ஒருவருடைய திறமை, பிறக்கும் நேரத்திற்கேற்ப அமைந்தது கிரகங்களின் அமைப்பு என்று சோதிடம் சொல்கிறது. ஆனால், எப்போது பிறப்பது என்பதை அவரவரே நிர்ணயம் செய்து கொள்கிறார்கள் என்றுதான் நான் கூற விரும்புகிறேன்.

ஒருவரின் நோக்கம், சாத்தியம், விருப்பம், ஆசை முதலிய வற்றிற்கு ஏற்பவே, அவர் குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட நேரத்தில் பிறப்பெடுக்கிறார்! கர்ப்பம் தரிக்கும் நேரத்தையும் அந்தக் குழந்தையே முடிவு செய்து கொள்கிறது!

கடல்நீர் பாதிக்கப்படுவது பற்றிச் சொன்னேன். எல்லாம் நீரிலிருந்தே படைக்கப்படுகின்றன! 'நீரின்றி அமையாது உலகு.' நீரிலிருந்தே உயிர் பிறந்ததாகப் பண்டைய கிரேக்க ஞானிகள் கூறினார்கள். நீரே உயிர். இந்தியர்கள், சீனர்கள் போன்ற புராதன சமுதாயத்தவர்களும் இப்படியே சொல்லியிருக்கிறார்கள்.

பரிணாம வளர்ச்சியை நம்பும் இன்றைய விஞ்ஞானிகளும், முதல் உயிரின் தோற்றம் நீரில்தான் என்று சொல்கிறார்கள். முதல் தாவரமான கடற்பாசியும் நீரில் தோன்றியதுதான். அந்த ஆதி உயிரிலிருந்தே மனிதன் பரிணமித்திருக்கிறான்.

மூலகங்களிலேயே மிகவும் மர்மமானது தண்ணீர்தான்! பிரபஞ்சத்திலிருந்தோ, விண்மீன்களிடமிருந்தோ, வான் வெளி யிலிருந்தோ எவ்விதப் பாதிப்பு மனிதனுக்கு ஏற்பட்டாலும், அது தண்ணீரின் மூலமாகவே அவனைப் பாதிக்கிறது. அவனது உடலின் தண்ணீர் மூலமாக!

தண்ணீரின் இயல்பு பற்றிப் பல ஆராய்ச்சிகள் நடந்திருக்கின்றன. பல மர்மங்கள் இப்போது புலப்பட்டிருக்கின்றன.

கடந்த பத்து ஆண்டுகளில் கண்டறியப்பட்ட மிகப் பெரிய இரகசியம், தண்ணீருக்குக் கூர்மையான பண்பிருக்கிறது என்பதுதான். வாழ்வு எந்தப் போக்கில் சென்று கொண்டிருந்தாலும், எவ்விதமான பாதிப்புகள் ஏற்பட்டாலும், அவையெல்லாம் நீரின் மூலமாகவே

முதலில் வருகின்றன. நமக்குள் இருக்கும் நீர்தான் முதலில் பாதிப்படைகிறது. ஒருமுறை அந்தப் பாதிப்பு அடைந்துவிட்டால், அப்புறம் அதை விலக்கிவிட வழியே இல்லை.

கடலில் மிதப்பதுபோல், குழந்தை, தாயின் கருப்பையில் மிதக்கிறது என்பது வியப்பான உண்மை. தாயின் கருப்பை நீரில், கடல்நீரில் உள்ள அதே விகித அளவு உப்பு இருக்கின்றது. தாயின் உடலில் ஏற்படும் பாதிப்பு, நேரடியாகக் குழந்தையை அடைவதில்லை. கருப்பைக் குழந்தைக்கும் தாய்க்கும் நேரடித் தொடர்பு இல்லை.

ஊடகம் தண்ணீர்தான். தாயையும், கருப்பைக் குழந்தையையும் இணைப்பது தண்ணீர்தான். பிறந்த பின், வாழ்நாள் முழுவதும், நம்முள் இருக்கும் நீர், கடல்நீர் போலவே செயல்பட்டு வருகின்றது.

கடல் மீன்கள் பற்றி நிறைய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. கடலின் அலைகள் பின்வாங்கும் காலங்களில் மீன்கள் கரையோரம் வந்து முட்டைகள் இடுவது கண்டறியப்பட்டது. பிறகு, அவை கடலுக்குள் திரும்பி விடுகின்றன. ஏற்ற அலைகள், கரையில் குறிப்பிட்ட காலத்தில் வீசுகின்றன. அதற்குள் மீன் முட்டைகள் குஞ்சு விடுகின்றன. பேரலைகள் வரும் காலத்தில், மீன் குஞ்சுகள் அவற்றோடு கடலுக்குள் போய் விடுகின்றன.

பேரலை வீசாத காலத்தில் மட்டும் மீன்கள் கரைக்கு வந்து முட்டையிடுவது வியப்பான ஒன்றுதான். பேரலை வீசும் காலங்களில் கரையில் முட்டைகள் இட்டால், அவற்றை அலைகள் அடித்துப் போய்விடும். அவை குஞ்சு பொரிக்கவே வாய்ப்பில்லை. அப்புறம் மீன் வம்சமே இல்லாமற் போய்விடும்!

ஏற்ற வற்ற அலைகளின் காலத்தை மீன்கள் எவ்வாறு தெரிந்து கொள்கின்றன, என்பது விஞ்ஞானிகளுக்குப் புதிராகவே இருந்தது. மீன்களின் காலக் கணிப்பில் ஒரு சிறு பிழை ஏற்பட்டாலும், முட்டைகள் அழிந்து போகும்.

ஆனால், பல கோடி ஆண்டுகளாக, மீன்களின் கணக்கு தப்பவே இல்லை! அப்படியானால், காலத்தைக் கணித்தறிய அதனிடம் என்ன கருவி இருக்கிறது? மேலும், ஒரே சமயத்தில் இலட்சக் கணக்கான மீன்கள் முட்டையிடக் கூட்டமாய்க் கரைக்கு வருகின்றன... அவை கருத்தைப் பறிமாறிக் கொள்ள ஏதாவது ஒலிபரப்பு அமைப்பைப் பெற்றிருக்கின்றனவா?

ஆய்வுகள் மேற் கொண்டதில், நிலாவைத் தவிர அவற்றிற்கு வேறு துணை இருப்பதாகத் தெரியவில்லை! நிலாவைக் கொண்டே, ஏற்ற வற்ற அலைகளின் காலங்களை அவை உள்ளுணர்வால் அறிந்து கொள்கின்றன.

இன்னொரு வாய்ப்பும் உண்டு. கடல் அலைகளை வைத்தும் அறிய வாய்ப்பு உண்டு. அதனால், விஞ்ஞானிகள் அலை வீசாத பெரிய தொட்டி நீரில், இருளில் மீன்களைப் போட்டுச் சோதித்தார்கள்.

வானில் நிலா எந்த நிலையில் வரும்போது அவை கடலில் முட்டையிடுமோ, அதே காலத்தில், இருள் தொட்டியிலும் அவை முட்டையிட்டன! அதனால், அலைகள் கொண்டு அவை காலத்தைக் கணிக்கவில்லை என்பது தெளிவாயிற்று.

மீன்கள் ஒன்றுக்கொன்று தகவல்கள் பறிமாறிக் கொள்கின்றன என்று சிலர் கருதலாம். ஆனால் அதற்கு ஆதாரமில்லை. மீன்களைத் தனித்தனியே பிரித்து வைத்தார்கள். அதன் மூளையைப் பலவிதங்களிலும் பாதித்தார்கள். இரவு பகல் அறியாதவாறு, இருளிலேயே வைத்தார்கள்; பிறகு, இருபத்து நான்கு மணிநேரமும் ஒளியிலேயே வைத்தார்கள்.

செயற்கை விளக்குகள் கொண்டு நிலா வெளிச்சம் போல் ஏற்படுத்தி, நிலா தேய்வதும் வளர்வதும் போல ஒளியைக் குறையவும் கூட்டவும் செய்தார்கள். ஆனால் மீன்களை ஏமாற்ற முடியவில்லை. உண்மை நிலாவின் குறிப்பிட்ட நாளன்று தான் மீன்கள் முட்டையிட்டன. எந்தச் சூழலிலும் குறிப்பிட்ட நாள் அன்றே முட்டைகள் இட்டன. அது நிலாவினைச் சார்ந்ததாகவே இருந்தது.

ஆண்டு தோறும், பல்லாயிரம் பறவைகள் பல்லாயிரம் மைல்கள் கடந்து வலசை போகின்றன. பனி பெய்யப் போவதைத் தெரிந்து கொண்டு, சரியாக ஒரு மாதம் முன்பு புறப்படுகின்றன. அவை புறப்படும்போது பனி இல்லை. அந்த ஆண்டு, பத்து நாள் தாமதமாகவோ, பத்து நாள் முன்னதாகவோ பனிக்காலம் பிறக்கு மென்றாலும், அதை அறிந்து, மிகச் சரியாக ஒரு மாதம் முன்பே அவை புறப்படுகின்றன!

வானிலை ஆராய்ச்சி நிலையம் அமைத்துப் பருவ நிலைகளை நாம் அறிவிக்கிறோம். என்றாலும் நமது வானிலை அறிவிப்புகள் துல்லியமாக இருப்பதில்லை. ஆனால், பறவைகள் மிகத் துல்லியமாக ஒரு மாதம் முன்பே கணித்து விடுகின்றன! அது எப்படி?

யாரோ ஒரு வானிலை ஆராய்ச்சியாளர், தெருவோரம் உட்கார்ந்திருந்த சோதிடரை, 'இன்று மழை வருமா?' என்று கேட்டாராம்! நமது நிலை இப்படி இருக்கிறது!

மனித ஏற்பாடுகள் சிறு பிள்ளைத் தனமாக இருக்கின்றன. பறவைகளோ, பனிவிழப் போகும் நாளை, முன் கூட்டியே திட்டவட்டமாக அறிந்து கொள்கின்றன. பல்வேறு விதமான பறவைகளும் அந்த நாளைச் சரியாக முன்னறிகின்றன, என்பது பல்லாயிரம் சோதனைகளில் தெரிய வந்துள்ளது.

ஜப்பானில், நகரத்தில் வாழும் ஒருவகைச் சாதாரணப் பறவை இனம், நில நடுக்கம் ஏற்படுவதற்கு இருபத்து நான்கு மணிநேரத்திற்கு முன், அதைத் தெரிந்து கொண்டு, ஊரை விட்டுப் பறந்தோடிப் போய் விடுகின்றன!

நில நடுக்கம் எப்போது ஏற்படும் என்பதை, இன்றைய விஞ்ஞானிகளாலும் சரியாகக் கணிக்க முடிவதில்லை. சுமாராகச் சொல்லலாமே தவிர, இரண்டு மணிநேரத்திற்கு முன்பு கூடத் தெளிவாகச் சொல்ல முடியாது. 'வரலாம்; வருவதற்கான சாத்தியக் கூறு இருக்கிறது' என்று மட்டுமே அவர்களால் சொல்ல முடியும்.

ஆனால், ஜப்பான் மக்கள் இருபத்து நான்கு மணி நேரம் முன்பே தெரிந்து கொண்டு விடுகிறார்கள், ஊர்ப் பறவைகள் பறந்து போவதை வைத்து. ஒரு பறவை கூடப் பின் தங்கி நின்று விடுவதில்லை. அவை, எப்படி அறிகின்றன?

'ஒவ்வொரு உயிரும், பிரபஞ்சத் தாக்கத்தை உணரும் உணர்வு மையத்தைப் பெற்றிருக்கிறது,' என்னும் புதிய தகவலை பத்தாண்டுகளாகச் சொல்லி வருகிறார்கள். மனிதனுக்கு அது இருக்கும். ஆனால், அதை உணரும் விழிப்புணர்வை அவன் இழந்து விட்டான்.

'புத்திசாலித்தனம்' என்று சொல்லிக் கொள்கிறானே, அதனால் மனிதன் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் ஆதியில் பெற்றிருந்த எத்தனையோ ஆற்றல்களை இன்று இழந்து விட்டான். முன்பு அவனிடம் இருந்திராத எத்தனையோ பொருள்களை அவன் கண்டு பிடித்துக் கொண்டு விட்டான். ஆனால், பயன் என்ன? ஆபத்திலும், சுய அழிவிலும் அவன் அகப்பட்டுக் கொண்டது மட்டுமே.

பெற்றிருந்ததை இழந்தான். பெற்றுக் கொண்டதோ அவனிடம் இல்லை.

மிகச் சிறிய உயிரி கூட, உள்ளுணர்வு கொண்டிருக்கிறது. இப்போதைய அறிவியல் இதை உறுதிப்படுத்தியிருக்கிறது. இந்த உள் ஆதாரத்தின் கண்டு பிடிப்பு, பிரபஞ்சத்தை விட்டு விலகி, உலகில் எதுவுமே தனித்து இல்லை என்பதை நமக்கு உணர்த்துகின்றது. பிரபஞ்ச வெளியில் எங்கு எது நடந்தாலும், அது இங்கே பாதிப்பை உண்டாக்கவே செய்யும்.

பராசெல்சஸ் பற்றி முன்பு குறிப்பிட்டேன்... அவரது முடிவுக்குத் தான் இன்றைய விஞ்ஞானிகளும் வந்திருக்கிறார்கள். கதிரவனில் கரும்புள்ளிகள் தோன்றும் போதெல்லாம் பூமியில் நோய் நொடிகள் பரவுகின்றன; பெருகுகின்றன. அந்தப் புள்ளிகள் குறைந்தால் நோய்கள் குறைகின்றன. கதிரவனில் கரும்புள்ளிகள் இருக்கும் வரை, பூமியில் நோய் நொடிகள் இருந்தே தீரும். அதை ஒழிக்க வழியே இல்லை.

பதினோரு ஆண்டுகளுக்கு ஒரு முறை, கதிரவனின் மேற்பரப்பில் பெரிய வெடிப்புகளும், கொந்தளிப்புகளும் தோன்றுகின்றன. அவை ஏற்படும் போதெல்லாம், பூமியில் போர்கள் ஏற்படுகின்றன. பத்து அல்லது பதினோரு ஆண்டுகளுக்கு ஒரு முறை கொள்ளை நோய்களும் பரவுகின்றன; புரட்சிகளும் ஏற்படுகின்றன.

நாம் தனித்து இல்லை, பிரபஞ்சக் கட்டமைப்பில் இணைந்திருக்கிறோம் என்பது புரிந்தால், சோதிடத்தை எளிதில் புரிந்து கொள்ளலாம். அதனால் தான், இந்த விளக்கமெல்லாம்.

கடந்த காலத்திலும், இன்றும், சிலர் சோதிடம் ஒரு மூடநம்பிக்கை என்று நினைக்கிறார்கள். இது போலத் தான் பெருமளவில் தோன்றுகிறது. விஞ்ஞானத்தால் நிரூபிக்கப்படாத எதுவுமே குருட்டு நம்பிக்கையாகத் தான் தோன்றும்.

ஆனால், சோதிடம் அறிவியல் பூர்வமானது.

காரண காரியத்தை ஆராய்வது தான் அறிவியலின் அடிப்படை. பூமியில் காரணமின்றி எதுவும் நிகழ்வதில்லை என்று தான் சோதிடம் கூறுகின்றது. நமக்கு அது தெரியாமல் போனாலும், உண்மை என்னவோ அது தான்.

வருங்காலத்தில் உருவாகப் போவது எதுவும் இறந்த காலத்திலிருந்து தொடர்பற்று நின்று விடாது; இரண்டும் பிணைக்கப்பட்டிருக்கும். நாளைக்கு நீ என்னவாக ஆகப் போகிறாயோ, அது, இன்று நீ எப்படி இருக்கிறாயோ, இதனோடு தொடர்பு கொண்டிருக்கும். இதுவரை, இன்று வரை, நீ என்னவாக

இருக்கிறாயோ, இது, நாளை நீ ஆகப் போகும் நிலையோடு தொடர்பு கொண்டே இருக்கும்.

சோதிடம், அறிவியல் பூர்வமான சிந்தனைப் போக்கு. இறந்த காலத்திலிருந்தே எதிர்காலம் தோன்றுகிறது என்கிறது அது. உன்னுடைய நிகழ் காலமும் இறந்த காலத்திலிருந்தே தோன்றியது. நாளை நிகழப் போவது எதுவாக இருந்தாலும் அது, சூக்கும வடிவில் இன்று இருக்கவே செய்யும் என்கிறது சோதிடம். இதை, இன்னும் சற்று நன்றாகப் புரிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும்.

தான் கொலை செய்யப்படுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பாக ஆபிரகாம் லிங்கன் ஒரு கனவு கண்டார். அதில், அவர், கொலை செய்யப்படுவதாகவும், தமது உடல் வெள்ளை மாளிகையில், குறிப்பிட்ட எண்ணுள்ள அறையில் கிடத்தப் பட்டிருப்பதாகவும் கண்டார். விழித்துக் கொண்டதும் அதை அவர் தம் மனைவியிடம் விவரித்தார்... ''எல்லாரும் என் உடலைச் சூழ்து நிற்க, நீயும் என் தலை மாட்டில் நின்று கொண்டிருந்தாய்....'' என்று லிங்கன் கூறினானர்.

அவருக்கு அது வேடிக்கை போலத் தோன்றியது. மனைவியிடம் சொல்லிச் சிரித்து விட்டு மீண்டும் உறங்கப் போனார். மூன்று நாள்கள் கழித்துக் கனவில் கண்டபடியே கொலை செய்யப்பட்டார். அவர் கனவில் கண்ட அதே அறையில் அவர் உடல் கிடத்தப்பட்டது. எல்லாம் அவர் சொன்னபடியே நடந்தது.

பின்னால் நடந்தது, எவ்வாறு அப்படியே கனவில் வந்தது? வருங்காலம் நிகழ் காலத்தில் இருந்ததா? ஆம். அதனால் தான், அதன் ஒரு சிறு நொடிப் பொழுது தோற்றம் அவருக்கு வந்து போனது.

நிகழ்காலத்தின் சாளரத்தைத் திறந்து பார்த்தால், எதிர்காலம், சாளரத்திற்கு வெளியே, அருகில் தெரியும். நம் அறியாமையால் தான் எதிர்காலம் நமக்குத் தெரிவதில்லை என்று சோதிடம் சொல்கிறது. அதனால் தான் அதை 'எதிர்காலம்' என்று சொல்கிறோம். அதைப் பார்க்க முடியுமானால், எதிர்காலம் இப்போதே இங்கே இருப்பதை உணரலாம்.

மகாவீரரின் வாழ்வில் நடந்த ஒரு நிகழ்ச்சி பெரும் விவாதத்திற்கு உள்ளாயிற்று. அதனால், அவரது சீடர்களில் ஒரு பகுதியினர், அவர் முன்னால், முரண்பட்டுப் பிரிந்து போனார்கள். ஐநூறு சன்னியாசிகள் சேர்ந்து தனியாக ஒரு பிரிவையே உருவாக்கி விட்டார்கள். 'இனி

நிகழப் போவதெல்லாம் ஏற்கெனவே நிகழ்ந்தவை தாம்' என்று அவர் சொன்னது தான் விவகாரத்திற்கான காரணம்.

நீங்கள் நடந்து கொண்டிருந்தால், சேர வேண்டிய இடத்தை ஏற்கெனவே அடைந்து விட்டதாக அர்த்தம். நீங்கள் முதுமை அடைந்து கொண்டிருந்தால், அதை முன்பே அடைந்து விட்டதாகப் பொருள். 'எது நிகழ்ந்து கொண்டிருக்கிறதோ, அது நிகழ்ந்து விட்டது,' என்பது மகாவீரரின் கருத்து.

அவரது நீண்ட காலச் சீடர் ஒருவர், மழைக் காலத்தில், நெடுந்தொலைவில் இருந்தார். அவருக்கு உடல் நிலையும் சரியில்லை. ஒரு நாள் அவர், புதிய சீடர் ஒருவரிடம், பாய் ஒன்றை விரிக்கும் படிச் சொன்னார்.

சீடரும், சுருட்டிய பாயை எடுத்து விரிக்க ஆரம்பித்தார். அப்போது, அந்தப் பழைய சீடருக்கு மகாவீரர் சொன்னது நினைவிற்கு வந்தது. 'நிறுத்து! இப்போது நிகழ்வது முன்பே நிகழ்ந்து விட்டது' என்றார்.

சீடரும் பாய் விரிப்பதைப் பாதியிலேயே நிறுத்தி விட்டார்! அதை முழுவதுமாக விரிக்க வழியே இல்லை போல் தோன்றியது. மகாவீரர் சொன்னதில் ஏதோ தவறு இருப்பதாகத் தோன்றியது. பாய் அப்படியே விரிக்கப்படாமல் இருந்தால் பயன்படுத்துவது எப்படி?

மழைக் காலம் முடிந்ததும், அவர் மகாவீரரிடம் போய்ச் சேர்ந்தார். விவகாரத்தைச் சொன்னார். 'திறக்கப்படாத பாய், எவ்வாறு திறக்கப்பட்டதாக ஆகும்?' என்று கேட்டார்.

'நீ சிறு பிள்ளைத் தனமாக நடந்து கொண்டு விட்டாய். நான் சொன்னதைச் சரியாக நீ புரிந்து கொள்ளவில்லை. நடந்து கொண்டிருந்த ஒரு நிகழ்ச்சியை நீ ஏன் தடுத்து நிறுத்தினாய்? பாய் விரிப்பது நிகழ்ந்து கொண்டிருந்தது. அது ஏற்கெனவே விரிக்கப்பட்டது. நடந்து முடிந்தது தான் நடந்து கொண்டிருந்தது. அதைத் தான் நீ பார்த்துக் கொண்டிருந்தாய். அதாவது, முன்பு நிகழ்ந்தது மறுபடியும் நிகழ்ந்து கொண்டிருந்தது. எவ்வளவு நேரம் ஒரு பாய் சுருட்டி வைக்கப்பட்டிருக்கும்? அது திறந்து கொண்டிருந்தது. திறக்கும். போ, திரும்பிப் போ!' என்றார்.

அவர் திரும்பிச் சென்றபோது, பாயைத் திறந்த சீடன், முழுவதுமாய் விரித்துப் போட்டு அதன் மேல் படுத்துக் கொண்டிருந்தான்!

'நடப்பது, நடந்ததே. அது இனியும் நடக்கும்' என்பதே மகாவீரரின் கருத்து. மொக்கு விட்ட ஒரு பூ, ஏற்கெனவே மலர்ந்தது தான். ஆகவே அது மீண்டும் மலரும். இப்போது அந்த அரும்பு, மலரும் நிகழ்வில் இருக்கின்றது.

இதை இன்னொரு கோணத்திலிருந்து பார்ப்போம். அது சற்றுச் சிரமம் தான். நாம் எப்போதும் இறந்த காலத்தில் இருந்தே எதையும் பார்க்கிறோம். அரும்பு அவிழ்ந்து கொண்டிருக்கிறது... நமது மனம் பொதுவாக இறந்த காலத்திற்குக் கட்டுப்பட்டிருப்பதால், நாம், 'அரும்பு அவிழ்ந்து மலராகிக் கொண்டிருக்கிறது. இது மலர் ஆகும்.' என்கிறோம். அதற்கு மாறாகவும் இருக்கலாம் அல்லவா? சான்றாக, நான் உங்களைப் பின்னாலிருந்து தள்ளி விட்டால், நான் உங்களை முன்னேறச் செய்வதாகப் பொருள். அதே சமயம் ஒருவர் முன்னாலிருந்தும் உங்களை இழுக்கலாம். நான் தள்ளாமலிருக்க, ஒருவர் முன்னாலிருந்து மட்டும் இழுக்கலாம். அப்போதும் நீங்கள் முன்னே தான் போவீர்கள்.

பார்வைக் குறைபாட்டைச் சுட்டிக் காட்டுகிறது சோதிடம். இறந்த காலம் முன்னே தள்ளி, எதிர் காலம் அதை இழுக்க ஒரு சம்பவம் நிகழ்கிறது.

மொக்கு மலராவது மட்டும் நிகழ்ச்சியன்று. மொக்கு மலராகும்படி, மலர் தான் அழைக்கிறது. மலராகும்படி அது தான் முன்னே இழுக்கிறது. இறந்த காலம் பின்னால் நிற்க, எதிர் காலம் முன்னால் நிற்கிறது. நிகழ்காலம் அரும்பாக இருக்கிறது. இறந்த காலம் அதை, மலராகும்படி முன்னே தள்ள, எதிர் காலம், அதை மலராகும்படி முன்னே அழைக்க, அது நிகழ்கிறது.

இறந்த கால, எதிர்கால வற்புறுத்தலில் மொக்கு மலராகிறது. எதிர்காலம் இல்லை யென்றால், இறந்த காலத்தினால் அதை மலர வைக்க முடியாது. காரணம், எதிர்காலம் தான், மலராவதற்கான இடத்தை உருவாக்கித் தருகிறது.

எதிர்காலத்திற்கு ஓர் இடம் வேண்டும். அந்த இடத்தைக் கொடுத்தால் தான் மொக்கு மலராகும். எதிர் காலம் இல்லை யென்றால், இறந்த காலம் எவ்வளவு தான் முயற்சி செய்தாலும், எவ்வளவு தான் பலமாகத் தள்ளினாலும், எதுவும் நிகழாது.

உங்கள் முன்னால் இடம் எதுவும் இல்லாமல், ஒரு சுவர் நிற்கும் போது, நான் எவ்வளவு தான் பலமாக உங்களை முன்னே தள்ளினாலும், உங்களை முன்னே நகர்த்த முடியாது. முன்னே நகர,

முன்னால் இடம் வேண்டும். நான் முன்னே தள்ளும் போது, உங்கள் முன்னால் உள்ள இடம், 'வா, என் விருந்தினராக வா' என்று வரவேற்கும். அப்போது தான் எனது தள்ளல் செயல்படும்; விளைவு ஏற்படும். இறந்த காலம் செயல்படும்; எதிர்காலம் அதற்கு இடம் ஒதுக்கிக் கொடுக்கும்.

சோதிடம், இறந்த காலத்திலிருந்து மட்டும் பார்த்தால், அது அரை குறைப் பார்வை; அது அரைகுறை விஞ்ஞானம். எதிர்காலம் நம்மை எப்போதும் அழைத்துக் கொண்டே இருக்கிறது; இழுத்துக் கொண்டே இருக்கிறது. இதை நாம் உணர்வதில்லை. நமது பார்வையின் பலவீனம் இது. நமது கிட்டப் பார்வை இது. நமக்குத் தொலை நோக்கு இல்லை. அதனால், எதிர்காலம் நமக்கு வெளிப்படாமலே போய் விடுகிறது.

ஜே. கிருஷ்ணமூர்த்தியின் சாதகக் குறிப்பைப் பார்த்தால் வியப்பாக இருக்கும். அன்னிபெசன்டும், லீட் பீட்டரும் அதைக் கவனித்திருந்தால், அவரோடு பணியாற்றுவது தவறு என்பதை உணர்ந்திருப்பார்கள். எந்த நிறுவன அமைப்போடு அவர் சம்பந்தப் பட்டிருந்தாலும், அதை அவர் அழித்து விடுவார் என்று அவர் சாதகம் கூறுகிறது! அவரது தொடர்பு கொண்ட அமைப்பு எதுவும் அழிந்தே போகும்! ஆனால், அன்னிபெசன்ட் அதை ஏற்கத் தயாராக இல்லை. யாரும் அப்படி எதிர்பார்க்கவும் மாட்டார்கள். ஆனால், நடந்த தென்னவோ அது தான்.

பிரம்மஞான சங்கம், அவரைத் தலைவராக உருவாக்க முயன்றது. அதனால், அந்த இயக்கமே அழிந்து விட்டது. கிருஷ்ணமூர்த்திக்காக 'கிழக்கத்திய நட்சத்திரம்' என்ற பெரிய அமைப்பை அன்னிபெசன்ட் ஆரம்பித்தார். ஒரு நாள் அவர் அதை விட்டு விலகினார்.

அன்னிபெசன்டின் வாழ்நாள் முயற்சி அது. கிருஷ்ண மூர்த்திக்காக உருவாக்கப் பட்டதால் அது அழிந்தது. கிருஷ்ணமூர்த்தியைக் குற்றம் சாட்டிப் பயனில்லை. எந்த அமைப்பையும் தகர்க்கும் சாதகம் அது. அவரது இராசி அப்படி!

எதிர்காலம் நிச்சயமற்றதாய் இருக்கவில்லை. நமது அறிவு தான் தெளிவாக இல்லை. கனமாக இல்லை. எதிர்காலம் எதையும் நமக்குக் காட்டவில்லை யென்றால், நாம் பார்வை இழந்தவர் என்று பொருள். அதனால் தான் நமக்குத் தடுமாற்றம்; நிச்சயமின்மை.

எதிர்காலத்தின் ஒரு பகுதி வெளிப்படவே செய்கிறது. சோதிடம் என்பது, நாளும் கோளும் கிரகமும் சொல்வது மட்டுமல்ல; அவற்றின்

கணக்கு முக்கியத்துவமும் அல்ல. இவையெல்லாம் சோதிடத்தின் ஒரு பரிமாணம் மட்டுமே.

எதிர்காலம் உணர்த்தும் வேறு பரிமாணங்களும் அதற்கு உண்டு. மனிதரின் உள்ளங் கைகளில் ரேகைகள் காணப்படுகின்றன. நெற்றியிலும் கோடுகள் உண்டு. பாதங்களிலும் ரேகைகள் உண்டு — இவை யெல்லாம் கூட, மேம்போக்கானவை. ஒவ்வொரு மனித உடலிலும் பல 'சக்கரங்கள்' மறைந்திருக்கின்றன.

ஒவ்வொரு சக்கரமும் தனியுணர்வு கொண்டது. ஒவ்வொன்றும், தனக்கே உரிய முறையில், தனி வேகத்தில் சுழல்கின்றது, எப்போதும். அவை என்ன என்பதை அறிய வழிகள் இருக்கின்றன. அவற்றிற்குள் தான் மனப் பதிவுகளும், இறந்த காலத்தின் வித்துக்களும் மறைந்திருக்கின்றன.

ரான் ஹப்பார்ட், மேலை உலகிற்கு ஒரு புதிய யுகத்தை, புதிய அறிவியலைக் கொண்டு வந்தவர். கீழை நாடுகளுக்கு அது பழைய விஷயம். அந்த விஞ்ஞானத்தின் பெயர், 'காலப் பாதை.' மனிதன், புல்லாகிப் பூடாகி மரமாகி விலங்காகிக் கல்லாய் வாழ்ந்து முடித்து வந்திருந்தாலும், எல்லையற்ற காலப் பெருவெளியில் அவன் வாழ்ந்த வாழ்வின் நினைவுச் சுவடுகள் அனைத்தும் அவனுக்குள் இருக்கவே செய்யும், என்கிறார் ஹப்பார்ட். இந்த, 'நினைவு நீரோட்டத்தை' வெளிப்படுத்த முடியும். அந்தப் பழம் நினைவுகளை யெல்லாம் மனிதன் மீண்டும் அனுபவித்து உணரவும் முடியும்.

இது ஹப்பார்டின் ஆய்வுகளிலேயே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. 'காலப்பாதை' என்று அவர் குறிப்பிடுவது ஆழப்பதிவுகளை. ஒரு வகையில், நாம் நேற்றைய நினைவுகளையும், அதற்கு முன் தின நினைவுகளையும் கொண்டிருக்கிறோம். இது நமது தொழில் நினைவுகள். அன்றாட நினைவுகள். ஒவ்வொரு கடைக்காரரும், அலுவலகப் பணியாளரும் அன்றாட அலுவல்களைப் பதிவேட்டில் எழுதி வைக்கிறார்கள். அது ஒரு காலத்தில் மதிப்பிழந்து போகும்; பலனற்றுப் போகும். அது நிரந்தரமல்ல. அன்றாட அலுவல் குறிப்புகள், அன்றாடம் தூக்கி எறியப்படும்.

அது ஆழமானதன்று. எல்லையற்ற பிறவிகளின் வாழ்க்கை அனுபவங்களின் ஒட்டு மொத்த நினைவுப் பதிவுகள் ஆழமானவை. அதை ஹப்பார்ட் 'ஆழப்பதிவுகள்' '(என்கிராம்ஸ்)' என்று குறிப்பிடுகிறார். நமக்குள் ஆழமாகப் பொறிக்கப்பட்டிருப்பவை இவை. ஒட்டு மொத்தமாய் நமக்குள் பூட்டப்பட்டுக் கிடப்பவை இவை.

இதைத் திறந்து பார்க்க முடியும். கடந்த கால வாழ்வுகளின் நினைவுகள் என்று மகாவீரர் குறிப்பிடுவது இதைத் தான். ஹப்பார்ட் இதைக் 'காலப் பாதை' என்கிறார். காலத்தில் பின்னுக்குத் திரும்பிப் போதல் இதனால் சாத்தியமாகும். இது திறக்கப்படும் போது, அவை பழம் நினைவுகள் ஆவதில்லை. அனுபவங்களின் விடுதலை அது. அப்போது, 'எனக்கு நினைவு வருகிறது' என்று சொல்ல மாட்டீர்கள். மீண்டும் வாழ்ந்து பார்த்தல் அது.

இதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். 'காலப்பாதை' திறக்கப்பட்டவுடன், மறு வாழ்வு சிரமமானது. இது இல்லாமல் சோதிடம் முழுமை பெறாது. சோதிடத்தின் ஆழமே, கடந்த காலத்தின் பூட்டைத் திறந்து உள்ளே பார்த்தால் தான். கடந்த காலம் முழுவதும் தெரிந்தால் தான், எதிர் காலம் முழுவதையும் தெரிந்து கொள்ள முடியும். உங்கள் இறந்த காலத்திலிருந்தே, எதிர்காலம் பிறக்கிறது.

உங்கள் எதிர்காலம், இறந்த காலம் பெற்ற குழந்தை. இறந்த காலப் பாதையின் பூட்டைத் திறக்க, வழி முறைகளும், உத்திகளும் இருக்கின்றன. நீங்கள் ஆறு வயதாக இருந்த போது, உங்கள் தந்தை, உங்களை அறைந்திருந்தால், அது நினைவுக்கு வந்தால், அது வெறும் நினைவு அன்று. அது மீண்டும் வாழ்வது.

அப்படி மீண்டும் அனுபவம் பெறும் போது, 'உங்கள் பெயரென்ன?' என்று கேட்டால், 'ஜூனியர்' என்று சொல்வீர்களே தவிர, 'வில்லியம் ஸ்மித் ஜூனியர்' என்று சொல்ல மாட்டீர்கள். அது ஆறு வயதுப் பையனின் பதிலாகவே வரும். உங்களுக்கு அப்போது ஆறு வயது ஆகிவிடுகிறது!

உங்கள் கடந்த கால வாழ்வு சிங்கமாக இருந்தது நினைவுக்கு வந்தால், நீங்கள் தடுமாறிப் போய் கர்ஜனை செய்வீர்கள். மனிதனைப் போல் பேச மாட்டீர்கள். ஒரு வேளை விரல் நகங்களை நீட்டி ஒருவரைத் தாக்கக் கூட நீங்கள் முற்படலாம். நீங்கள் முன்பு கல்லாக இருந்திருந்தால், ஏதாவது கேட்டால் பதிலே பேச மாட்டீர்கள். உங்களால் பேச முடியாது. கல்லைப் போல் இருப்பீர்கள்.

ஹப்பார்ட் பல்லாயிரம் பேருக்கு உதவினார். ஒருவரால் பேச முடியாமற் போனால், அவரது குழந்தைப் பருவத்தில் ஏதோ தடை ஏற்பட்டிருக்க வேண்டும் என்று ஹப்பார்ட் கூறினார். அப்புறம், அவரை, அவர், காலப் பாதையில் பின்னோக்கி அழைத்துச் சென்று ஆழப் பதிவுகள் அடைத்துக் கிடக்கும் பூட்டைத் திறப்பார். அவரை

ஆறு வயதுப் பாலகன் நிலைக்கு ஆக்கி விடுவார். அல்லது, தடை ஏற்பட்ட வயதுக்குக் கொண்டு போய் விடுவார்.

அந்த ஆழ்ந்த நினைவுகள் மேலே வரும். நிகழ்கால வயது, அனுபவங்கள் பின்னுக்குத் தள்ளப்படும். இந்த முறையின் மூலம், மருந்துகளால் குணமாகாததை ஹப்பார்ட் குணப்படுத்தினார்.

காலப்பாதை காரணமாகவே பல நோய்கள் வருகின்றன. ஆஸ்துமா போன்ற நீடித்த நோய்கள் வரும். முறைக் காய்ச்சலும் அப்படியே. ஒவ்வொரு ஆண்டும் குறிப்பிட்ட நாளில் இந்தக் காய்ச்சல் வந்து விடும். இதற்கு விமோசனமே இல்லை.

ஏன் அப்படி? முறைக்காய்ச்சல் உடல் நலம் கெடுவதால் வருவதல்ல. காலப்பாதை நோய் இது. முன் நினைவுகளில் ஏதோ ஒரு தடை. முன்பே முடிவு செய்யப்பட்டது இது.

மனிதனின் நினைவிற்கும், மழைக் காலத்தின் பன்னிரண்டாவது நாளுக்கும் தொடர்பு உண்டு. மழைக் காலம் தொடங்கியவுடன், பன்னிரண்டாம் நாள் வரும் போது, ஆள் தயாராகி விடுகிறான், முறைக் காய்ச்சலுக்கு! ஏற்கெனவே பயம்! அது மறுபிறவி எடுப்பது போல! மறு அனுபவம்! மறு வாழ்வு! அது நோயே அல்ல!

போன வருடம் ஏற்பட்ட அனுபவம், மறுபடியும்! மருத்துவம் பார்த்தால் தொல்லை தான். அது வீண் வேலை. மருந்து விரயம்! இப்போது வந்துள்ளது சென்ற ஆண்டின் மனிதனுக்கு அல்ல! புதிய மனிதனுக்கு! இரண்டிற்கும் தொடர்பில்லை. ஆண்டு தோறும் அதே நோய், அதே ஆளுக்குப் புதிய புதிய அனுபவமாய் வந்து கொண்டே இருக்கும். அடுத்த ஆண்டும் அவர் தயாராகக் காத்திருப்பார், அதே மழைக்காலம் வந்தவுடன்!

நமக்கு வரும் நோய்களில் எழுபது விழுக்காடு, இந்தக் காலப் பாதையால் ஏற்படுவன. அவற்றை நாம் சிக்கெனப் பற்றிப் பாதுகாத்து, மறுபடியும் மறுபடியும் வாழ்வனுபவம் பெறுகிறோம்!

வருங்காலம் அறிய, இறந்த காலம் அறிய வேண்டும். இறந்த காலம் அறிய, நம் உடலிலும், உள்ளத்திலும் பதிந்துள்ள பதிவுகளைப் படிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். உடல் பதிவுகளை மட்டும், சோதிடம் பார்த்துக் கொண்டிருக்கும் வரை ஆழ்ந்து செல்ல முடியாது. இவை மேம்போக்கானவை.

மனதில் மாற்றம் ஏற்படும் போது, கைரேகையும் உடனே மாறும். உங்களை மனோவசியத்திற்கு ஆட்படுத்தி, 'பதினைந்து நாட்களில்

இறந்து விடுவீர்கள்,' என்று, தொடர்ந்து பதினைந்து நாட்கள், நாள் தோறும் சொல்லிக் கொண்டே வந்தால், நீங்கள் இறந்து போகா விட்டாலும் கூட, உங்கள் உள்ளங்கையின் ஆயுள் ரேகை, உடைந்து விடும், உங்கள் வயதின் அப்போதைய அளவிற்கு ஏற்ப! ரேகையில் ஓர் இடைவெளி தோன்றும். மரணம் வரப் போகிறது என்பதை உடல் ஏற்றுக் கொண்டு விட்டதே அதற்குக் காரணம்.

உடலின் ரேகை அம்சம் மேலோட்டமானது. ஆழம் மனதில் தான். உங்களுக்குப் பழக்கமான மனம் ஆழமானதன்று. அது மேலோட்டமானது. அதற்கும் கீழே ஒரு மனம் இருக்கிறது. அது உங்களுக்குத் தெரியாது.

உடலில் உள்ள ஆழ்ந்த மையப் பகுதிகளை, 'சக்கரங்கள்' என்கிறது யோகம். இவையும் பல பிறவிகளாக உருவாகிச் சேர்ந்து இருப்பவை. இவற்றை அறிந்த ஒருவர், ஒரு சக்கரத்தின் மீது கை வைத்துப் பார்த்தால், அது எவ்வளவு துடிப்போடு இருக்கிறது என்பதை உணரலாம். உங்கள் ஏழு சக்கரங்களின் மீதும் கை வைத்துப் பார்த்தால், உங்களுக்கு அந்த அனுபவம் உண்டா இல்லை என்பது தெரிந்து விடும்.

நூற்றுக் கணகானவரை நான் சோதித்துப் பார்த்திருக்கிறேன். பெரும்பாலோர்க்கு ஒன்றிரண்டு சக்கரங்களே செயல்படுவதைக் கண்டேன். மற்றவை தூங்கிக் கிடந்தன. கடந்த காலத்தில் கூட பெரும்பாலோர் அவற்றைப் பயன்படுத்தவே இல்லை.

யாராவது ஒருவர் என்னிடம் வந்து சோதிக்கையில், அவரது ஏழு சக்கரங்களும் இயங்கிக் கொண்டிருந்தால், இதுவே அவரது கடைசிப் பிறவி; இனியொரு பிறப்பில்லை. இந்தப் பிறவியே அவருக்கு நிர்வாண நிலை. விடுதலை.

மகாவீரரிடம் யாராவது வந்தால், அவரின் அப்போதைய நிலை என்ன என்பதை அவர் அறிந்து கொள்வது வழக்கம்.

சோதிடம் வருங்காலத்தை அறியப் பல வழிகளில் முயன்றது. பொதுவாகப் பயன்படுத்தப்பட்ட வழி, கிரக நிலைகளைக் கொண்டு கணித்தது. இதற்கு ஆதரவாகப் பல சான்றுகள் நாள்தோறும் வந்து கொண்டிருக்கின்றன. கிரகங்களின் பாதிப்பு இல்லாமல் எதுவும் இல்லை என்ற உண்மை தான் இதற்கு ஆதாரம்.

இதில், இரண்டாவது பகுதி தான் முடிவு செய்யச் சிரமமானது. ஒவ்வொரு மனிதனும் தனித்தனியே பாதிக்கப் படுகிறானா என்பது தான் கேள்வி. நானூறு கோடிப் பேரும் தனித்தனியே கிரக பாதிப்புக்கு

உள்ளாகிறார்களா, என்பது தான், விஞ்ஞானிகளுக்குக் கவலை தரும் பிரச்சனையாக இருக்கிறது! ஆனால், அது அப்படித்தான் இருக்க முடியும்.

இயற்கை, மனிதனுக்கு வேறெவரோடும் ஒப்பிட முடியாத கட்டை விரலைத் தந்திருக்கிறது. ஒருவரது கட்டை விரல் ரேகை, வேறு எவருடைய கட்டை விரல் ரேகையோடும் பொருந்தாதபடி நுட்பமான தனித்துவத்தைக் கொண்டிருக்கிறது. பல கோடிப் பேர் முன்பு வாழ்ந்து மறைந்தார்கள். இன்னும் பல கோடிப் பேர் வருங்காலத்திலும் வாழப் போகிறார்கள். ஆனால், என் கட்டை விரல் ரேகை போன்ற ஒன்று, முன் எப்போதும் இருந்ததும் இல்லை; இனி எப்போதும் இருக்கப் போவதும் இல்லை. இப்போதும் இல்லை! ஒரு வகை ரேகை ஒரே ஒரு முறை தான்!

ஒரே கரு முட்டை பிளந்து தோன்றிய இரட்டையரின் பெருவிரல் ரேகைகள் கூட வேறு படுகின்றன என்ற உண்மை உங்களுக்கு வியப்பாக இருக்கும்.

அதிக முக்கியத்துவம் இல்லாத ஒரு கட்டை விரலில் இயற்கை, இவ்வளவு துல்லியமாகத் தனித்தன்மை காட்டுகிறது என்றால், ஒவ்வொரு மனிதனுக்கும் ஏன் தனி வாழ்வு, தனி உயிர் இருக்க முடியாது? இதை மறுக்க வழி எதுவும் இல்லை.

அறிவியல் நிதானமாகவே நகர்கிறது. நல்லதுதான்! அறிவியலுக்கு நிதானமே நல்லது. ஒன்று முழுமையாக நிரூபிக்கப்படும் வரை, அது அங்குலம் கூட முன்னே நகராது. ஆனால், தீர்க்கதரிசிகள் ஒரே தாவுதலில் தாண்டி விடுவார்கள். ஆயிரம் ஆண்டுகளுக்கோ, இலட்சம் ஆண்டுகளுக்கோ பின்னால் என்ன நடக்கும் என்பதை அவர்கள் இப்போதே சொல்லி விடுவார்கள்!

அறிவியல் தான் அங்குலம் அங்குலமாக நகரும். சோதித்தறிந்த உண்மைகளையே அது ஏற்கும். அறிவியல் கனவு காணாது. ஆனால், தீர்க்கதரிசிகள், உண்மைகளைக் கனவுகளிலும் காண்பார்கள். அவர்களுக்கு, எதிர்காலம் என்பது நிகழ் காலத்தின் நீட்சிதான்.

சோதிடம் என்பது எதிர்காலம் பற்றிய ஆராய்ச்சி. அறிவியல், அடிப்படையில், இறந்த காலத்தையே ஆராய்கிறது. இன்றுள்ள எல்லா விளைவுகளுக்குமான காரணத்தைக் கண்டறிய முற்படுவது அறிவியல். இன்றுள்ள எல்லா விளைவுகளுடைய பாதிப்பை ஆராய முற்படுவது சோதிடம். இரண்டிற்கும் இடையில் பெரிய இடைவெளி இருக்கின்றது. ஆனால், அறிவியல், நாள்தோறும் புதிய அனுபவங்கள்,

புதிய கோட்பாடுகள் கண்டறிகிறது. சாத்தியக் கூறாக ஆரம்பித்ததெல்லாம் சாத்தியக் கூறு அல்ல போல் தோன்றுகிறது.

ஒவ்வொரு மனிதனும் உள்ளார்ந்த தனித்தன்மை கொண்டவன் என்பதை, அண்மையில்தான் அறிவியில் ஒப்புக் கொண்டிருக்கிறது. இந்தக் கருத்தை நீண்ட நாளாக அறிவியல் மதிக்கவில்லை; தயக்கம் காட்டியே வந்தது. ஆனால், சோதிடம் எப்போதும் தனித்தன்மையை வலியுறுத்தியே வந்தது. இதைப் புரிந்து கொள்ளுங்கள்...

ஒரு மாங்கொட்டைக்குள், உள்ளார்ந்த செயல் திட்டம் தெளிவாக இருக்கிறது; அடிப்படை வரைபட அச்சு அதில் மறைந்திருக்கிறது. இந்த அம்சம் இல்லாவிட்டால் அந்த விதைக்கு அர்த்தமே இல்லை. அது யாரிடமும் ஆலோசனை கேட்பதில்லை. அது பல்கலைக் கழகத்தில் படித்ததும் இல்லை. என்றாலும் அதிலிருந்து மாஞ்செடி முளைக்கிறது. எப்படி? மாமரமாகி, மாங்கனிகளைத் தான் அது தருகின்றது.

கல்லாய் இறுகிய அந்த வித்துக்குள், முழுச் செயல் திட்டமும் பொதிந்திருக்கிறது. ஒவ்வொரு மரத்தின் விதைக்குள்ளும், அந்த மரம் மறைந்திருக்கிறது. அது நம் கண்களுக்குப் புலப்படுவதில்லை. ஆனால், நிச்சயம் இருக்கிறது. இல்லாவிட்டால், மாங்கொட்டை யிலிருந்து வேப்பமரம் முளைத்து விடும்!

அதில் தவறே ஏற்படுவதில்லை. ஒவ்வொரு மரமும் தன் முழுமையை, செயல்திட்ட வரை படத்தைத் தன் வித்துக்குள் புதைத்து வைத்து விடுகிறது. எப்படித் துளிர் விட வேண்டும் என்ன வகை இலைகள் வளர வேண்டும், எவ்வளவு கிளைகள், எவ்வளவு நீளம், எவ்வளவு உயரம், எவ்வளவு வாழ்நாள் - எல்லாம் விதைக்குள் அடக்கம். எவ்வளவு கனிகள், எவ்வளவு இனிப்பு, பழுக்குமா இல்லையா என்பதெல்லாம் கூட. ஒரு மரத்திற்கே இப்படி யென்றால், தாயின் கருப்பையில் உள்ள வித்தில் ஒன்றுமே இல்லாமற் போகுமா?

அந்த வித்து நிலையிலேயே, உங்கள் விழியின் நிறமும், கூந்தலின் நிறமும், உடலின் உயரமும், வாழ்வின் ஆரோக்கியமும், நோய் நொடியும், புத்திசாலித்தனமும் கூட மறைந்திருக்கிறது என்று இன்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இவையெல்லாம் இல்லாமல் நீங்கள் எவ்வாறு உருவாக முடியும்? எதைக் கொண்டு உருவாவது?

உங்கள் சகல அம்சங்களும் முன் கூட்டியே திட்டமிடப்பட்டு வித்துக்குள் பொதிந்திருக்க வேண்டும். சில எலும்புகள் எவ்வாறு ஒன்று சேர்ந்து கையாகிறது? காலாகிறது? உடலின் ஒரு பகுதி

பார்க்கும் உறுப்பாக உருவாகிறது. இன்னொரு பகுதி கேட்கும் பகுதியாகிறது. இவையெல்லாம் எப்படி?

விஞ்ஞானிகள், இவையெல்லாம் எதேச்சையாக ஏற்படுகின்றன என்றுதான் முன்பு சொல்லிக் கொண்டிருந்தார்கள். 'எதேச்சை' என்ற சொல், அறிவியலுக்குப் புறம்பானது. எதேச்சை என்பது வாய்ப்பு. அப்படியானால் எதேச்சையாகக் கால் ஏன் காணும் தன்மை பெறக் கூடாது? கைகள் கேட்கும் உறுப்புகளாக மாறலாமே! இவையெல்லாம் எதேச்சையால் ஏற்படுபவை அல்ல. ஒவ்வொன்றும் முன் கூட்டி வரையறுக்கப்பட்ட திட்டப்படியே உருவாகின்றன.

மிகவும் அறிவியல் பூர்வமானவற்றையே சோதிடம் சொல்கிறது. வித்துக்குள் எல்லாம் இருக்கிறது என்பது அது. ஒரு விதையை ஆராய்ந்தால், அதன் மொழியை அறிந்து கொண்டால், புரிந்து கொண்டால், 'உன்னுடைய நோக்கம் என்ன?' என்று அதைக் கேட்கலாம். அதன் பிறகு, மனிதனின் ஆதார வரை படத்தைக்கூட வரைந்து விடலாம்.

விஞ்ஞானிகள் தாவர வர்க்கத்தின் மூல அமைப்பை வரையறுத்து வரைந்து காட்டி விட்டார்கள்.

இதுவரை நாம், சோதிடம் ஒரு மூடநம்பிக்கை, குருட்டுத்தனம் என்று நினைத்து வந்தோம். அறிவியல், மூலத்தை வரைந்து விட முடியுமானால், அதுவே சோதிடம் ஆகிவிடும். அந்த வேலையை அறிவியல் ஆரம்பித்து விட்டது.

பரம்பொருளின் கருணையால் நாம் பூரணத்தை அறிய முடியும். அதை அறியும் போது எதிர்காலம் என்பது இல்லாமல் போய் விடும் என்று சோதிடம் சொல்கிறது. ஆனால் நமக்குப் பூரணம் தெரியாது; ஒரு துண்டு துணுக்கு மட்டுமே தெரியும். அதனால், நமக்குத் தெரியாததே எதிர்காலமாய் வருகிறது. 'அது இப்படி இருக்கலாம்' என்று யூகித்துத் தான் நாம் சொல்ல முடியும். முழுமையை அறிந்தால் 'அது இப்படித் தான் இருக்கும்' என்று உறுதியாகச் சொல்லி விடலாம். அது அப்படியே தான் இருக்கவும் செய்யும்.

மனிதக் கரு விதைக்குள் எல்லாம் மறைந்திருக்கின்றன. அதைக் கற்றறிந்தால் போதும். எல்லாம் நமக்குத் தெரிந்து விடும். இன்று இங்கே நான் பேசிக் கொண்டிருப்பதும் கூட, என் கருவில் பதிந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இதையெல்லாம் பற்றி நான் எப்படிப் பேச முடியும்?

என் கருவிதையை ஆராய முடிந்தால், நான் என்ன ஆவேன், என்ன சொல்லப் போகிறேன், எதுவாக நான் ஆக மாட்டேன், என்னென்ன வாழ்வில் முடியும். அப்போது முன்னறிவிப்பாக எல்லாம் சொல்லலாம். இன்றில்லா விட்டாலும் நாளை நாம் விதைக்குள் எட்டிப் பார்த்து எல்லாம் கண்டறியத் தான் போகிறோம். அந்தத் திசையில் முதல் காலடி வைத்தாயிற்று.

சாதகக் குறிப்புகள் எல்லாம் இதை ஆராய்வதின் ஒரு பகுதி தான். பிறந்த குழந்தை வருங்காலத்தில் என்ன ஆகும் என்பதை அறிய, பல்லாயிரம் ஆண்டுகளாக நாம் முயற்சி செய்து வருகிறோம். ஏதாவது ஒரு கருத்துக் கிடைத்து விட்டால், குழந்தைக்கு அந்த வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க உதவுகிறோம்; வாய்ப்புகளை அதிகரிக்கிறோம். அப்புறம் என்ன நடந்தாலும், அதை ஏற்றுக் கொள்ளவும் செய்கிறோம்.

முல்லா நஸ்ருதீன் வாழ்வின் இறுதிக் கட்டத்தை அடைந்து விட்டார். எப்போதும் குற்றம் குறைகள் சொல்லிக் கொண்டிருந்த அவர், சட்டென ஒரு நாள் மகிழ்ச்சியுடன் காணப்பட்டார். அதைக் கண்டு ஊரே ஆச்சரியப்பட்டது!

எப்போதும் எதிரிடையாகப் பேசி, வாழ்வின் இருண்ட மறுபக்கத்தையே பார்த்துக் கொண்டிருந்த அவருக்கு என்ன நேர்ந்தது? சலிப்பும், வெறுப்புமாய், முட்களைத் தேடியவராயிற்றே? எப்படி இப்படி மாறினார் என்று ஊரார் திகைத்தனர்.

முன்பு ஒரு முறை, முல்லாவின் தோட்டத்தில் ஆப்பிள் கனிகள் வளமுடன் கொத்துக் கொத்தாய்த் தொங்கின. எல்லாவற்றிலும் குற்றம் குறையே காணும் முல்லா, இப்போது ஏன் ஒன்றும் சொல்லவில்லை என்று நினைத்த ஒருவர், அவரிடம் வந்து, ''இந்த முறை தங்கமாய்க் கனிகள் காய்த்துக் தொங்குகின்றன. என்ன நினைக்கிறீர் நஸ்ருதீன்?'' என்று கேட்டார்.

முல்லா நஸ்ருதீன், மிகுந்த கவலையுடன், ''எல்லாம் சரிதானப்பா. வளர்ப்புப் பிராணிகளுக்குப் போட, அழகிய ஆப்பிள்களுக்கு நான் எங்கே போவேன்?'' என்றாராம்.

நன்றாகக் காய்த்தும் கவலைப்பட்டவர் அவர்.

அப்படிப்பட்டவர் மகிழ்ச்சியுடன் காணப்பட்டால்!

அவரிடம் வந்து நேரிலேயே கேட்டு விட்டார்கள்.

''மகிழ்ச்சியாக இருக்கிறீரே நஸ்ருதீன். இதன் இரகசியம் என்ன?'' என்று கேட்டார்கள்.

''தவிர்க்க முடியாதவற்றோடு நான் சமரசம் செய்து கொண்டு விட்டேன். பல ஆண்டுப் போராட்டத்திற்குப் பிறகு இதை நான் கண்டு கொண்டேன். வாழ்வில் என்ன நடக்க வேண்டுமோ, அதுதான் நடக்கும். அதனால், தவிர்க்க முடியாமல் எது வந்தாலும், அந்தச் சூழலோடு ஒத்துப் போக முடிவு செய்து விட்டேன். இனி எனக்கு எந்தக் கவலையும் இல்லை. அதனால் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறேன்,'' என்றார் அவர்!

சோதிடம் பலவற்றை ஆராய்ந்து கொண்டிருக்கிறது. தவிர்க்க முடியாமல் எது நிகழ்ந்தாலும் அதற்கு ஆதரவுக்கரம் நீட்டுகிறது. இருப்பதற்கு எதிராக அது மோதுவதில்லை. இல்லாத ஒன்றை அது தேடிப் போவதும் இல்லை.

மனிதனை மதப் பற்றுள்ளவனாக்கும் வழிமுறை சோதிடம். இருப்பதை அப்படியே ஏற்கும் அதிகபட்ச மனநிலையை அது வழங்குகின்றது. அதற்குப் பல பரிமாணங்களும், பல அம்சங்களும் உண்டு.

ஒவ்வொரு பரிமாணத்தையும் எடுத்து, நாம் படிப்படியாக ஆராயலாம். இன்று இதை நினைவில் வையுங்கள்; இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஓர் உடல். பல உறுப்புகள் ஒற்றுமையுடன் இயங்கும் உயிருள்ள ஒருடல். இதில் எதுவும் தனியாக இல்லை. எல்லாமே ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டவை. வெகு தூரத்தில் இருப்பதும், மிக அருகில் இருப்பதோடு தொடர்பு கொண்டது. எதுவும் தனித்தில்லை.

ஒவ்வொரு மனிதனும் பரிந்து நிற்கும் தனித்தீவு என்று யாரும் தவறாகக் கருதிவிடக் கூடாது. ஒவ்வொருவரும் பூரணத்தோடு பிணைப்புண்டிருப்பவர். மற்றவற்றால், மற்றவரால் பாதிக்கப்படுவது போலவே, ஒவ்வொருவரும், மற்றவர்களை, மற்றவற்றைப் பாதிக்கவே செய்கிறார்.

சாலையில், ஒரு கல்லைக் கடந்து போகையில், தெரு ஓரத்தில் கிடக்கும் அந்தக் கல், தன் அதிர்வுகளை உங்களை, நோக்கி வீசும். மலர்களும் கூட, தம் அதிர்வுகளை வீசவே செய்கின்றன. நீங்களும் சும்மா கடந்து போய்க் கொண்டிருக்கவில்லை. நீங்களும் உங்கள் அதிர்வுகளை வீசிக் கொண்டே தான் போகிறீர்கள்.

நிலாவினாலும், விண்மீன்களாலும் நாம் பாதிக்கப்படுகிறோம் என்று குறிப்பிட்டேன். அவை நம்மாலும் பாதிப்பை அடைகின்றன என்று சோதிடம் சொல்கிறது. பாதிப்பு என்பது இரண்டு பக்க செயல்பாடு.

புத்தரைப் போல் ஒருவர் பிறந்தால், நிலாவே அடங்கிப் போகும். அலைகள் பொங்காமல் அடக்கமாய் வீசும். தன்னால் தான் எல்லாம் என்ற நிலாவின் கர்வம் அடங்கும். புத்தரால் புயலும் அடங்கும். அப்படிப்பட்ட மகான்களால் திங்களும் பாதிப்படையும், ஞாயிறும் நெகிழும்!

ஞாயிற்றின் மேற் பரப்பில் கரும்புள்ளிகள் தோன்றும் போது, புயல்கள் பூமியில் புறப்படுகின்றன. நோய் நொடிகள் பூமி எங்கும் பெருகுகின்றன.

புத்தரைப் போன்ற ஒருவர் பூமியில் பிறந்தால், சமாதானப் பெரு வெள்ளம் பாய்கின்றது. பிரக்ஞையின் தூண் இறுகி வலிமை பெறுகின்றது. தியானத்தின் அழகு பூமி எங்கும் பரவுகின்றது. இவையெல்லாம் இங்கு நிகழும் போதில், கதிரவனில் புயல்கள் தோன்றுவது சிரமமாகி விடுகிறது.

ஒரு சின்னப் புல்லின் இதழும், கதிரவனைப் பாதிக்கக் கூடியது தான். கதிரவனும் புல்லைப் பாதிக்கவே செய்கிறான். புல்லின் இதழ் அற்பமென்று கருதிக் கதிரவன் அதைப் பார்த்து, ''நீ எனக்கு ஒரு பொருட்டே அல்ல,'' என்றோ, ''ஓர் அற்பப் புல், என்னை என்ன செய்து விட முடியும்?'' என்றோ, சொல்ல முடியாது.

வாழ்வு பரிமாற்றத் தொடர்பு கொண்டது. இங்கே எதுவும் பெரியதும் இல்லை; எதுவும் சிறியதும் இல்லை. எல்லாமே உள்ளார்ந்த ஒற்றிணைப்புக் கொண்டவை.

வாழ்வு முழுமையானது. இந்த முழுமையை உணர்ந்து கொண்டால்தான் சோதிடத்தைப் புரிந்து கொள்ள முடியும். இல்லாவிட்டால் இயலாது.



சில விஷயங்களைப் புரிந்து கொள்வது இங்கே அவசியமாகிறது. அறிவியல் நோக்கில் பார்க்கும் பொழுது, சூரியக் குடும்பம் முழுவதும் கதிரவனிலிருந்து பிறந்தது என்பது விளங்கும்.

நிலாவும், செவ்வாயும், வியாழனும் மற்ற கிரகங்களும், பூமி உட்பட, கதிரவனின் உடல் உறுப்புக்கள் எனலாம். பூமியில் மெதுவாக உயிர்கள் தோன்றின — தாவரத்திலிருந்து மனிதன் வரை.

மனிதன், பூமியின் உள்ளார்ந்த உறுப்பு. பூமி கதிரவனின் உள்ளார்ந்த உறுப்பு. தாய்க்கு ஒரு மகள். அந்த மகளுக்கும் ஒரு மகள் இருப்பது போல இது. இந்த மூவரும் ஒரே இரத்தம். இவர்கள் மூவரின் உடல்களும் ஒரேவகை செல்களால் ஆனவை.

உணர்வுக் கலப்பைக் குறிக்க விஞ்ஞானிகள் 'எம்பதி' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்கள். இவை எல்லாம் ஒன்றிலிருந்தே பிறந்திருப்பதால், தம் உள் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்கின்றன.

கதிரவனிலிருந்து பூமி. பூமியிலிருந்து நம் உடல்கள் தோன்றின. தூரத்துக் கதிரவன் நம் பாட்டனார். கதிரில் ஏற்படுவன எல்லாம், நம் உடலின் 'செல்' (கண்ணறைகள்) களில் அதிர்வுகளை உண்டு பண்ணுகின்றன.

கதிரவன் வெகு தொலைவில் இருப்பது போல் தோன்றுகிறது. ஆனால், அப்படியல்ல. நமது உடலின் ஒவ்வொரு அம்சமும், இரத்தத்தின், எலும்புகளின் ஒவ்வொரு அணுவும், கதிரவனால் உயிர்த்துடிப்புப் பெறுகின்றன. நாம் அதன் பகுதி என்பதால் இப்படி. இதில் வியப்பு எதுவும் இல்லை. கதிரவனுக்கும் நமக்கும் இடையில் உணர்வுக் கலப்பு உண்டு. இதைப் புரிந்து கொண்டால், நாம் சோதிடத்தின் ஒரு பரிமாணத்திற்குள் பிரவேசித்து விடலாம்.

இரட்டையரைப் பற்றி முன்பு குறிப்பிட்டேன். ஒரே ஒரு கரு முட்டையில் உதித்த இரட்டையரைப் பிரித்துத் தனித்தனி அறைகளில் வைத்துச் சோதனை நடத்தினார்கள். கடந்த ஐம்பது ஆண்டுகளில் இவ்வகைச் சோதனைகள் நிறைய நடந்திருக்கின்றன.

இவ்வகை இரட்டைக் குழந்தைகளைத் தனி அறைகளில் பிரித்து வைத்தார்கள். ஒரு மணி அடித்தால் இரு அறைகளிலும் உள்ள குழந்தைகள் ஒரு சொல்லோ, படமோ எழுத வேண்டும். பல முறை இந்தச் சோதன செய்து பார்த்ததில், இரு அறைகளிலும் இருந்த இரட்டையர் ஒன்று போலவே எழுதினார்கள். தொண்ணூறு சதவிகிதம் ஒன்று போலவே சிந்திப்பது தெரிந்தது.

இந்த ஒற்றுமையைத்தான் 'எம்பதி' என்று விஞ்ஞானிகள் குறிப்பிடுகிறார்கள். இரட்டையருக் கிடையில் ஒரு வகை அதிர்வுகள். அவர்களுக்குள் ஏதோ ஒரு வகை உள் தொடர்பு, உள் உரையாடல் இருக்கிறது. அது, நாமறியாத ஏதோ ஒரு ஊடகத்தின் மூலம் இருவருக்கிடையில் பாய்ந்து கொண்டிருக்கிறது.

கதிரவனுக்கும் பூமிக்கும் இடையிலும் இதே வகைத் தொடர்பு, பாலம் உண்டு. இந்தப் பாலத்தின் வழியாக எல்லாத் தகவல்களும் வந்து போய்க் கொண்டிருக்கின்றன. இதே போலத்தான் பூமிக்கும் மனிதனுக்கும் இடையில். மனிதன், பூமி, கதிரவன் - எனத் தகவல் தொடர்புகள் இடைவிடாமல் நடை பெறுகின்றன. ஆனால், இந்தத் தொடர்பு இரகசியமானது. நுட்பமான முறையில் உள்ளே நடந்து கொண்டிருப்பது. இதைப் பற்றி இன்னும் சில விபரங்களை விளங்கிக் கொள்ள முயல்வோம்.

அமெரிக்காவில், 'மர வளைய ஆராயச்ச்சிக் கழகம்' என்று ஒன்று இருக்கிறது. மரத்தைக் குறுக்காக வெட்டினால், உள்ளே பல வளையங்கள் காணப்படும். மேசை நாற்காலிகளில் காணப்படும் அழகான கோடுகள் இந்த வளையங்களின் பகுதிகள் தாம். இது பற்றி கடந்த ஐம்பது ஆண்டுகளாக ஆய்வுகள் நடந்து வருகின்றன.

பேராசிரியர் டக்ளஸ், தாம் வாழ்வையே இதற்காக அர்ப் பணித்தவர். இந்த வளையங்களை வைத்து மரத்தின் வயதைக் கணக்கிடலாம் என்றுதான் நாம் பொதுவாக நினைக்கிறோம்.

ஒவ்வொரு ஆண்டும் ஒரு புது வளையம் உள்ளே உருவாகும். ஒரு மரத்திற்கு வயது ஐம்பது என்றால், அந்த மரம் ஐம்பது இலையுதிர் காலங்களைக் கண்டு விட்டதாகப் பொருள். அதன் உள்ளே ஐம்பது வளையங்கள் இருக்கும்.

இதில் வியப்பான அம்சம் என்னவென்றால், குறிப்பிட்டதொரு ஆண்டில், பருவ காலங்கள் எப்படி இருந்தன என்பதையும், அந்த வளையங்கள் தெரிவிக்கின்றன. ஒரு கோடைக் காலம் மிக வெப்பமாகவும், மழைக் காலம் அதிக மழை கொண்டதாகவும் இருந்திருந்தால் வளையம் பெரிதாக இருக்கும். எப்போது அடை மழை பெய்தது, எப்போது வரட்சி நிலவியது, எப்போது குளிர் அதிகமாக இருந்தது என்பதை யெல்லாம் தெரிந்து கொள்ளலாம்.

இந்த ஆண்டில் நல்ல மழை பெய்தது என்று புத்தர் சொன்னால், அதைப் போதி மரம் உறுதிப் படுத்தி விடும். புத்தர் தவறாகச் சொன்னாலும், போதி மரம் தவறு செய்யாது. அந்த ஆண்டின் பருவ நிலைக்கு ஏற்ப, உள் வளையம் அகன்றோ, குறுகியோ காணப்படும்.

ஆய்வுகளின் போக்கில், சற்றும் எதிர் பாராத ஓர் உண்மையைப் பேராசிரியர் டக்ளஸ் கண்டு பிடித்தார். ஒவ்வொரு பதினோரு ஆண்டுகளுக்கும் ஒரு முறை, வளையங்கள் அகன்று காணப்பட்டன! ஒவ்வொரு பதினோரு ஆண்டுக் காலத்திலும் கதிரவனில் அதிகப்படியான அணு இயக்கம் நிகழ்வதும், கதிரவன் அதிகத் துடிப்புடன் ஆவதும் நமக்குத் தெரியும்.

ஒரே கால அளவு இடைவெளியில், கதிரவன் உச்ச நிலை வெப்பத்தை வெளிவிடுகின்றது. அந்தக் காலகட்டத்தில் மரத்தில் உள்ள வளையம் பெரிதாக அமைகிறது. ஒரு காட்டில் மட்டுமல்ல. உலகம் முழுவதிலுமுள்ள எல்லாக் காடுகளிலும் அப்படித்தான். கதிர் வீச்சிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள, மரங்கள் தடுப்பு

நடவடிக்கை மேற் கொள்கின்றன! கதிரவன் அந்த ஆண்டு அதிக வெப்பத்தை வெளிவிடுவதால், மரம் அப்போது கெட்டியாக மாறித் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறது!

இந்த நிகழ்விற்கு, விஞ்ஞானிகள், 'உலகளாவிய பருவநிலை' என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். பருவ காலங்கள், வெவ்வேறு இடங்களில் வேறாக இருக்கும். ஓரிடத்தில் மழை பெய்கையில், மற்றோரிடத்தில் வெயில் காயும். உலகளாவிய ஒரே பருவ நிலை முன் எப்போதும் இருந்ததில்லை. அதனால் தான் பேராசிரியர் அந்தச் சொல்லால் அதைக் குறிப்பிட்டார்.

நாம் அதைக் கவனிக்கவில்லை. ஆனால், மரங்களுக்கு அது தெரியும். அந்தப் பதினோராவது ஆண்டுக்குப் பிறகு, ஒவ்வொரு ஆண்டும் வளையங்கள் குறுகிக் கொண்டே வரும். ஐந்தாண்டுகளுக்குப் பிறகு, அவை மெல்ல மெல்லப் பெரிதாகிக் கொண்டே போகும், அடுத்த பதினோராவது ஆண்டு வரை.

மரத்தில் பாதிப்பின் சுவடுகள் இருப்பது போல, மனிதனின் மூளையிலும் அவ்வகைச் சுவடுகள் இருக்க வேண்டும்... மனித உடல் நுட்பமான உணர்வுகள் கொண்டதால், கதிரவனில் ஏற்படும் கொந்தளிப்புகள் மனித உடலைப் பாதிக்கவே செய்யும். இதுவரை அதைக் கண்டு கொள்ள முடியாவிட்டாலும், உடலில் அது பதிவாகவில்லை என்று சொல்ல முடியாது.

பிரபஞ்சத்தில் எங்கே எது நிகழ்ந்தாலும், அது மனிதனைப் பாதிக்கும் என்பதை ஆராய்வதுதான் சோதிடம். ஆனால், அது எளிதல்ல. மரத்தைப் போல, வெட்டிப் பார்க்க முடியுமா என்ன?

உடலின் அனுபவங்கள் மூளையில் தான் பதிவாகின்றன. மரத்திற்கு மனம் இல்லை. அதனால், அதன் உடல், பதிவுகளை ஏற்கின்றது.

இன்னொரு அம்சத்தையும் கவனிக்க வேண்டும். பதினோரு ஆண்டுகளுக்கு ஒரு முறை, கதிரவனில் கொந்தளிப்புகள் ஏற்படுவது போல, தொண்ணூறு ஆண்டு இடைவெளிகளிலும் ஒரு மாற்றம் நிகழ்ந்து வருகிறது.

இந்த உண்மை அண்மையில் தான் கண்டறியப்பட்டது. இது ஓர் அறிவியல் உண்மை. முறை தவறாமல் நடந்து வரும் உண்மை. இது பற்றிச் சோதிடர்கள் எதுவும் குறிப்பிடவில்லை. அறிவியல்

அடிப்படையில் சோதிடத்தை அணுகினால், உண்மைகளை எளிதாக அறியலாம் என்பதற்காக, இதை நான் குறிப்பிடுகிறேன். இந்தத் தொண்ணூறாண்டுச் சுழற்சி நிகழ்ந்தே வந்திருக்கிறது. அந்தக் கதை திகைப்பூட்டக் கூடியது.

நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு எகிப்திய பாரோ மன்னர், நைல் நதியின் வெள்ளம் கூடிக் குறையும் காலங்களைக் குறித்து வைக்குமாறு, விஞ்ஞானிகளிடம் கூறினார்.

இந்த உலகிலேயே நைல் நதிக்கு மட்டுமே 'வாழ்க்கை வரலாறு' இருக்கின்றது! ஒரு அங்குலம் நீர் மட்டம் குறைந்தாலும், கூடினாலும் கூட, அந்த நாளைக் குறித்து வைக்க ஆரம்பித்தார்கள். பாரோ மன்னர்கள் காலம் தொடங்கி, இன்று வரை, நான்காயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இது நடந்து வருகிறது.

'பாரோ' என்பது எகிப்திய மன்னர்களைக் குறிக்கும் பொதுப் பெயர். இதன் பொருள்: கதிரவன்!

கதிரவனும் நைல்நதியும் தொடர்ந்து பேசிக் கொண்டிருப்பதாக எகிப்தில் ஒரு நம்பிக்கை உண்டு. அதனால்தான் சூரிய புத்திரர்களாகிய பாரோக்கள் நைல் நதி வெள்ள நிலையைக் குறிக்கச் சொன்னார்கள். 'கதிரவனைப் பற்றி இன்று எதுவும் எங்களுக்குத் தெரியாது. ஆனால், இந்த நைல் நதிப் பதிவுகள் கொண்டு, பிற்காலத்தில் ஏதாவது கண்டு பிடிக்கலாம்,' என்றும் அவர்கள் குறித்து வைத்திருக்கிறார்கள்!

டாஸ்மான் என்ற எகிப்து அறிஞர் நைலின் வரலாற்றைத் தொகுத்தார். பாரோக்களின் காலத்தில் தெரியாத உண்மை இப்போது தெரிந்தது. நைல் நதியின் வெள்ள நிலைக்கும், கதிரவனில் ஏற்பட்ட நிகழ்வுகளுக்கும் தொடர்பு இருந்தது. தொண்ணூறு ஆண்டு இடைவெளியில், சில நிகழ்வுகள் தொடர்ந்து ஏற்பட்டு வந்தது, நைலின் பதிவுகளிலிருந்து உறுதிப்பட்டது. நாம் சொல்லும் ஜனன மரணத்திற்குச் சமமானது இது.

கதிரவன் நாற்பத்தைந்து ஆண்டுகள் இளமையோடு இருக்கிறான். அப்புறம், அடுத்த நாற்பத்தைந்து ஆண்டுகளில் அதன் வலிமை சரிந்து போகிறது. முதற் பாதியில் சக்தி ஏற்றம். அடுத்த பாதியில் சக்தியின் சரிவு. மனித உடல் போலத்தான். தொண்ணூறு ஆண்டுகளில் கதிரவன் முதுமை அடைந்து விடுகிறது!

பிற்பகுதி நாற்பத்தைந்தாண்டுக் காலத்தில்தான், பூமியில் நிலநடுக்கங்கள் ஏற்படுகின்றன. தொண்ணூறாண்டுச் சுழற்சிக்கும் நில

நடுக்கத்திற்கும் தொடர்பு உண்டு. தொண்ணூறாண்டு முடிந்ததும், கதிரவன் மீண்டும் புத்துயிர் பெற்றுப் புதுப்பிறவி எடுத்து விடுகிறது.

முக்கியமான காலச் சுழற்சி இது. கதிரவனில் ஏற்படும் பெரிய மாற்றங்கள் பூமியைக் குலுக்குவது இயற்கைதான். பெரிய உடலான பூமியே பாதிக்கப்படும் போது, சிறிய உடல் எவ்வாறு பாதிக்காமல் போகும்? இந்த வினாவைத்தான் சோதிடர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

உடல் பாதிப்படையாமல் இருக்க முடியாது என்று அவர்கள் சொல்கிறார்கள். கதிரவன் வளர்ந்து வரும் முதற் கால கட்டத்தில் பிறக்கும் குழந்தைகள், ஆரோக்கிய வாழ்வைப் பெறுவார்கள். கதிரவன் முதுமை அடைந்து கொண்டிருக்கும் அடுத்த பகுதிக் காலத்தில் பிறக்கிறவர்கள் நல்ல உடல் வளத்தோடு இருக்க மாட்டார்கள்.

கதிரவன் வளரும் பிற்பகுதியில் பிறந்தவர்கள், காற்று மேற்கு நோக்கி வீசும் போது, கிழக்கு நோக்கிப் பயணம் செய்யும் பாய்மரக் கப்பல் போன்றவர்கள். கப்பல் செலுத்த மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கும். பாய் மரங்கள் பயன்படாமல் போகும். எதிர் நீச்சல் போடுவது போலச் சிரமப்பட வேண்டும்.

கதிரவன், சூரியக் குடும்பத்தின் மகாசக்தி மையம். அது தளரும் கால கட்டத்தில், இளைஞனாக இருப்பவன் எதிர் நீச்சல் போட்டே முன்னேற வேண்டிய வரும். பெரும் சிரமங்களை அவன் எதிர் கொள்வான்.

கதிரவன் உச்ச நிலை ஆற்றலில் இருக்கும் போது, சூரியக் குடும்ப கிரகங்கள் சக்தி நிரம்பப் பெற்று, உயர்நிலை நோக்கிச் செல்லும். அப்போது பிறப்பவர், காற்றின் திசைக்கேற்பச் செல்லும் பாய்மரக் கப்பல் போல் ஆவார். சிரமங்கள் இல்லாமல் முன்னேறிச் சிகரங்களைத் தொடுவார்.

அந்தக் கால கட்டத்தில் பூமியில் நோய் நொடிகள் மிகக் குறைந்து விடுகின்றன. அதனால், பூமியில் நாற்பத்தைந்து ஆண்டுகள் நோய்கள் குறைந்தும், அடுத்த நாற்பத்தைந்து ஆண்டுகள் நோய் நொடிகள் மிகுந்தும் இருக்கும்.

கதிரவன் வளரும் முற்பகுதியில், நைல் நதியின் நீர் மட்டம் உயர்வதும், மறுபகுதிக் காலத்தில் குறைவதுமாக இருந்திருக்கிறது.

மனிதன் ஒரு தனித்தீவு அல்ல; மாபெரும் பூரணத்தின் ஒரு பகுதி.

பூமி கணக்கிடுவது போல், நமது நவீன கடிகாரங்களும் கணக்கிடுவதில்லை. பூமி, தன் அச்சில், ஒரு முறை சுற்ற, இருபத்து மூன்று மணி, ஐம்பத்தாறு நிமிடங்களை எடுத்துக் கொள்கிறது. இந்தக் கணக்கை வைத்துத்தான், ஒரு நாளுக்கு இருபத்து நான்கு மணிநேரம் என்று நாம் கணக்கிட்டிருக்கிறோம்.

இந்தச் சுழற்சிக்காகப் பூமி, ஒரு வினாடி நேரத்தைக் கூட அதிகமாகவோ, குறைவாகவோ, இதுவரை எடுத்துக் கொண்டதே இல்லை. அதைச் சரிபார்க்கக் கூட நம்மிடம் துல்லியமான கருவிகள் இல்லை. சுமாராகவே சொல்கிறோம். ஆனால், கதிரவனின் தொண்ணூறு ஆண்டின் காலகட்டம் முடிந்து, மறு வாழ்வு தொடங்கும் வேளையில் பூமிக்கடிகாரம் தடுமாற்றம் அடைகிறது!

பதினோரு ஆண்டுக்கு ஒரு முறை, பூமியின் அணுக்கதிர்வீச்சு அதிகரிக்கும் வேளையிலும், பூமிக் கடிகாரம் தடுமாறுகிறது. இதன் உள் இயக்கமும், ஒழுங்கு முறையும் குழப்பமடைகின்றன. விண்மீன் ஒன்றின் தாக்கமோ, விண்வீழ் கொள்ளி அருகில் வருவதோ ஏற்படும் போதும், பூமியின் சுழற்சி தடுமாறும். ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருப்பதால், தொலை தூரத்தில் இருப்பவை உண்மையில் அருகில் இருப்பவையே. அவை கட்புலனாகாத தொடர்பு கொண்டிருப்பவை.

இதை விளக்க, குறிப்பிட, நம் மொழிகளுக்கு ஆற்றல் இல்லை. ஒரு விண்மீன், சற்றுக் கதிரவனை நோக்கி நெருங்கி வருகிறது என்று சொல்லும் போது, ஒரு ஆள், இன்னொருவரை நெருங்கிச் செல்வது போல, என்றே நினைக்கிறோம். ஆனால், அந்த இடைவெளி மிகப் பெரிது.

விண்வெளியில் ஏற்படும் மிகச் சிறிய மாற்றமும் பூமியின் அச்சாணியைப் பாதிக்கிறது. அதாவது, சுழற்சியை. அது நமக்குப் புலப்படுவதில்லை. பூமியை இடையூறு செய்ய மிகப் பெரும் ஆற்றல் தேவைப்படும். பூமியின் ஓர் அங்குல நகர்ச்சிக்கும் கூட, பிரபஞ்சப் பொருள்கள், பூமியின் சுற்றுப் பாதைக்கு அருகே வர வேண்டும்.

அவ்வாறு அவை பூமியைக் கடந்து போகும் போது, நம்மையும் கடந்துதான் போகின்றன. பூமி நடுங்கும் போது, இதன் மேல் வளரும் மரங்களும் குலுங்காமல் இருக்க வழியில்லை. அப்போது, பூமியில் நடமாடும் மனிதர்களும் இடையூறு படாமல் இருக்க முடியுமா?

எல்லாமே நடுங்கும்; அசையும். ஆனால், மிக நுட்பமாக அதை அளக்க நம்மிடம் கருவிகள் இல்லை. ஆனால், இப்போது, ஒரு

வினாடியில் ஆயிரத்தில் ஒரு பங்கு நேரத்தைக் கூட அளக்கும் கருவிகள் வந்து விட்டன. ஆனால், மனித உடல் அதிர்வுகளை அளக்கத்தான் முடியவில்லை. அவை இன்னும் கண்டு பிடிக்கப் படவில்லை.

மனிதன் மிக நுட்பமான பிராணி. இப்படி இருப்பது தான் சரி. இல்லாவிட்டால் பூமியில் வாழ முடியாது. பிரபஞ்ச வெளியிலும், பூமியின் மேலும் நிகழும் எல்லாவற்றையும் அவன் உணர முடியுமானால், அவனால் உயிர் வாழவே முடியாது. நம்மைச் சுற்றிலும் நிகழ்வதை யெல்லாம் நாம் உணர முடியாமல் இருப்பதால் தான் நம்மால் உயிர் வாழவே முடிகிறது.

இன்னொரு விதியும் இருக்கிறது. ஓர் எல்லைக்கு மேலும், கீழும் நிகழும் பாதிப்புகளை நம்மால் உணர முடியாது என்பதுதான் அந்த விதி. நமது அனுபவங்களுக்கு ஓர் எல்லை உண்டு. நமது உடல் வெப்ப அளவு, குறைந்த பட்சம் 98 டிகிரியாகவும், அதிக பட்சம் 110 டிகிரியாகவும் உள்ளது. அப்படியானால் நாம் வாழ்வது 12 டிகிரி இடைவெளிக்குள் தான்.

98க்குக் கீழே போனாலும், 110க்கு மேலே போனாலும் மரணம். பிரபஞ்சத்தின் வெப்ப அளவும் இதே 12 டிகிரி இடைவெளிக்குத் தானா?

இந்த 12ஐத் தாண்டினால் மரணம். இதற்குள் அவன் ஊசலாடி வாழ்ந்து கொண்டிருக்கிறான். இதே போல ஒவ்வொன்றிற்கு ஓர் அளவு இடைவெளி இருக்கிறது.

நான் பேசுகிறேன். நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நான் மிகத் தாழ்ந்த குரலில் பேச ஆரம்பித்தால், நீங்கள் கேட்க முடியாத ஒரு கட்டம் வரும். இது உங்களுக்குப் புரியும். உங்களுக்குப் புரியாத இன்னொன்று இருக்கிறது. மிகப் பிரம்மாண்டமான ஒலிகளையும் நம்மால் கேட்க முடியாது! மிகப் பெரிய ஓசையை நாம் ஏன் கேட்க முடிவதில்லை என்பது பெரிய ஆச்சரியம் தான்!

நமது கேள்வி ஆற்றல் ஒரு எல்லைக்குட்பட்டதாக இருப்பதால் தான் அப்படி என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அவ்வகை மாபெரும் முழக்கங்கள் நம்மைச் சுற்றிலும் ஏற்பட்டு கொண்டே தான் இருக்கின்றன. ஆனால், நம்மால் அதைக் கேட்க முடிவதில்லை.

விண்மீன்கள் தகர்ந்து போனாலோ, புதிய விண்மீன்கள் பிறந்தாலோ, பிரம்மாண்டமான ஓசைகள் பிறக்கும். அவை பூமியருகிலும் கேட்கும். அதை நாம் கேட்க முடியுமானால், உடனே

நாம் செவிடாகி விடுவோம். அதைக் கேட்க முடியாமல் போவதாலேயே நம் காதுகள் பாதுகாப்புடன் இருக்கின்றன. நமது செவிப்புலன் ஒரு எல்லைக்குள்தான்.

மணமும் அப்படித்தான்; எல்லைக்குள் அடங்கியது. நம்மை விட நாய்கள் அதிக மோப்ப சக்தியுடையன. அது உணரும் வாசனையை நம்மால் அறிய முடியாது. நம்மால் கேட்க முடியாத ஓசையை ஒரு குதிரை கேட்டு விடும். ஒன்றரை மைல் தூரத்திற்கு அப்பால் சிங்கம் வருவதைக் குதிரை, வாசனையால் அறிந்து கொண்டு விடும். நம்மால் அது முடியாது. நாம் ஒரு வகைக் கூட்டுக்குள் இருக்கிறோம்.

வானொலியில் பல ஊர்களின் ஒலிபரப்புகளைக் கேட்கலாம். பொத்தானை அழுத்திய பிறகுதான் அதில் இசை பிறந்ததா? நாம் திறந்தாலும், திறக்காவிட்டாலும், பல ஊர்களின், பாட்டும், பேச்சும், அலைகளாக அலைந்து கொண்டுதான் இருக்கின்றன, எங்கும். வானொலி மூலமே அவற்றைக் கேட்க முடிகிறது.

எல்லா நாடுகளின் வானொலி ஒலிபரப்புகளும் நம் அறையில் தொடர்ந்து அலையடித்துக் கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் கேட்க முடிவதில்லை. வானொலி பாடாத போதும் அவை அங்கே இருக்கவே செய்கின்றன.

இந்த உலகில் நம்மைச் சுற்றி ஏராளமான ஒலிகள். ஒரே ஆரவாரம் தான். என்றாலும் நாம் கேட்பதில்லை. என்றாலும், அவற்றின் பாதிப்பிலிருந்து நம்மால் தப்ப முடியாது. நமது, தசை நார், நரம்பு, இதயத் துடிப்பு - எல்லாவற்றையும் அவை பாதித்துக் கொண்டே இருக்கின்றன. நமது கவனத்திற்கு வராமலேயே, நம்மைத் தாக்கிக் கொண்டிருக்கின்றன பல அம்சங்கள்.

நம் மூக்கு உணராத சில வாசனைகள் நமக்கு நோயைக் கொண்டு வந்து விடுகின்றன. அவை வாழ்வதற்கு, உங்கள் அங்கீகாரம் தேவையில்லை.

நம்மைச் சுற்றிலும் பல சக்திப் புலங்கள் நம்மைப் பாதித்துக் கொண்டே இருப்பதாக, சோதிடம் கூறுகிறது. குழந்தை பிறந்தவுடனே, பூமியின் சகல தாக்கங்களுக்கும் அது உள்ளாகிறது. அறிவியல் மொழியில் சொன்னால், பிறப்பு என்பது, 'பாதுகாப்பற்ற வெளிப்பாடு.'

கேமராவில், வெளிப்படாத, பதிவாகாத படச் சுருள் இருக்கிறது. பொத்தானை அழுத்தியதும், வினாடிக்கும் குறைவான நேரத்தில், ஒரு

அடைப்பு, திறந்து மூடிக் கொள்கிறது. அதன் முன்னால் இருக்கும் காட்சி உள்ளே புகுந்து பதிந்து விடுகிறது. படச் சுருளின் ஒரு பாகத்தில் அதை மேலே நகர்த்தி விட்டே, அடுத்த படம் எடுக்கிறோம். பிலிம், காட்சியை நிரந்தரமாகப் பற்றிக் கொள்கிறது.

அதே போல, கருப்பையில் இருப்பதே, குழந்தையின் முதல் பதிவு; படப்பிடிப்பு! குழந்தை வெளியே பிறப்பது, இரண்டாவது படப்பிடிப்பு! அதாவது, இரண்டாவது வெளிப்பாடு. இந்த இரண்டு பதிவுகளும், குழந்தையின் மனதில், நன்றாகப் பதிவாகி விடுகின்றன. உலகம் எப்படி இருக்கிறதோ, அப்படியே பதிந்து விடுகிறது. அந்த நேரத்தில்தான், 'எம்பதி' என்ற உணர்ச்சிக் கலப்பு ஏற்படுகின்றது.

90% மக்கள் இரவில்தான் பிறக்கிறார்கள்! கணித முறைப்படி, இரவிலும், பகலிலும் சரி சமமாகவே பிறப்பு ஏற்பட வேண்டும். நான்கைந்து சதவிகிதம் இப்படியும் அப்படியும் இருக்கலாமே தவிர, 90% இரவில் பிறப்பது என்பது எப்படி? பகலில் பிறப்பு 10% என்பது ஏன்? இதற்குக் காரணம் இருக்க வேண்டும்.

ஒன்றல்ல, பல காரணங்கள் இருக்கின்றன. அவற்றை விளக்குகிறேன்...

இரவில் பிறக்கும் குழந்தையின் முதல் உலக அனுபவம் ஒளியல்ல; இருள்!

இது ஆழமான விஷயம் என்பதால், சான்றுடன் விளக்க விரும்புகிறேன். அப்போது கதிரவன் இல்லை. அதன் சக்தி இல்லை. எங்கும் உறக்கம். இதுதான் குழந்தையின் முதல் பதிவு.

இதற்கான காரணத்தை, புத்தரிடமோ, மகாவீரரிடமோ கேட்டால், உறங்கிக் கொண்டிருக்கும் உயிர்கள் இரவில் பிறக்கின்றன என்று சொல்வார்கள். அந்த உயிர்கள் தாம் பிறக்கும் நேரத்தைத் தேர்ந்தெடுக்கச் சக்தியற்றவை. நூற்றுக் கணக்கான காரணங்கள் சொல்லப்படுகின்றன. ஆனால், ஒன்று மட்டும் முக்கியம். பெரும்பாலானவர்கள் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள்; இருளில், செயலற்றுக் கிடக்கிறார்கள்.

உதய காலத்தில் பிறப்பவர்கள் ஆற்றலுடன் பிறக்கிறார்கள். பகலவன் மறைந்த பிறகு, இரவின் இருளில் பிறப்பவர்கள் தூங்கு மூஞ்சிகளே. காலையில் பிறப்பவரே சக்தி ஏறப் பெற்றவர்கள். பகலில் படம் எடுப்பதற்கும் இரவில் படம் எடுப்பதற்கும் உள்ள வேறுபாடு தான் அது.

'வெளிப்படுதல்' பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். சோதிடம் இந்த அம்சத்தோடு ஆழ்ந்த தொடர்பு கொண்டிருக்கிறது. ஆய்வுகள் மேற்கொண்ட விஞ்ஞானிகளும் இதைத்தான் அதிகம் வலியுறுத்துகிறார்கள்.

கோழிக் குஞ்சு பிறந்தவுடன் தாயின் பின்னால் ஓடுவதைப் பார்க்கிறோம். ஆனால், தாய்க்கும் அதற்கும் சம்பந்தமில்லை, அது குஞ்சின் முதல் பதிவோடு சம்பந்தப்பட்டது என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இது சம்பந்தமாக நூற்றுக்கணக்கான சோதனைகள் செய்து பார்த்த பின்பே இப்படிக் கூறுகிறார்கள்...

அதில் ஒரு சோதனை.... குஞ்சு இன்னும் பிறக்க வில்லை. முட்டையை உள்ளிருந்து கொத்திக் கொண்டிருக்கிறது... பிறகு, முட்டையை உடைத்துக் கொண்டு வெளியே வருகிறது... அந்தச் சமயம் பார்த்து, தாய்க் கோழியை அகற்றி விட்டு, அங்கே ஒரு பலூனை வைத்து விட்டார்கள்!

கோழிக் குஞ்சு கண் திறந்ததும் முதலில் பார்த்தது பலூனைத் தான். அதன் பிறகு குஞ்சுகள் அதைத்தான் தாயாக நேசித்தன. பலூன் காற்றில் நகர, அதைத் துரத்திக் கொண்டு குஞ்சுகள் ஓடின. களைத்த போது பலூனை ஒட்டிப் படுத்துக் கொண்டன! தாயைத் தேடவே இல்லை!

கோன்ராட் லோரென்ஸ் என்ற விஞ்ஞானி இத்துறையில் நிறைய ஆய்வுகள் நடத்தியவர். வெளிப்படும் காலம் மிக முக்கியமானது என்பது அவர் முடிவு. பிறக்கும் முதல் கணமே பிரதானமானது. பிறந்தவுடன் முதல் பதிவு தாயின் உருவம். அதனால்தான் குஞ்சுகள் அதன் பின்னே ஓடுகின்றன.

ஆண் குழந்தைகள் தாயின் பராமரிப்பில் வளராமல் போய் விட்டால், பெண்களை நேசிக்கும் பண்பை இழந்து விடும். அதன் மூளையில் பெண்ணின் உருவம் சரியாகப் பதியாமல் போவதே அதன் காரணம்.

ஆண் ஓரினச் சேர்க்கை மேல் நாடுகளில் பெருகி வருகின்றது. தாயின் வடிவம் அழுத்தமாக மனதில் படியாமையே காரணம். ஆண், பெண் காதல் அங்கே குறைந்து கொண்டே போகிறது. ஒரே பால் கவர்ச்சி கூடிக் கொண்டே போகிறது. இயற்கைக்குப் புறம்பானது அது. ஆனால், அங்கே அப்படித்தான் ஆகும்!

இனக் கவர்ச்சி, இன்னொரு வகையில் நிலைப்படுத்தப் படுகிறது. குழந்தை பிறந்ததும் முதலில் யாரைப் பார்க்கிறது என்பது முக்கியம்.

பிறந்தவுடன் தாயின் முகம் பார்க்கும் பெண் குழந்தை வாழ்வில் மகிழ்ச்சியாக இருக்காது! அது முதலில் ஓர் ஆண் முகம் பார்க்க வேண்டும். அது தந்தையின் முகமாகவும் இருக்கலாம். அப்போது தான், அது பிற்காலத்தில் ஓர் ஆணை நன்றாக நேசிக்க முடியும்.

பெண்களை விட ஆண்கள் சிறந்து விளங்குவதற்குக் காரணம், பையன்கள் பிறந்ததும் தாய் முகம் பார்ப்பதால்தான்! அவள் பார்வையில் அவன் வளர்க்கப் படுவதால்தான், மேலுயர்கிறான்.

ஆண் பிள்ளைக்குக் கிடைக்கும் முதல் வாய்ப்பு, முதல் பதிவு, பெண் பிள்ளைக்குக் கிடைப்பதில்லை.

பெண் குழந்தை முதலில் தன் தந்தை முகம் பார்க்காதவரை, அவள் ஆணுக்கு நிகராக முடியாது. அரசியலிலோ, வேலை வாய்ப்புகளிலோ, பொருளாதாரச் சுதந்திரத்திலோ ஆணுக்கு நிகராக வர முடியாமல் அவள் பலவீன மடைவதற்கான அடிப்படைக் காரணம், மனோதத்துவ ரீதியான அந்த முதல் பதிவுதான்! இந்தப் பலவீனத்தை, இது வரை எந்தச் சமுதாயமும் வென்றதாகத் தெரியவில்லை.

ஒரு சிறிய பலூனே கோழிக் குஞ்சை அவ்வளவு பாதிக்கிறது என்றால், அது அதன் மனதில் அழுத்தமாய்ப் படிகிறது என்றால், நம்மைச் சுற்றியுள்ள பிரபஞ்சம் நம்மைப் பாதிக்காதா? பிறக்கும் கணத்தில், நமது மூளையின் படச் சுருளில், பிரபஞ்சமே பதிவாகி விடுகிறது. உங்கள் முழு வாழ்வின் விருப்பு வெறுப்புகளை அதுவே தீர்மானிக்கிறது.

அந்தக் கணப் பொழுதில் கிரகங்கள் எல்லாம் பூமியைச் சுற்றி வருகின்றன. ஓர் ஆழமான வகையில், அவையெல்லாம் பிறக்கும் குழந்தையின் மூளையில் படிந்து விடுகின்றன. அந்தக் கிரகங்கள் முக்கியத்துவம், ஒரு குழந்தை பிறக்கும் நேரத்தில், அவற்றிலிருந்து எவ்வகைக் கதிர் வீச்சு, எந்த அளவு பூமியின் மேல் பாய்கிறது, என்பதைப் பொருத்து அமைகிறது.

வானத்துக் கிரகங்கள் எல்லாம், தனித் தன்மை கொண்ட கதிர் வீச்சை வெளி விடுபவை. வெள்ளிக் கிரகத்தின் கதிர்கள் சாந்தமானவை. நிலாவின் கதிர்கள் வேறானவை. ஒவ்வொரு

கிரகத்தின் கதிர் வீச்சும், அதைச் சுற்றியுள்ள புகை மண்டலத்தைப் பொருத்து அமைகிறது.

அந்தக் கிரகங்கள், விண்மீன்கள், விண்மீன் குடும்பங்கள், வெகு தூரத்து அதிசூரியர்கள் எல்லாம் அடி வானத்தில் இயங்கிக் கொண்டிருக்கையில், ஒரு குழந்தை பிறக்கும் போது, அவை, அதைப் பாதிக்கின்றன. அந்தக் கணப் பொழுதின் பிரபஞ்சச் சூழலின் பலம், பலவீனம், தகுதி, எல்லாம் அந்தக் குழந்தையின் வாழ்நாள் முழுதும் பாதித்துக் கொண்டே இருக்கும்.

அணுகுண்டு வீச்சின் விளைவுகள் என்ன என்பதை அறிவது போன்றது அது. மக்கள் நிறைந்த இரோசிமா நகர் மீது அணுகுண்டு வீசப்பட்டது. இலட்சக் கணக்கான மக்கள் சாவார்கள் என்பது மட்டும், வீசுவதற்கு முன்பு தெரிந்திருந்தது. ஆனால், பல தலைமுறைகளாக, எதிர் காலத்தைப் பாதிக்கும் என்பது அப்போது தெரியவில்லை.

இரோசிமா, நாகசாகி நகர்களில் உயிர் விட்டவர்கள், ஒரு நொடிப் பொழுதில் இறந்து போனவர்கள். ஆனால், உயிர் தப்பிய மக்களும், தாவர வர்க்கமும், விலங்கு, பறவைகளும், மீன்களும், முன்னறியாத ஏதோ ஒன்றால் நிரந்தரமாகப் பாதிப்படைந்தன. அதன் கொடிய பாதிப்பு என்ன என்பது பத்துத் தலைமுறைகளுக்குப் பின்னால்தான் சரியாகத் தெரியும்! அணுக் கதிர் வீச்சு, அந்த அளவுக்கு ஆழமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது!

உயிர் பிழைத்த பெண்களின் கரு முட்டைகள் அணுக்கதிர் வீச்சுக்குள்ளாயின. அந்தக் கருக்களிலிருந்து சாதாரணக் குழந்தைகள் உருவாக முடியவில்லை. குழந்தைகள் குருடாய், முடமாய்ப் பிறந்தன. சிலவற்றிற்கு நான்கு கண்கள்! எட்டுக் கண்கள் கூட இருந்தன! அதை விளக்க முடியாது. வினோத வடிவில் குழந்தைகள் சிதைந்தும், மாறுபட்டும் பிறந்தன.

நோய் கொண்டு, மூளை சிதைந்தும், அதிபுத்தி சாலியாகவும், முன்னறியா முறையில் பிறந்தன. ஒன்று மட்டும் நிச்சயம். அவை இயல்பாக இல்லை. சாதாரண மனிதக் குழந்தைகளாக இல்லை.

கதிரவனுடைய ஆற்றலோடு ஒப்பிடும் போது, அணுகுண்டு அற்பம்தான். இந்த அற்பமானதே பூமியின் மேல் இவ்வளவு நாசத்தை உண்டாக்குமானால், கதிரவனின் சக்தியைக் கற்பனை செய்து பாருங்கள். இரோசிமா, நாகசாகியில் வீசப்பட்ட அணுகுண்டு, ஒரு லட்சத்து இருபதாயிரம் பேரைக் கொன்றது என்றால், கதிரவனின் கதிர் வீச்சைக் கற்பனை செய்து பார்க்க முடியுமா?

நான்கு லட்சம் கோடி ஆண்டுகளாகக் கதிரவன் பூமியைக் காய்ச்சிக் கொண்டிருக்கிறது! அது குளிர்வதற்கான வாய்ப்பே இல்லை, பல லட்சம் ஆண்டுகள் ஆனாலும்! சுமார் பத்துக் கோடி மைல்களுக்கு அப்பாலிருந்து, ஒவ்வொரு நாளும் பூமியின் மேல் எவ்வளவு வெப்பத்தைக் கொட்டுகிறது!

இரோசிமாவில் ஏற்பட்ட நாசம் பத்து மைல் சுற்றளவிற்குத்தான். ஆனால், பத்துக் கோடி மைல் தொலைவிலிருந்து இவ்வளவு காலமாக இவ்வளவு வெப்பம் வீசியும், அது தீர்ந்து போகவே இல்லை. ஆனால், பிரபஞ்ச வெளியில் உள்ள மற்ற கதிரவன்களுடன் ஒப்பிட்டால், நமது கதிரவன் மிகச் சிறிய நட்சத்திரம் மட்டுமே! நாம் வானில் பார்க்கும் சிறிய விண்மீன்கள், கதிரவனை விடப் பல்லாயிரம் மடங்கு பெரிய கதிரவன்கள்! அவை ஒவ்வொன்றிற்கும் தனித்தன்மை கொண்ட கதிர் வீச்சு இருக்கின்றது. அவை எல்லாம் நம் மீது பாய்ந்து கொண் டிருக்கின்றன!

பிரபஞ்ச சக்திகள் பற்றி ஆராய்ந்தவர்களில் முக்கியமானவர் மைக்கேல் காக்குலின். பெரிய விஞ்ஞானி அவர். நம் மீது பாயும் பிரபஞ்ச சக்திகளில் ஒரு சதவிகிதத்தைக் கூட நம்மால் தெரிந்து கொள்ள முடியவில்லை என்கிறார் அவர். பூமிக்கு வெளியே பல செயற்கைக் கோள்களை நாம் அனுப்பிக் கொண்டே இருக்கிறோம். அவையும் நிறையத் தகவல்களை அனுப்புகின்றன. ஆனால், அவற்றைப் புரிந்து கொள்ள முடியவில்லை. விளக்கவும் வார்த்தைகள் இல்லை. நம்மைச் சுற்றிலும் இவ்வளவு சக்திகள் இருப்பதை இது வரை நாம் கற்பனை செய்து கூடப் பார்த்ததில்லை.

இந்தப் பின்னணியில், இன்னொன்றையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். சோதிடம் வளர்ந்து வரும் ஒரு புதிய விஞ்ஞானம் அன்று. நிலைமை இதற்கு நேர் மாறானது.

தாஜ்மகாலைப் பார்க்கப் போனால், யமுனை ஆற்றின் மறுபக்கத்தில், கட்டி முடிக்கப்படாத சில சுவர்களைப் பார்க்கலாம். ஷாஜகான், தன் மனைவி மும்தாஜுக்கு மட்டும் தாஜ்மகால் கட்டவில்லை. யமுனை ஆற்றின் மறுகரையில் தனக்கும் ஒரு சமாதி கட்ட முயன்றான் என்று ஒரு கதை இருக்கின்றது. தாஜ்மகால் போலவே ஒரு பளிங்கு மாளிகை!

வழங்கப்பட்டு வரும் கதைப்படி, அவனால் அதை முடிக்க முடியவில்லை. இன்று ஆராய்ச்சி செய்பவர்கள், அது முடிவு பெறாத சமாதி அல்ல; கட்டி முடிக்கப்பட்ட அரண்மனை ஒன்றின் சிதிலங்கள் என்று சொல்கிறார்கள்.

முந்நூறு ஆண்டுக் காலமாக, அது ஷாஜகான் தனக்காக் கட்ட முயன்று, முடிக்கப்படாத சமாதியின் சிதிலங்கள் என்றே சொல்லப்பட்டு வந்தது. வரலாற்று ஆய்வாளர்கள் இப்போது அதை மறுத்து விட்டார்கள். அரண்மனை யொன்றின் இடிபாடுகள் என்று சொல்லி விட்டார்கள்.

தாஜ்மகால் கூட ஷாஜகானால் கட்டப்பட்டதன்று, இந்து மன்னர்கள் கட்டியிருந்த அரண்மனையைத்தான் ஷாஜகான் சமாதியாக மாற்றினான் என்றும் ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன! நாம் முன்பு நம்பியதெல்லாம் மாறுபடுவது இயல்புதான்.

தாஜ்மகால் போன்ற சமாதி உலகில் வேறெங்கும் கட்டப் படவில்லை. இப்படியொரு சமாதியை யாரும் கட்ட மாட்டார்கள். தாஜ்மகாலைச் சுற்றிலும், போர் வீரர்கள் காவல் காப்பதற்கான இடங்களும், துப்பாக்கி, பீரங்கிகள் வைப்பதற்கான இடங்களும் காணப்படுகின்றன. ஒரு சமாதிக்கு அப்படிப்பட்ட பாதுகாப்பு எதற்கு? அது, பழைய அரண்மனைதான் என்று தெரிகிறது.

அரண்மனைதான் சமாதியாக மாற்றப்பட்டிருக்கிறது. யமுனை யின் மறுகரையில் நின்று கொண்டிருக்கும் பழைய சுவர்களும் பழைய அரண்மனையின் இடிந்து போன மிச்ச சொச்சங்களே.

சோதிடமும், இடிந்து போன பழைய மாபெரும் மாளிகையின் மிச்ச சொச்சமே. காணாமற் போன, முழுமை பெற்ற விஞ்ஞானம் அது. சோதிடம் புதியதோ, வளர்ந்து கொண்டிருப்பதோ அல்ல. மிச்சமாய் நின்று கொண்டிருக்கும் இடிபாடுகளை வைத்து, அது எவ்வளவு பெரிய மாளிகையாய் இருந்திருக்கும் என்று சொல்ல முடியவில்லை. உண்மைகள், பல முறை காணப்பட்டு, பிறகு காணாமற் போய் விடுகின்றன.

இயேசுவுக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த கிரேக்க விஞ்ஞானி அரிஸ்டார்ச்சஸ், பிரபஞ்ச மையம் கதிரவனே தவிர, பூமியல்ல என்பதைக் கண்டு பிடித்தார். அரிஸ்டார்ச்சஸின் கோட்பாடு, 'கதிர் மையக் கோட்பாடு' ('ஹீலியோசென்டரிக் பிரின்சிபில்') என்று புகழ் பெற்றது. பிறகு, கி.பி. 100 வாக்கில், தால்மி அதை மாற்றி, பூமியே மையம் என்றார்.

மறுபடியும், பிரபஞ்ச மையம் கதிரவனே என்ற உண்மையை நிலைநிறுத்த ஆயிரம் ஆண்டுகள் பிடித்தன. கெப்ளரும், கோபர்நிகசும் வந்து பிற்காலத்தில் அதை நிலை நாட்டினர். அரிஸ்டார்ச்சஸ் கண்டு பிடித்த உண்மை மிக நீண்ட காலம் மறைந்து கிடந்தது. கோபர்நிகஸ்,

அரிஸ்டார்ச்சசின் பழைய புத்தகத்தைத் திறந்து பார்த்து, அதை மறுபடியும் பிரகடனப் படுத்தினார்... அப்போது மக்கள் அதிர்ச்சி யடைந்தார்கள்!

அமெரிக்காவைக் கண்டு பிடித்தது கொலம்பஸ்தான் என்று மேற்கில் சொல்லிக் கொள்கிறார்கள். ஆஸ்கார் வைல்ட் அமெரிக்கா சென்றிருந்த போது, ஒரு வேடிக்கை மொழி சொன்னார். அது பிற்காலத்தில் புகழ் பெற்றது. 'அமெரிக்கா மிக முற்காலத்திலேயே வேறு ஒருவரால் கண்டு பிடிக்கப்பட்டது' என்று அவர் கூறினார்! அது உண்மை. அமெரிக்கா முன்பு பல முறை கண்டு பிடிக்கப்பட்டது. மறுபடியும் மறுபடியும் அது காணாமல் போய் விட்டது!

யாரோ ஆஸ்கார் வைல்டிடம் கேட்டார்கள். ''கொலம்பஸ் முதலில் கண்டு பிடிக்க வில்லை யென்றால், அதற்கு முன்பே கண்டு கொள்ளப்பட்டது என்றால், ஏன் இது அடிக்கடி காணாமல் போய் விட்டது?''

அதற்கு ஆஸ்கார் வைல்ட், ''அவர் அமெரிக்காவைக் கண்டு பிடிக்கவே செய்தார். பல முறை முன்பும் இது கண்டு பிடிக்கப்பட்டது. ஆனால், ஒவ்வொரு முறையும் அது மூடி மறைக்கப்பட்டது! ஒரு விவகாரமான விஷயமாக அது இருந்ததால், மூடி மறைத்து, மறந்து விட வேண்டியது அவசியமாகி விட்டது,'' என்றார்!

மகாபாரதத்தில் அமெரிக்காவைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அர்ச்சுனனின் மனைவிமார்களில் ஒருத்தி மெக்சிகோக்காரி! மெக்சிகோவில் புராதன இந்துக் கோயில்களும், விநாயகர் சிலைகளும் இருக்கின்றன!

உண்மை நம் கைப்பிடிக்குள் அகப்படுவதும், பிறகு கைநழுவிக் காணாமற் போய் விடுவதும் பல முறை நிகழ்ந்திருக்கின்றன. சோதிடம் அப்படிப்பட்டதொரு பெரிய உண்மை. முன்பு தெரிந்திருந்து; பின்பு காணாமற் போய் விட்டது. அதை மீண்டும் அறிந்து கொள்வதில் சிரமங்கள் இருக்கின்றன. அதனால்தான், பல கோணங்களிலிருந்தும் அதை விளக்கிக் கொண்டிருக்கிறேன்.

எனது நோக்கம் தவறாகப் புரிந்து கொள்ளப்படலாம். ஒரு சாதாரண சோதிடரைப் போல நான் பேசவில்லை. சாதாரண சோதிடரிடம் காசு கொடுத்தால் உங்கள் எதிர்காலம் சொல்வார். நான் அவருக்கு ஆதரவாகப் பேசிக் கொண்டிருக்கிறேன் என்று நீங்கள் நினைக்கலாம்.

சோதிடர்களில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேர் சரடு திரித்துக் கொண்டிருக்கிறார்கள்! ஒரு சதவிகிதத்தினராலும் வருங்காலத்தில் இன்னது நடக்கும் என்று உறுதியாகச் சொல்ல முடிவதில்லை. சோதிடம் மிகப் பெரிய விஷயம். மிகுந்த தயக்கத்துடன் எவரும் அதற்குள் காலடி எடுத்து வைக்க முடியும். அந்த அளவுக்கு மிக விசாலமான விஷயம் அது.

பல கோணங்களிலிருந்தும் நான் அந்த விஞ்ஞானத்தை விளக்குவதற்குக் காரணம், நீங்கள் அச்சமோ, தயக்கமோ இல்லாமல் உள்ளே பிரவேசிக்க வேண்டும் என்பதற்காகத்தான். நான் குறிப்பிடுவது சாதாரண சோதிடரை அல்ல. அது சின்ன விஷயம். தன் மகளுக்கு எப்போது திருமணம் ஆகும் என்பது போன்ற விஷயங்களையே, சாதாரண மக்கள் அறிய விரும்புகிறார்கள்.

சோதிடத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். முதற்பகுதி அதன் ஆதாரம்; அதன் சாரம். இதை மாற்ற முடியாது. இதைப் புரிந்து கொள்வதும் மிகக் கடினம். இரண்டாவது பகுதி நடுப்பகுதி. இதில் ஒருவர் வேண்டும் மாற்றங்கள் செய்யலாம். இது ஓரளவு அவசியமான பகுதி. ஆனால், இது இன்னதென்று தெரியாமல் மாற்றம் செய்ய முடியாது. மூன்றாவது பகுதி, வெளிப்பகுதி. இது தேவையற்றது. ஆனால், இதைப் பற்றி அறியத்தான் நாம் மிக ஆவல் கொண்டிருக்கிறோம்!

முதலாவது சாரம். மாற்ற முடியாதது. இதனுடன் ஒத்துப் போக மட்டுமே முடியும். விதியை அறிந்து கொள்வதற்கே, சமயம் சோதிடத்தை உருவாக்கியது.

அரை முக்கியத்துவம் உள்ள நடுப்பகுதியை நாம் அறிந்து கொண்டால், நமது வாழ்வை மாற்றிக் கொள்ளலாம். அறியா விட்டால் அது முடியாது; நடப்பது நடந்தே தீரும். அறிவிருந்தால் மாற்றுக் கண்டு பிடித்துக் கொள்ளலாம். சரியானதைத் தேர்ந்தெடுக்கவும் வாய்ப்பு உண்டு.

மூன்றாவதான, முக்கியத்துவம் அற்ற பகுதி, மேலோட்டமானது; வெளிப்பகுதி; தவிர்க்க முடியாதது என்று இதில் எதுவும். இல்லை. எல்லாமே சந்தர்ப்ப சூழ்நிலைகள்.

ஆனால், நாம் சோதிடரிடம் போய்க் கேட்பதெல்லாம் முக்கியத்துவம் அற்ற மூன்றாம் பகுதியைத் தான். வேலை கிடைக்குமா என்று விசாரிக்கப் போகிறார்கள். வேலை வாய்ப்பிற்கும் கிரகங்களுக்கும் தொடர்பில்லை.

சிலர் திருமணம் ஆகுமா என்று கேட்கிறார்கள். திருமணம் இல்லாமல் சமுதாயம் ஏது? பணக்காரன் ஆவேனா என்று ஒருவர் கேட்கிறார். சோசலிச சமுதாயத்தில் ஏழை பணக்காரரே இருக்க மாட்டார்கள்! இவையெல்லாம் தேவையற்ற கேள்விகள்...

எண்பது வயதுக் கிழவர், வாழைப் பழத் தோல் வழுக்கித் தெருவில் விழுந்து விடுகிறார் என்றால், சோதிடரிடம், எந்தத் தோல் வழுக்கி எந்தத் தெருவில் விழுவேன் என்று அவர் முன் கூட்டி விசாரித்து அறிய முடியுமா என்ன? இவை முட்டாள்தனமான கேள்விகள். மடத்தனமான கேள்விகள். தேவையற்றவை.

உங்கள் உயிருக்கும் அதற்கும் தொடர்பில்லை. மேம்போக்கான நிகழ்ச்சிகள் அவை. சோதிடத்திற்கும் அதற்கும் சம்பந்தமில்லை. பேசிக் கொண்டிருக்கிறார். இதனால்தான், மாபெரும் சோதிட அமைப்பு வீழ்ச்சியடைந்தது. அதன் தகர்ச்சிக்கான ஒரே காரணம் இது தான்.

கடற்கரையில் உலாவும் இன்ன நாளில், வாழைப் பழத் தோலில் வழுக்கி விழுவது, பிறந்த நாள் அன்றே தலையில் எழுதப்பட்டிருக்கும் என்று எந்தத் புத்திசாலியும் நினைக்க மாட்டான். விழுவதோ, அந்தத் தோலோ, கிரகங்களுடன் சம்பந்தப்பட்டதல்ல. இம்மாதிரி விஷயங்களோடு தொடர்பு படுத்தப்பட்டதால்தான், சோதிடம் தன் மரியாதையை இழந்து விட்டது.

ஆனால், ஏதாவதொரு சந்தர்ப்பத்தில், இம்மாதிரியான அற்ப விஷயங்களை அறிந்து கொள்ளச் சோதிடரைத் தேடிப் போகத் தான் செய்கிறோம். ஆனால், ஓரளவு முக்கியத்துவம் கொண்ட விஷயங்கள் இருக்கின்றன, பிறப்பு, இறப்பு போல. இவை தெரிந்தால் எச்சரிக்கையாக, தயாராக இருக்கலாம். இது தெரியாவிட்டால், எதையும் செய்ய முடியாது.

நோயின் அடிப்படையை அறியும் அறிவு பெருகியிருப்பதால், மனிதனின் வாழ்நாளை நீட்டிக்க முடிந்திருக்கிறது. கொடிய அணு குண்டுகளைக் கண்டு பிடிக்கும் அறிவு பெருகினால், இலட்சக் கணக்கானவரைக் கொல்லலாம். இதையும் செய்து கொண்டு தானிருக்கிறோம். என்ன நடக்கப் போகிறது என்பதை முன் கூட்டி அறிய முடிந்தால், சிலவற்றை நாம் முன்கூட்டிச் செய்து கொள்ளலாம் என்பதை, சோதிடம் நமக்கு உணர்த்துகின்றது. தெரியாவிட்டால் ஒன்றும் செய்ய வழியில்லை. முன்கூட்டித் தெரிந்தால், பாதுகாப்பு, எச்சரிக்கை நடவடிக்கை எடுக்கலாம்; மாற்று வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

இதற்கு அப்பால் இருப்பதுதான் அவசியமான உலகம் - அதில் எதையுமே மாற்ற முடியாது. ஆனால், நமது ஆவல் எல்லாம், முக்கியத்துவம் அற்றவற்றை அறிவதிலேயே இருக்கின்றது. அரை முக்கியத்துவம் கொண்டவற்றை அணுகிப் பார்க்கக் கூட நாம் முயல்வதில்லை. அடிப்படையான, தவிர்க்க முடியாது, மாற்ற முடியாத, ஆதார அம்சத்தை அறியும் ஆவலோ, ஆசையோ நமக்கு எப்போதும் எழுதுவதேயில்லை.

மகாவீரர், தம் சீடன் கோசாலகனுடன் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். கோசாலகன் பிற்காலத்தில் மகாவீரருக்கு எதிராகத் திரும்பியவன் - ஒரு செடியருகே அவர்கள் வந்த போது, ''இந்தச் செடி என்ன ஆகும்? மலருமா? மலருமுன் பட்டுப் போகுமா? இதன் எதிர் காலம் என்ன?'' என்று சீடன் கேட்டான்.

மகாவீரர் சட்டெனக் கண்களை மூடிக் கொண்டார். அந்தச் செடியின் முன்னால் அமர்ந்து விட்டார்.

''கண்ணை மூடி என்ன பயன்? பிரச்சனையை ஏன் தவிர்க்கப் பார்க்கிறீர்கள்?'' என்றான் சீடன்.

மகாவீரர், விழிகள் மூடி அடிப்படையைப் பார்த்துக் கொண்டிருப்பது சீடனுக்குத் தெரியவில்லை. அந்தச் செடியின் உயிரின் ஆழத்திற்குள் பிரவேசிக்காமல் அதன் எதிர்காலம் அறிய முடியாது.

சற்று நேரம் கழித்து அவர் கண்களைத் திறந்தார்.

''இந்தச் செடி பூப் பூக்கும்,'' என்றார்.

கோசாலகன் சட்டென அந்தச் செடியை வேரோடு பிடுங்கி எறிந்தான்! சிரித்தான்! மகாவீரருடன் மாறுபட, அதை விடச் சிறந்த வழி வேறு என்ன இருக்க முடியும்?

மகாவீரர் எதுவுமே பேசவில்லை! ஒரு புன்முறுவலுடன் தம் பயணம் தொடர்ந்தார்!

அப்புறம் மழை பெய்ய ஆரம்பித்தது. புயலும் மழையுமாய் ஏழு நாட்கள், அவர்களை நகர விடவில்லை.

மழை விட்ட பிறகு அவர்கள் திரும்பி வந்தார்கள். அந்தச் டெி, மண்ணில் காலூன்றி நின்று, பூப்பூத்திருந்தது!

அடித்த மழையில், சேற்றில் வேரூன்றி உயிர் பிடித்திருக்கிறது!

மகாவீரர் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டார். சீடனுக்கு அவமானமாகப் போய் விட்டது. பிறகு குரு கண்களைத் திறந்து பார்த்தார்.

''எனக்கு வியப்பாகவும், குழப்பமாகவும் இருக்கிறது. நான் பிடுங்கி எறிந்த செடி உயிர் பிடித்துப் பூத்து நிற்கிறதே!'' என்றான் சீடன்.

''இது மீண்டும் பூ மலர்ந்து பொலியும். நான் விழிகள் மூடி அதன் உள்ளாற்றலை உணர்ந்தேன். இதன் விதையின் வீரியத்தைக் கண்டுணர்ந்தேன். இது வாழுமா, வீழ்ந்து அழியுமா என்பதை நோக்கினேன். சாகும் என்றால், நீ செய்தது உதவி. வாழும் என்றால், இதை எதுவும் செய்ய முடியாது. மேலும், நீ இதைப் பிடுங்கி எறியப் போகிறாய் என்பதும் எனக்குத் தெரிந்து விட்டது'' என்றார் மகாவீரர்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்பான் சீடன்.

''நான் கண்கள் மூடி, இந்தச் செடியைப் பார்த்துக் கொண்டிருந்த போது, நீ இதைப் பிடுங்கி எறியப் போகிறாய் என்பது எனக்குத் தெரிந்து விட்டது. அதனால், இந்தச் செடியின் உள்ளாற்றல் என்ன என்பதை நான் ஆழ்ந்து பார்த்தேன். இது சாகப் போகிறது என்றால், அதற்காகக் காத்திருப்பதாக அர்த்தம். அதற்கு நீ ஒரு சாக்கு. அவ்வளவுதான். இல்லாவிட்டால் இது எப்படியும் தாக்குப் பிடித்து விடும்; மறுபடியும் வளரும்,'' என்றார் மகாவீரர்.

அதை மறுபடியும் ஒரு முறைப் பிடுங்கி எறியும் துணிச்சல் கோசாலகனுக்கு வரவில்லை. பயம்! முன்பு கோசாலகன் சிரித்துக் கொண்டே ஊருக்குள் போனான். இப்போது, மகாவீரர் சிரித்துக் கொண்டே போனார்!

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்பான் அவன்.

''உன்னுடைய தகுதியை நினைத்தேன். நீ மறுபடியும் பிடுங்கி எறிவாயா, இல்லையா என்று சிந்தித்தேன்,'' என்றார் அவர்.

அதைக் கண்டு பிடித்து விட்டீர்களா?''

''இல்லை. அது தேவையில்லை. நீ பிடுங்கினாலும், பிடுங்கா விட்டாலும் சரி. செடி மறுபடியும் வாழப் போகிறது என்பதைக் கண்டு கொண்டதே, அவசியமானது. அது தவிர்க்க முடியாததும் கூட. அதன் முழு ஆற்றலும் ஆதார சக்தியும், வாழ விரும்புவதை நிரூபித்து விட்டது. அது தான் முக்கியம். உன் விருப்பம் இப்போது

முக்கியமல்ல. அது உன் விஷயம். நீ இப்போது, அந்தச் செடியை விடப் பலவீனமானவன் என்பது நிரூபணமாகி விட்டது. நீ தோற்கடிக்கப்பட்டு விட்டாய்,'' என்றார் அவர்.

மகாவீரர் மீது கோசாலகனுக்கு வெறுப்புத் தோன்றுவதற்கான காரணங்களில், அந்தச் சம்பமும் ஒன்று.

நான் குறிப்பிடும் சோதிடம், அடிப்படையை அறிவது. ஆனால், உங்கள் ஆவல் எல்லாம் அரை குறை உண்மையை அறிவதில்தான். ஆயுள் எவ்வளவு, திடீர் சாவு வந்து விடுமா, என்பதை அறியவே விரும்புகிறீர்கள். எப்படி வாழப் போறோம் என்பதை அறிவதில் ஆவல் இல்லை. சாகும் போது எப்படி இருப்போம் என்று அறியவே விரும்புகிறீர்கள்.

ஆவல், சம்பவம் பற்றியதாகவே இருக்கிறது; ஆத்மா பற்றியதாக இல்லை. நான் வாழ்ந்து கொண்டிருப்பது ஒரு நிகழ்ச்சி. வாழும் போது என்ன செய்கிறேன், நான் என்னவாக இருக்கிறேன் என்பது ஆத்மா சம்பந்தப்பட்ட விஷயம்.

மரணம் ஒரு சம்பவம். சாகும் போது எப்படி இருப்பேன், என்ன செய்து கொண்டிருப்பேன், என்பது ஆத்மாவின் விஷயம். மரணம் எல்லார்க்கும் பொது. ஆனால், சாகும் விதம், ஒவ்வொருவருக்கும் வேறு வேறு. ஒருவர் சிரித்துக் கொண்டே கூடச் சாகலாம்.

மரண வேளையில், முல்லா நஸ்ருதீனிடம் ''பிறப்பவர்கள் எங்கிருந்து வருகிறார்கள்?'' என்று யாரோ கேட்டார்கள்.

''எல்லாக் குழந்தைகளும் அழுது கொண்டே பிறக்கின்றன. அழுது கொண்டே எல்லாரும் சாகிறார்கள். யாரும் எங்கிருந்தும் வருவதும் இல்லை; எங்கேயும் போகப் போவதும் இல்லை. அழுது கொண்டே வந்து அழுது கொண்டே சாகிறார்கள்; அவ்வளவுதான்,'' என்றார் முல்லா நஸ்ருதீன்!

நஸ்ருதீனைப் போன்றவர்கள் சிரித்துக் கொண்டே தான் சாவார்கள். மரணம் ஒரு சம்பவம். மரண வேளையில் சிரிப்பது உடலல்ல; ஆத்மா.

சோதிடரிடம் போகும் போது, 'நான் அழுது கொண்டே சாவேனா, சிரித்துக் கொண்டே சாவேனா?' என்று கேட்டுப்

பாருங்கள்! சரியான கேள்விதான் இது! சோதிடத்தின் ஆதார அம்சத்தோடு தொடர்புடையதுதான் இது.

ஆனால், இதுவரை யாரும், எந்தச் சோதிடரிடமும் இப்படிக் கேட்டதில்லை!

மரணத்திற்கு ஏதோ மதிப்பிருப்பது போல், 'எப்போது சாவேன்?' என்று கேட்கிறீர்கள். சும்மா உயிர் வாழ்ந்தால் போதும் என்பது போல, 'என் ஆயுள் எவ்வளவு?' என்று கேட்கிறீர்கள்.

நான் ஏன் உயிர் வாழ வேண்டும்? எதற்காக உயிர் வாழ வேண்டும்? வாழும் போது என்ன செய்ய வேண்டும்? வாழ்க்கையில் நான் என்னவாக ஆவேன்?

இப்படிப்பட்ட வினாக்களை யாரும் கேட்டுக் கொள்வதே இல்லை. அதனால், சோதிடத்தின் கட்டுமானம் தகர்ந்து விட்டது. அடித்தளம் இல்லாமல் கட்டப்பட்ட எதுவுமே தகர்ந்து விழுந்துதான் போகும்.

நான் சொல்லும் சோதிடமும், நீங்கள் அறிந்துள்ள சோதிடமும் வேறுவேறானவை. நான் குறிப்பிடும் சோதிடம், பண்பு ரீதியாக வேறு பட்டது; மிகவும் ஆழமானது. அதன் பரிணாமமும் வேறானது. உங்கள் வாழ்விற்கும், பிரபஞ்ச இயக்கத்திற்கும் இடையிலுள்ள அவசியமான அடிப்படை அம்சம், ஒரே லயத்தில் ஒத்திசைந்து விளங்குகிறது, என்பதைத்தான் நான் கூறிக் கொண்டிருக்கிறேன். உலகம் முழுவதுமே அதில் பங்கு கொண்டிருக்கிறது. நீங்கள் தனித்து இல்லை.

புத்தர் ஞானம் பெற்ற வேளையில், இரு கைகூப்பி, தரையில் தலை படும்படித் தாழ்ந்து வணங்கினார். புத்தர் மெய்ப் பொருளைக் கண்டறிந்ததால், அவருக்கு ஆசி வழங்க, தேவர்கள் வானுலகிலிருந்து வந்தார்கள். ஆனால், புத்தர் தரையில் தலை பதிய வணங்குவது கண்டு வியப்படைந்தார்கள், என்று கதை சொல்கிறது.

அப்போது தேவர்கள், 'யாரை வணங்கினீர்கள்?' என்று புத்தரைக் கேட்டார்கள். அவர் ஞானம் பெற்றதை வாழ்த்துவதற்கு வந்திருக்கும் போது, அவர், அவர்களை வணங்காமல், யாரை வழங்கினார்?

''எனக்கு என்ன நேர்ந்திருந்தாலும் சரி, நான் தனியாக இல்லை. என் செயலில் உலகமே பங்கு கொண்டது. அதனால், இந்த உலகத்திற்கு நன்றி செலுத்தும் முறையில், இந்தப் பூமியை வணங்கினேன்,'' என்றார் புத்தர்!

அடிப்படைச் சோதிடத்துடன் தொடர்பு கொண்டுள்ள விஷயம் அதுதான். 'எவருமே தனித்தில்லை என்பதால், ஞானம் பெறும் சீடர்கள் பூமி முழுவதற்குமே நன்றி செலுத்த வேண்டும்.' என்று புத்தர், தம் சீடர்களுக்கு உபதேசித்தது அதனால் தான்.

கதிரும், நிலவும், எழவில்லையானால், கிரகச் சுழற்சி சற்றே மாறுபடுமானால், அவர்களுக்கு ஞானானுபவம் தவறிப் போகும். அவர்களுடைய அனுபவத்திற்குப் பிரபஞ்சம் முழுவதுமே கருவிகள் - அவற்றின் உதவியால்தான் அது சாத்தியம். ஆகவே, உள்ளார்ந்த பிரபஞ்ச உறவுதான் சோதிடம்.

''நான் ஞானம் பெற்றேன்,'' என்று புத்தர் எப்போதும் சொன்னதே இல்லை.

''இதை உலகம் என் மூலம் அனுபவித்தது — ஞானம் பெற்ற இந்த நிகழ்ச்சியை, இந்தப் பேரொளியை, உலகம் என் மூலம் அறிந்தது. நான் ஒரு சாக்கு, அவ்வளவுதான். உலகின் பாதைகள் எல்லாம் சங்கமிக்கும் போது, நான் அதைக் கடந்து மட்டும் சென்றேன்,'' என்றார் அவர்.

அந்தக் குறுக்குப் பாதைகள் முக்கியம் என்றாலும், அவை தம்மளவில் ஒன்றுமில்லை, என்பதை நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா?

ஒன்று சேரும் நான்கு பாதைகள் நீக்கப்பட்டு விட்டால், அவை சந்திப்பதன் முக்கியத்துவம் மறைந்து போகும். நாம் ஒவ்வொருவரும் குறுக்கே செல்லும் பாதைகள். உலக சக்திகள் ஏதோ ஓரிடத்தில் தொட்டு சந்திக்கின்றன. அந்தப் புள்ளியில்தான் ஒரு மனிதன் உருவாகிப் பிறக்கிறான்.

தனி மனிதன் பிரபஞ்சத்தின் ஒரு பாகம் மட்டுமல்ல; பிரபஞ்ச நிகழ்வு, சூழல் எல்லாவற்றிலும் பங்கு பெறுகிறவனாகவும் இருக்கிறான்.

அதனால் தான், புத்தர், தனக்கு முன்னால் தோன்றிய எல்லா புத்தர்களுக்கும், பின்னால் வரப் போகும் எல்லா புத்தர்களுக்கும் வணக்கம் செலுத்துவதாகக் கூறினார்.

தமக்கு முன்னால் தோன்றியவர்களுக்கு அவர் வணக்கம் செலுத்தியது சரிதான். தெரிந்தோ தெரியாமலோ முன்னோரின் அறிவு அவருக்குப் பயன்பட்டிருக்கும். இதனால், அவர் முன்னோர்க்குக் கடன்பட்டவராக இருக்கலாம். ஆனால், இனிமேல் பிறக்கப்

போகிறவர்களை அவர் வணங்குவதில் என்ன அர்த்தம் இருக்க முடியும்? பிறக்காதவர்களிடமிருந்து அவர் என்ன லாபம் பெறுகிறார்? - இப்படி அவரிடம் யாரோ கேட்கத் தான் செய்தார்கள்.

அதற்குப் புத்தர், பிறந்த, பிறக்கப் போகிற எல்லாவரிடமிருந்தும் தாம் உதவி பெறுவதாகக் கூறினார். ''நான் எங்கே நின்று கொண்டிருக்கிறேன்? இறந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் நடுவில் - இரண்டும் சந்திக்கின்ற நிகழ்வில். இங்கே அந்த இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. போனவரும்,, வருபவரும் சந்திக்கும் இடம் இதுதான். அந்த இரு சந்திப்புகளும் இப்போது இங்கே நிகழவில்லையானால், நானே பிறந்திருக்க முடியாது. அதாவது ஒரு 'புத்தன்' உதித்திருக்க முடியாது. அதனால்தான் எதிர் காலத்தைவரையும் வணங்குகிறேன்,'' என்றார்.

இதைப் புரிந்து கொள்வது சற்றுச் சிரமம்தான். இது அடிப்படை சோதிடத்துடன் தொடர்பு கொண்டது. என் இறந்த காலத்தின் ஏதாவது அம்சம் இல்லாமற் போய் விட்டால், காணாமற் போய் விட்டால், நானே இல்லாமற் போய் விடுவேன். ஒரு நீண்ட சங்கிலித் தொடரில் ஒரு கண்ணி நான். என் தந்தை பிறந்திருக்கா விட்டால் நானில்லை. காரணம், நெடுஞ் சங்கிலியோடு என்னை இணைக்கும் கண்ணி, அவர் தான்.

என் பாட்டனார் இல்லாவிட்டாலும் நானில்லை. அந்தத் தொடர்பு, இணைப்பு அவசியம். ஆனால், எதிர் காலத்தின் எதனோடும் நான் இணைக்கப்படாத நிலையில், 'எதிர்காலம் இல்லாமல் நான் பிறந்திருக்க முடியாது' என்பதைப் புரிந்து கொள்வது சிரமம்தான்.

எதிர்காலச் சங்கிலிக்கும் எனக்கும் என்ன உறவு? நான் ஏற்கெனவே பிறந்து விட்டவனாயிற்றே?

'எதிர்காலத்தில் என்ன நிகழப் போகிறதோ, இது ஏற்கெனவே அங்கே இருக்கவே செய்கிறது' என்கிறார் புத்தர். அதனால், அதற்கும் இறந்த காலத்திற்கும் இடையில் உள்ள கண்ணி நான், என்கிறார் அவர். அந்த இரு சந்திப்புகளின் மையத்தில் அவர் பிறந்திருக்கிறார். தமது இறந்த கால, எதிர் காலங்களில் சிறு மாற்றம் ஏற்பட்டாலும் அவர் அப்போது புத்தராக மாறியிருக்க முடியாது என்பது அவரது கருத்து.

நேற்று, என்னைப் பெற்றது போல, நாளையும் என்னைப் பெறும். வந்தது மட்டுமல்ல; வருவதும் உண்டு. இன்று கதிரவன் உதித்தான். நாளையும் உதிப்பான் — எல்லாருக்கும் அதில் பங்குண்டு.

எதிர்காலக் கணமும், நிகழ் காலக் கணத்தை முடிவு செய்கிறது. எதிர் காலம் இல்லை என்றால் நிகழ்காலம் இல்லை. இந்த நிகழ் கணம், எதிர் வரும் கணத்தின் ஆதரவில்லாமல் நிகழ முடியாது.

நமது கைகள், நமது எதிர் காலத்தின் தோள்கள் மீது இருக்கின்றன. என் காலடியில் பூமியை நான் மிதித்துக் கொண்டு நிற்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அது நகர்ந்தால், நான் விழுந்து விடுவேன். எதிர் காலத்தின் தோள்களில் நான் கை ஊன்றியிருக்கையில், அது நழுவிப் போனாலும் நான் விழத்தான் செய்வேன்.

இறந்த கால, எதிர் காலங்களுக்கு இடையிலுள்ள உள் உறவை, ஒற்றுமையை உணர்ந்தவர், சோதிடத்தைப் புரிந்து கொள்வார். அப்போதுதான் சோதிடம் சமயமாகும்; ஆன்மிகமாகும்.

தேவையற்றதோடு தொடர்பு கொண்டிருக்கும் வரை சோதிடம் மரத்தடி ஆருடம் ஆகி விடும். அதற்கு மதிப்பே இல்லை. முட்டாளின் கையில் கிடைக்கும் மேலான விஞ்ஞானமும் குப்பைதான். அறிவைப் பயன்படுத்தி, உபயோகப்பதில்தான் ஒன்றின் மதிப்பே இருக்கிறது.

பல வாயில்கள் வழியாக நான் உங்களை, ஒரே ஒரு விஷயத்தை நோக்கித் தள்ளிக் கொண்டிருக்கிறேன். அப்போதுதான் எல்லாமே உள்ளார்ந்த தொடர்பு கொண்டுள்ளது என்பது விளங்கும்.

இந்தப் பிரபஞ்சமே ஒரு குடும்பம். பல உறுப்புகள் கொண்ட உடல் போல. நான் மூச்சு விடடால், என் உடல் முழுவதும் அதனால் பாதிக்கப்படுகிறது. அது போல, கதிரவன் மூச்சு விட்டால், பூமி பாதிக்கப்படும். வெகு தூரத்துக் கதிரவன்கள் மூச்சு விட்டாலும் அது பூமியைப் பாதிக்கும். உடலின் மிகச் சிறிய செல்லும், அவற்றோடு தொடர்பு கொண்டிருக்கிறது. இதைப் புரிந்து கொண்டால் அடிப்படை சோதிடத்திற்குள் புகலாம்; முக்கியத்துவமற்ற, பயனற்ற சோதிடப் பகுதியை ஒதுக்கித் தள்ளலாம்.

சோதிடத்தின் அற்பமான அம்சங்களுடன் தான் நாம் தொடர்பு கொண்டிருக்கிறோம். அவற்றிற்கு மதிப்பே இல்லை. அதனால், பல தொல்லைகளும் ஏற்படுகின்றன. ஒரு குழந்தை ஏன் பணக்கார வீட்டில் பிறக்கிறது, மற்றொன்று ஏன் ஏழை வீட்டில் பிறக்கிறது, என்பது போன்ற கேள்விகளை சோதிடத்தோடு தொடர்பு படுத்துகிறோம். சரியாகப் புரிந்து கொள்ளாதவரை அவையெல்லாம் மடத்தன மானவை.

அவசியமற்றதை ஒதுக்கித் தள்ளி, அடிப்படையைப் புரிந்து கொள்ள உங்களுக்குக் கிடைத்துள்ள ஒரு கருவிதான் சோதிடம்.

ஒரு சுவையான கதை சொல்கிறேன். அப்போது விபரம் புரியும்.

முகம்மது நபியின் சீடர்களில் ஒருவர் அலி. ஒரு முறை அலி, முகம்மது நபியிடம், 'மனிதன் விரும்பியபடி செயல்படச் சுதந்திரமானவன் தானா, அல்லது, விதிக்குக் கட்டுப்பட்டுத் தான் எல்லாமே செய்து கொண்டிருக்கிறானா?' என்று கேட்டார். 'விரும்பியபடி மனிதன் செயல்பட முடியுமா,' என்பது அலியின் வினா.

இந்த வினாவை மனிதன் காலங்காலமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறான்...

அலி மேலும் சொன்னார்: ''தான் விரும்பியபடி மனிதனால் செயல்பட முடியாமற் போனால், அவனுக்கு உபதேசம் செய்வதில் எந்தப் பயனும் இல்லையே. திருடாதே, பொய் சொல்லாதே, நேர்மை தவறாதே என்று ஏன் சொல்ல வேண்டும்? அல்லது இப்படி உபதேசம் செய்வதற்கு ஒரு ஆள் இருக்க வேண்டும் என்பதும் விதியா? உபதேசத்தால் மாற மாட்டார்கள் என்று தெரிந்தும் உபதேசம் செய்து கொண்டே இருப்பதா? எல்லாமே அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது. எல்லாமே முன் கூட்டி முடிவு செய்யப்பட்டிருந்தால், கல்வி கற்பது கூட வீண். ஞானிகளும், தீர்க்கதரிசிகளும், உபதேசிகளும் வீண்,'' என்றார் அலி.

புத்தரிடமும், மகாவீரரிடமும் கூட இப்படிப்பட்ட வினாக்கள் வினவப்பட்டன. எலலாமே அவரவர் விதிப்படிதான் நடக்கும் என்றால், புத்தரும், மகாவீரரும் நல்லது கேட்டதைச் சொல்ல இவ்வளவு சிரமம் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்?

அதனால், அலி கேட்டது, விவாதத்திற்குரிய வினாதான். புத்தர், மகாவீரர், இந்த வினாவுக்கு மிக ஆழமான, மிகச் சிக்கலான பதில்களைத்தான் தந்திருப்பார்கள். ஆனால், முகம்மது நபி, அலி புரிந்து கொள்ளும் முறையில் பதிலளித்தார். முகம்மது நபியின் பல பதில்களும், நேரடியானவை; நேர்மையானவை.

கல்வியறிவற்றவர்கள், எளிய கிராமவாசிகளின் பதில்கள் பொதுவாக, நேரடியாக, வெளிப்படையாக இருக்கும். கபீர், குருநானக், முகம்மது, இயேசு போன்றவர்கள் எளிய முறையில்

பதிலளித்தவர்கள். புத்தர், மகாவீரர், கண்ணன், போன்றவர்களின் பதில்கள் சிக்கலானவை. புத்தரும், மகாவீரரும் வளர்ச்சி பெற்ற சமுதாயத்தின், செல்வச் சிறப்பு மிக்க குடும்பத்தில் பிறந்தவர்கள்.

இயேசு மொழி நேரடியானது. மண்டையில் அடிப்பது போல இருக்கும். ''கபீர், கையில் சம்மட்டியுடன், உங்கள் மண்டையைப் பிளக்க, சந்தைக் கடையில் நின்று கொண்டிருக்கிறான்...'' என்று கபீர் பாடியிருக்கிறார்!

யாராவது கபீரின் அருகில் வந்தால், அவர் அவனுடைய மண்டையைப் பிளந்து, அவனது மூளைக்குள் இருக்கும் குப்பை கூளங்களை யெல்லாம் வெளியே எடுத்து வீசிவிடுவார் போலிருக்கிறது!

முகம்மது நபியின் பதில்கள் இயல்பு கடந்தவையாக இரா. ஒற்றைக் காலில் நிற்கும்படி அவர் அலியைக் கேட்டுக் கொண்டார்! மனிதன் சுதந்திரமானவனா என்று கேட்டால் ஒற்றைக் காலில் நிற்கச் சொல்கிறாரே! ''முதலில் ஒரு காலைத் தூக்கு!'' என்றார் முகம்மது நபி.

அலி உடனே இடது காலைத் தூக்கி ஒற்றைக் காலில் நின்றார்.

''சரி, இனி அடுத்த காலையும் தூக்கு!'' என்றார், நபி

அலி திகைத்துப் போய் விட்டார். அது எப்படி?

அவர் திகைப்பதைக் கண்ட முகம்மது நபி, ''நீ நினைத்திருந்தால் முதலிலேயே வலக் காலைத் தூக்கியிருக்கலாம். ஆனால் அப்படிச் செய்யவில்லை. முதலில் வலக் காலைத் தூக்கும் அளவுக்கு ஒரு மனிதன் சுதந்திரமானவன்தான். விரும்பிய காலை அவன் தூக்கலாம். ஆனால், முதல் கால் தூக்கப்பட்ட உடனே அடுத்த கால், பூமிக்குக் கட்டுப்பட்டு விடுகிறது,'' என்றார்.

வாழ்வின் முக்கியமற்ற பகுதியைப் பொறுத்தவரையில், நாம் முதல் காலைத் தூக்கச் சுதந்திரம் பெற்றவர்கள். அதைச் செய்து முடித்தவுடனே, அவசியமான பகுதியுடன் பந்தப்பட்டு, அடிமைப்பட்டு விடுகிறோம்.

தேவையற்றதில் சம்பந்தப்பட்ட வுடனே சிக்கலில் மாட்டிக் கொள்கிறோம். அப்புறம் அவசியமானதைச் செய்ய முடியாமல் போய்

விடுகிறது. அதனால் முதலில் தான் விரும்பும் காலைத் தூக்கும் அளவுக்கு மட்டும் அலிக்கு சுதந்திரம் இருக்கிறது என்று முகம்மது நபி கூறினார்.

ஒரு காலைத் தூக்கிய பின், அவர் சுதந்திரம் போய் விடுகிறது. மறு காலைத் தூக்க முடிவதில்லை. அதனால், சுதந்திரத்திற்கு ஓர் எல்லையுண்டு. அந்த எல்லை தாண்டினால் சுதந்திரம் பறிபோய் விடும்.

மனதின் பழைய முரண்பாடு இது. ஒரு மனிதன் விதிக்கு அடிமை என்றால், எல்லாமே முன் வரையறைக்கு உட்பட்டது; எல்லாமே தவிர்க்க முடியாதவை - பொதுவாகச் சோதிடர்கள் அப்படித்தான் சொல்கிறார்கள் - அப்படியானால், மதங்கள் பயனற்றவை.

மனிதன் எல்லாம் செய்யச் சுதந்திரமானவன் என்றால், பகுத்தறிவாளவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் சொல்வது போல, எதுவும் முன் தீர்மானிக்கப்படவில்லை. தவிர்க்க முடியாதது என எதுவும் இல்லை என்றால், வாழ்க்கை ஒரே குழப்பமாகும்; அராஜகமாகும்.

அப்போது, ஒருவன் திருடி விட்டு, விடுதலைக்கு முயல்வதும் சாத்தியம். கொலை செய்வது விட்டுத் தன்னைப் புனிதனாக நினைக்கலாம். எதுவும் தொடர்பற்ற தென்றால் ஒரு காலடி வைப்பு, மற்ற காலடி வைப்பிற்குச் சம்பந்தமில்லை. அப்புறம் சட்டங்கள் இல்லை. கட்டுப் படுத்துவது எதுவுமே இல்லை.

முல்லா நஸ்ருதீனின் கதை ஒன்று நினைவுக்கு வருகிறது.

முல்லா நஸ்ருதீன் ஒரு பள்ளிவாசலின் முன்னால் போய்க் கொண்டிருந்த போது, மினாரின் உச்சியிலிருந்து ஒரு ஆள் கீழே விழுந்தான். தொழுகை செய்ய உச்சிக்குப் போனவன் அவன்! விழுந்தவன், முல்லாவின் தோள் மீது விழுந்தான். அதனால் முல்லாவின் தோள் எலும்பு முறிந்தது. அவர் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டார்.

அவருடைய சீடர்கள் சிலர், அவரைப் பார்க்க வந்திருந்தார்கள். எதற்குமே ஒரு புதிய விளக்கம் கொடுப்பவர் முல்லா என்பதால், ''இந்த நிகழ்ச்சியின் அர்த்தமென்ன? இதை எப்படி விளக்குகிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

''ஒரு செயலுக்கும், அதன் விளைவுகளுக்கும் சம்பந்தமே இல்லை. யாரோ விழுந்தால், வேறு யாருக்கோ எலும்பு முறிகிறது. அதனால், இன்று முதல் யாரும் 'கர்ம வினை' பற்றி வாதம் செய்யாதீர்கள். ஒருவர் விழுந்தால், இன்னொருவர் எலும்பு உடையும் என்பது நிரூபணமாகி விட்டது. விழுந்தவன் நல்ல திடகாத்திரமானவன் என்பதால், எனக்கு இவ்வளவு பெரிய கெடுதல் நேர்ந்திருக்கிறது. தொழுகை நடத்த நானா மினாரின் மேல் ஏறினேன்? நான் பாட்டுக்கு வீடு திரும்பிக் கொண்டிருந்தேன், தொழுகைக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை. அப்படியிருந்தும் இப்படி மாட்டிக் கொண்டேன். அதனால்... இன்று முதல், கர்மவினைக் கொள்கை பற்றி யாரும் பேசாதீர்கள்! எதுவும் நடக்கலாம். எந்த விதியும் கிடையாது. எல்லாம் ஒரே அராஜகம்!'' என்றார் முல்லா.

தேவையில்லாமல் நம் எலும்பு உடைந்து விட்டதே என்று முல்லாவுக்கு ஒரே வருத்தம்.

இரண்டு கொள்கைகள் இருக்கின்றன.

ஒரு பக்கம், சோதிடர் சாலையோரம் அமர்ந்திருக்க அவரிடம் முக்கியமில்லாதவற்றைக் கேட்கும் கூட்டம்... அவர் ஏழையின் சோதிடரா, நிதியமைச்சர் தேசாயின் சோதிடரா என்பது முக்கியமல்ல. முக்கியமற்றவரோடு சம்பந்தப்பட்ட சோதிடர்களிடம், நான் தேர்தலில் வெல்வேனா, என்பது போன்ற சாதாரணக் கேள்விகளைக் கேட்கிறார்கள்.

கிரகங்களுக்கும் தேர்தலுக்கும் என்ன தொடர்பு? சாதாரண சோதிடர் அதற்கும் பதில் சொல்கிறார். ''எல்லாமே முன் கூட்டி முடிவானவை. ஒரு அங்குலம் கூட எதுவும் மாறாது,'' என்பது அவரது பிரகடனம். பொய்யான பிரகடனம் அது!

இன்னொரு பக்கம் பகுத்தறிவாளர்.

'தவிர்க்க முடியாத தொடர்பு என்று எதுவுமே இல்லை. நிகழ்பவை எல்லாம் தற்செயல் நிகழ்ச்சிகளே. சூழ்நிலைக்கேற்ப, வாய்ப்புகளுக்கு ஏற்ப நிகழ்பவை அவை. விதி என்று எதுவும் இல்லை. எல்லாமே குழப்பம் தான்,' என்கிறார். இவரது கூற்றும் தவறானது.

ஒரு விதி, இருக்கவே செய்கிறது: 'ஒரு பகுத்தறிவு விதியால் புத்தன் பெற்ற பரவசத்தை எப்போதும் அனுபவிக்க முடியாது,' என்பது தான் அந்த விதி.

பகுத்தறிவாளர் கடவுளை மறுக்கிறார். தர்க்கம் கொண்டு, ஆன்மா, மதம், எல்லாவற்றையும் மறுக்கிறார். மகாவீரரின் ஆனந்தத்தை அவரால் என்றும் பெற முடியாது.

மகாவீரரால் அவருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்க முடியும். புத்தரால் அவருக்கு விடுதலை கொடுக்க முடியும். கண்ணனால் அவருக்கு ஏதாவது கொடுக்க முடியும். தன் புல்லாங்குழல் மூலம் ஒரு புதிய ராகத்தையாவது கற்றுக் கொடுக்க முடியும்.

மூன்றாவது தான் மிகவும் உண்மையான அம்சம். எல்லாவற்றின் சாரமும் அதுதான். அதுதான் அடியாழ மையம். அதுதான் முற்றிலும் முன் முடிவு செய்யப்படுவது.

ஒருவர், தமது மையத்தை நோக்கி நகர நகர, தவிர்க்க முடியாத அடிப்படை அம்சத்தை அவர் நெருங்குகிறார் என்று பொருள். எல்லாம் முன் முடிவு செய்யப்படும் இடமும் அதுவே. நாம் வெளி எல்லை நோக்கிச் செல்லச் செல்ல, 'தற்செயல்களை' நோக்கி நகர்வதாகப் பொருள். வெளி நிகழ்ச்சிகளைப் பற்றி நாம் அதிகம் பேசப் பேச, தற்செயல் நிகழ்ச்சிகள் அதிகமாகும். உள் அம்சம் பற்றிப் பேசப் பேச, எல்லாமே அறிவியல் பூர்வமாகத் தோன்ற ஆரம்பிக்கும், திட்டமிட்ட விதியின் அடிப்படையில் நிகழ்வன போல. அவை மேலும் மேலும் தீர்மானம் உள்ளவையாக ஆகும்.

அடிப்படைக்கும், வெளிப்பகுதிக்கும் இடையில் நிறைய இடம் இருக்கிறது. ஒருவருடைய, தேர்ந்தெடுக்கும் வாய்ப்புக்கான சுதந்திரத்திற்கு நிறைய இடம் இருக்கிறது. விழிப்புணர்வு கொண்டவர் சரியானதைத் தேர்ந்தெடுப்பார். அறியாமை இருளில் ஆழ்ந்து கிடப்பவர், தலை விதியை நோக்கி மிதந்து சென்று, வருவதை ஏற்பார்.

அதனால், வாழ்வில் மூன்று பிரதேசங்கள் இருக்கின்றன. அடிப்படை மையப் பிரதேசத்தில் எல்லாம் முன் கூட்டித் திட்டமிடப்படுகின்றன. இதை அறிவதே, சோதிடத்தின் சாரத்தை அறிவது. மேலோட்டமான வெளிப் பிரதேசம் நிச்சயமற்ற அம்சங்கள் கொண்டது. இதை அறிவது, நிச்சயமற்ற தினசரி வாழ்வை அறிவதாகும்.

இன்னொரு பிரதேசம் மத்தியில் இருப்பது. இதை அறிவதன் மூலம், ஒருவர், ஆகாத காரியம் செய்ய முயல்வதிலிருந்தும் விடுபட்டு, சாத்தியப்படும் காரியங்கள் செய்ய முற்பட முடியும். வெளிவட்டப் பிரதேசத்திலும், நடுப் பகுதியிலும் சரியாக வாழ்ந்தால், அவர் நடுமையம் நோக்கி நகர்வார். பிறகு சமயத்தன்மை கொண்டவர்

ஆவார். மையம் நோக்கி நகர முடியாத முறையில் வாழ்ந்தால், சமயத்தன்மை அற்றவராகவே வாழ நேரும்.

சான்றாக, ஒருவன் திருடத் தயாராகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். திருட்டு, அவன் விதிப்படி முன் தீர்மானிக் கப்பட்டதன்று. அது தவிர்க்க முடியாததோ, இன்றியமையாததோ அன்று. திருடவோ, திருடாமல் இருக்கவோ, ஒருவனுக்குப் பரிபூரண சுதந்திரம் உண்டு.

திருட்டு நடந்து விட்டாலோ, ஒரு காலைத் தூக்கி விட்டது போல் ஆகும். ஒற்றைக் காலில் நிற்கும் நிலை வந்து விடுகிறது. ஒரு கால் பூமியைச் சார்ந்து நிற்கும் நிலைக்கு வந்து விடுகிறது. செய்த காரியத்தைச் செய்யாததாக ஆக்க ஒரு வழியும் இல்லை. நிகழ்ந்து விட்டதை ரத்து செய்ய முடியாது. திருட்டுச் செயலின் முழுப் பாதிப்பும் செய்தவனின் குணத்தின் மேல் பரவி மூடிக் கொள்கிறது. திருட்டு நிகழாதவரை, அடுத்த மாற்று, அகப்படும் விதத்தில் தயாராக இருக்கிறது.

உண்டு, இல்லை, சரி, தவறுகளுக்கு இடையில் மனம் ஊசலாடிக் கொண்டே இருக்கிறது. திருட்டுச் செயலுக்கு ஒருவன் 'சரி' சொன்னால், அவன் வெளி வட்டத்தை நோக்கித் தூக்கி எறியப்படுகிறான். தவறு, அல்லது முடியாது என்றால், அவன் மையத்தை நோக்கி நகர ஆரம்பித்து விடுவான்.

இவ்வாறாக, நடுப்பிரதேசத்தில், வாய்ப்பிற்கு இடமிருக்கிறது. தவறானதைத் தேர்ந்தெடுத்தால் வெளிப்பகுதி நோக்கி வீசி எறியப்படுவான். சரியானதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் மையப் பிரதேசம் நோக்கி நகரத் தொடங்குவான்; வாழ்வின் இன்றியமையாத சோதிடத்தின் பகுதியை நோக்கி நகர்வான்.

தவிர்க்க முடியாத சோதிடத் தன்மை பற்றி சில விஷயங்களைச் சொன்னேன். கதிரவனின் நீட்டிய கரங்கள் நாம்; கதிரவனின் குழந்தை பூமி; பூமியின் மக்கள் நாம்; நாம் தனித்தில்லை; எல்லாவற்றோடும் பிணைக்கப்பட்டிருக்கிறோம், என்றும் குறிப்பிட்டேன்.

கதிரவனிலிருந்து நீண்டு வளர்ந்த கிளைகளும், இலைகளும் நாம். கதிரவனில் என்ன நிகழ்ந்தாலும், அந்த அதிர்வுகளை நமது இருப்பிற்குள்ளும் பரவிப் பாதிக்கும். ஒவ்வொரு நரம்பிலும், செல்லிலும் ஊடுருவும்.

இதைச் சரியாகப் புரிந்து கொண்டால், உலகம் ஒரே குடும்பம் என்பதை உணரலாம். ஆணவத்திற்குள்ளும் பெருமைக்குள்ளும் சிறைப்பட்டுக் கிடக்க வேண்டிய அவசியமே இல்லை.

சோதிடத்தின் பலமான அடி, ஆணவத்தின் மீது தான் விழுகின்றது. சோதிடம் சரியானது என்றால், ஆணவம் தவறானது தான். இதை இன்னொரு வகையில் புரிந்து கொள்வோம்.

சோதிடம் தவறானது என்றால், அப்புறம் எதுவுமே சரியில்லை; ஆணவத்தைத் தவிர, என்று ஆகி விடும். சோதிடம் சரியானது என்றால், உலகம் சரியானது; நான் தனித் தீவு என்பது தவறானது.

நான் வெறும் அற்பம். உலகின் தூசு. கணக்கில் எடுத்துக் கொள்ள முடியாத அளவுக்கு அற்பம். சோதிடம் சரியானது என்றால், நானே அங்கு இல்லை. மாபெரும் சக்திப் பிரவாகத்தில், நானொரு சிற்றலை மட்டுமே.

ஒரு பேரலை மீது நாம் நீந்தும் போது, நம்மை நாம் பெருமையாக, உயர்வாக நினைத்துக் கொள்கிறோம். பெரிய அலையை மறந்தே போகிறோம். அந்தப் பேரலை, மாபெரும் கடல் மேல் உருவாகி வீசுவதையும் மறந்து விடுகிறோம். கிழே, கடல் காணாமற் போனால், அலையும் இல்லாமற் போய் விடும். நாமும் இல்லாமற் போய் விடுவோம்.

காரணமில்லாமல், நாம் காணாமற் போவது பற்றிக் கவலைப் படுவோம். நமக்குத் தனி இருப்பு இருக்கின்றது என்ற நம்பிக்கையின் அடிப்படையில், நாம் மகிழ்ச்சியடையத் திட்டமிட்டிருப்பதால்தான், அந்தக் கவலை ஏற்படுகிறது.

இருப்பதெல்லாம் மாபெரும் கடல்; ஒரே பேரலை; நம் விருப்பத்தால் அல்லாமல், கடலின் விருப்பத்தால் நாம் மேலுயர்ந்தோம், கடல் விரும்பினால் நாம் சாவோம்... என்பது புரிந்தால் நல்லது.

பிரபஞ்சத்தின் மாபெரும் வடிவமைப்பில், நாம் ஒரு சிறு பகுதி, என்பதை நாம் உணர்ந்து விட்டால், அப்புறம் கவலைக்கே இடமில்லை. அந்த மனோபாவம் ஏற்பட்டு விட்டால், நாம் எதை மகிழ்ச்சி என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமோ, அந்தப் போலி மகிழ்ச்சியும் இல்லாமற் போய் விடும்.

'நான் வென்றேன்; நான் சாதித்து விட்டேன்,' என்னும் எண்ணங்களால் ஏற்படும் மகிழ்ச்சியும் இல்லாமற் போகும். 'நான் சாகப் போகிறேன்; நான் தொலைந்தேன்,' என்ற துயர எண்ணங்களும் இல்லாமற் போகும்.

இன்பமும், துன்பமும் இல்லாத போது, நாம் எதார்த்த உலகில் பிரவேசித்து விடுவோம்; இன்றியமையாத அம்சத்தை நெருங்கி விடுவோம். அங்கே பரவசம் மட்டுமே இருக்கும். அப்போது, சோதிடம், பரவச நிலைக்கான வாயில் ஆகி விடும்.

சோதிடம் நம் பெருமையைக் கரைப்பது, ஆணவத்தைத் தகர்ப்பது என்பதை நாம் கண்டு கொண்டால், அப்போது சோதிடம், சமயம் ஆகி விடும்.

ஆனால், நாம் சாதாரண சோதிடரிடம் சென்று, ''நான் நஷ்டமடைந்து விடுவேனா? லாட்டரியில் பரிசு விழுமா? புதிய வியாபாரத்தில் லாபம் கிடைக்குமா?'' என்றெல்லாம் கேட்கிறோம்.

அந்த வினாக்கள் எல்லாம் நமது ஆணவத்தைத் திருப்திப் படுத்துவதற்காகவே கேட்கப் படுகின்றன. ஆனால், சோதிடமோ, ஆணவத்திற்கு எதிராக நிற்கிறது.

சோதிடத்தின் முக்கியத்துவம் இது தான். 'நீ இல்லை. பிரபஞ்சம் இருக்கிறது. நீ இல்லை. உலகம் இருக்கிறது. மாபெரும் சக்திகள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அதில் நீ அற்பம்.'

இந்த வெளிச்சத்தில் தான் சோதிடத்தைப் பார்க்க வேண்டும். இந்தப் பூமியின் உள்ளார்ந்த உறுப்பு நாம் என்பதை உணர வேண்டும். சூரிய குடும்பம் முழுவதும் கதிரவனோடு இணைக்கப்பட்டிருக்கிறது என்று, நான் சொன்னது இதனால்தான். இதை உணர்ந்தால், நமது கதிரவன், பிரபஞ்ச வெளியில் உள்ள, பல மாபெரும் கதிரவன்களோடு, தொடர்பு கொண்டு, பிணைப்புண்டு கிடப்பதை அறியலாம்.

நானூறு கோடிச் சூரியன்கள் இருப்பதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அவை எல்லாமே, ஒரு மகா சூரியனிலிருந்து உதித்தவை என்றும் கூறுகிறார்கள். அந்த மகா சூரியன் எங்கிருக்கிறது என்று நமக்குத் தெரியாது. நமது பூமி தனது அச்சில், தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, அதே சமயம் கதிரவனையும் எவ்வாறு சுற்றி வருகிறது என்பதும் நமக்குத் தெரியாது. நமது சூரிய குடும்பமே,

கதிரவனை மையமாகக் கொண்டு சுற்றிக் கொண்டிருப்பதும் எவ்வாறு என்பது நமக்குத் தெரியாது.

ஒரு மாபெரும் 'பிரபஞ்சக் குடை ராட்டினம்' சுற்றிக் கொண்டே இருக்கிறது!

இந்துக் கோயில்களில், கருவறையைச் சுற்றி ஒரு பிரகாரம் இருக்கிறது. இந்த உள் சுற்று நடைபாதை, ஒரு குறியீடு. எல்லாமே தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, வேறு எதையோ ஒன்றைக் கொண்டிருக்கிறது, என்பதைச் சுட்டும் குறியீடு.

இந்த இரண்டும் ஒன்றாக மூன்றாவது ஒன்றைச் சுற்றிக் கொண்டிருக்கிறது.

இந்த மூன்றும் சேர்ந்து நான்காவது ஒன்றைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. இப்படியே சுழற்சி விரிவடைந்து கொண்டே போகிறது, என்றென்றும்...

எல்லையற்றதன் இறுதி மையத்தை உணர்ந்தவர்கள் அதை, 'பரிபூரண எதார்த்தம்' அல்லது 'பிரம்மம்' என்கிறார்கள். அந்த இறுதி மையம் சுழல்வதும் இல்லை, இன்னொன்றைச் சுற்றுவதும் இல்லை.

தன்னைச் சுற்றிக் கொள்வது எதுவும், இன்னொன்றையும் சுற்றி வரும். தன்னைச் சுற்றாமையும், மற்றொன்றைச் சுற்றி வராமையும் கொண்டது இறுதி எதார்த்தம். அது தான் பரிபூரண மௌனம், அல்லது சூன்யம். இந்த அச்சை மையமாகக் கொண்டே, பிரபஞ்சங்கள் விரிவடைகின்றன; சுருங்குகின்றன.

மொக்கு மலராகிறது. அந்த மலர் வாடி உதிர்கிறது. அது போலவே, பிரபஞ்சம் விரிவடைந்து, உடைந்து சிதறுகின்றது. நமக்கு இரவு பகல் இருப்பது போலவே, பிரபஞ்சத்திற்கும் இரவு பகல் உண்டு, என்று இந்துக்கள் நினைத்தார்கள்.

நான் முன்பு குறிப்பிட்டது போல, பதினோரு ஆண்டுகளுக்கு ஒரு முறை, தொண்ணூறு ஆண்டுகளுக்கு ஒரு முறை திரும்பத் திரும்ப நிகழும் சுழற்சி இருந்து வருகின்றது. அதே போல, ஒரு லட்சம் கோடி ஆண்டுகளுக்கு ஒரு முறையும், ஒரு லட்சம் கோடி கோடியாண்டுகளுக்கு ஒரு முறையும் வரும் சுழற்சிகளும் உண்டு, என்று இந்துக்கள் நினைத்தார்கள்.

அப்படிப்பட்டதொரு சுழற்சியின் போது தான் பிரபஞ்சம் பிறந்தது; வளர்ந்தது. அப்புறம் முதுமையடைகிறது. இதில் பூமி

பிறந்தது; விண்மீன்களும், நிலாக்களும் பிரபஞ்ச வெளியில் பரவின. பூமியில் மனிதர்கள் தோன்றினார்கள், பெருகினார்கள்; கோடிக் கணக்கான புழுப் பூச்சி பிராணிகளும் பிறந்தன.

இந்த உயிரின் தோற்றம் பூமியின் மீது மட்டுமல்ல. உயிர்கள் வாழும் கிரகங்கள், பிரபஞ்ச வெளியில் குறைந்தது ஐம்பதினாயிரம் இருக்கும் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். குறைந்த பட்சக் கணக்கு இது. அதிகமாகவும் இருக்கலாம்.

எல்லையற்ற இந்தப் பிரபஞ்ச வெளியில், ஒன்றில் மட்டுமே உயிர்கள் இருப்பது சாத்தியமில்லை. ஐம்பதினாயிரம் கிரகங்களிலோ, பூமிகளிலோ உயிர்கள் இருக்க வேண்டும். இது எல்லையற்ற பெருவெளியாயிற்றே!

அப்புறம், எல்லாமே சுருங்க ஆரம்பிக்கும்!

ஆரம்பத்தில் பூமி இருக்கவில்லை. இறுதி வரை இது இருக்கவும் முடியாது! நான் பிறந்தேன்; வளர்ந்தேன்; இறுதியில் இல்லாமற் போவேன். பூமியும், கதிரவனும் அப்படித்தான், பிறகு இல்லாமற் போகும்.

விண்மீன்களும், கிரகங்களும் இல்லாமற் போகும் காலம் ஒன்று வரும். அவற்றின் வாழ்க்கைச் சுழற்சி, தொடர்ந்து இருந்து கொண்டே இருக்காது.

தன்னைத் தானே சுற்றிக் கொண்டும், கதிரவனைச் சுற்றிக் கொண்டும் இருக்கும் பூமியில் நாம் மிகச் சிறிய புள்ளி; அற்பம். இப்படியிருந்தும், நாம் தனி, என்று நினைத்தால், முல்லா நஸ்ருதீன் செய்தது போல் ஆகிவிடுவோம்...

முல்லா நஸ்ருதீன் விமானத்தில் ஏறினார். விமானம் கிளம்பியது. அது பறக்க ஆரம்பித்ததும், முல்லா, இருக்கையை விட்டு எழுந்து, இருபக்க இருக்கைகளுக்கு நடுவிலிருந்த நடைபாதையில் வேகமாக நடக்க ஆரம்பித்தார்!

எங்காவது அவசரமாகப் போக வேண்டியிருந்தால், அவர் அப்படித்தான் வேகமாக நடப்பது வழக்கம். இப்போது, விமானத்திலும் நடக்க ஆரம்பித்து விட்டார்.

சக பிரயாணிகள் அவரை விசாரித்தார்கள்.

''எனக்கு ரொம்ப அவசரம்,'' என்றார் முல்லா!

அவர் அப்போதுதான் முதன் முதலாக விமானத்தில் பறக்கிறார். தரையில் செய்த அதே காரியத்தை, தரையின் தர்க்கத்தை விமானத்திலும் கடைப் பிடித்தார். அப்படி நடப்பதால் பயனில்லை, சீக்கிரம் போய்ச் சேர்ந்து விட முடியாது என்பது அவருக்குத் தெரியவில்லை.

விமானம் தரையிறங்கி, அவர் சேர வேண்டிய இடத்தை அடைந்த போது, அவரால் நிற்கக் கூட முடியவில்லை! அவ்வளவு களைப்பு!

கண்களை மூடிக் கொண்டு ஓய்வெடுக்க வேண்டியதாயிற்று.

இதை விமானத்தில் செய்திருக்க வேண்டும். விமானம் புறப்பட்டதும், இருக்கையில் சாய்ந்து கொண்டு கண்களை மூடி ஓய்வெடுத்திருக்க வேண்டும்.

சொன்னால் கேட்டிருப்பாரா? அவர் மட்டும் அல்ல, எந்தப் பண்டிதர்களும், அம்மாதிரி அறிவுரையைக் காதில் போட்டுக் கொள்ளவே மாட்டார்கள்.

இந்தப் பிரபஞ்ச இயக்கத்தில், பூமியின் சுழற்சியில், யார் ஓய்வாக, நிம்மதியாக, இருக்கிறாரோ, அவரே சமயப் பண்டு மிக்க மனிதர் என்று நான் சொல்வேன்.

பிரபஞ்சம் இடையறாமல் இயங்கிக் கொண்டிருக்கிறது, அவசரப்படத் தேவையே இல்லை, அவசரப்பட்டுப் பயனும் இல்லை, என்பதை அறிந்தவரே, சமயப் பண்பு கொண்டவர்.

பிரபஞ்ச இயக்கத்தோடு, ஒன்றிணைந்து, ஒத்திசைந்து போனால் போதும் - அதுவே பரவசம்.

சோதிடம் பற்றிச் சிலவற்றைச் சொன்னேன்.

அவற்றி நீங்கள் விளங்கிக் கொண்டால், ஆன்மப் பேற்றிற்கு சோதிடம் வாயில் ஆகும்.

